# கல்கி

வைரவிழா ஆண்டு

KALKI 26.5.2002
ரூ. 6.00





## ஹய்! நீயா ரொம்ப அழகு!

+2 தேர்வில் வெற்றி பெற்ற மாணவிகளுக்கு எங்களின் நெஞ்சார்ந்த வாழ்த்துக்கள்!

# அருள்மிகு அகிலாண்டேஸ்வரி மகளிர் கல்லூரி



வந்தவாசி - திண்டிவனம் சாலை, வந்தவாசி - 604 408.
திருவண்ணாமலை Dt. ✆ : 04183 - 26298 / 25713
*சென்னை பல்கலைக்கழக அங்கீகாரம் பெற்றது.*
*G.O. Ms. NO.586 Dt. 21.07.95*

**சேர்க்கை அறிக்கை : 2002 - 2003**

கீழ்க்கண்ட இளநிலை மற்றும் முதுநிலை பட்ட வகுப்புகளுக்கு விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

**நன்கொடை இல்லை.**

| இளநிலை பட்ட வகுப்புகள் | பயிற்சி கட்டணம் | முதுநிலை பட்ட வகுப்புகள் | பயிற்சி கட்டணம் |
|---|---|---|---|
| 1. B.Sc., Bio-chemistry | 10,000 | 1. M.Sc., Bio-chemistry | 28,800 |
| 2. B.Sc., Microbiology | 10,000 | 2. M.Sc., Applied Microbiology | 28,800 |
| 3. B.Sc., Computer Science | 15,000 | 3. * M.Sc., Information Technology | 28,800 |
| 4. B.Sc., Nutrition & Dietetics | 7,500 | 4. * M.Sc., Bio-informatics | 28,800 |
| 5. B.C.A. | 15,000 | | |
| 6. B.Com. | 6,000 | | |
| 7. * B.Sc., Maths | 7,500 | • பல்கலைக்கழக அனுமதிக்காக | |

முதன்மை மொழி : தமிழ் / தெலுங்கு / ஹிந்தி பயிற்றுவிக்கப்படுகிறது.

கல்லூரி அலுவலகத்தில் ரூ.90/- ஐ நேரிடையாக செலுத்தி விண்ணப்பத்தினைப் பெறலாம். அல்லது ரூ.105/-ஐ **முதல்வர், ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி மகளிர் கல்லூரி** எனும் பெயருக்கு வரைவோலையாக (D.D.) அனுப்பி தபால் மூலமும் விண்ணப்பத்தினை பெற்றுக் கொள்ளலாம்.

ஒவ்வொரு பாட வகுப்பிற்கும் தனித்தனியாக பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பங்கள் +2 / இளமறிவியல் தேர்வு முடிவுகள் அறிவிக்கப்பட்ட 10 நாட்களுக்குள் வந்து சேர வேண்டும்.

**கல்லூரியின் தனிச்சிறப்புகள் :**

1. அண்ணா பல்கலைக்கழகம் மற்றும் என்மாஸ் நிறுவனமும் இணைந்து நடத்தும் AU-ITEC மையம் உள்ளது.
2. Accounts பாடம் கணினி மூலம் பயிற்றுவிக்கப்படுகின்றது.
3. கல்லூரி வெளி நேரங்களில் ஆங்கிலம் பேசுவதற்குண்டான வகுப்புகள் நடத்தப்படுகின்றன.
4. அனுபவமும், தகுதியும், திறமையும் வாய்ந்த பேராசிரியைகள் பயிற்றுவிக்கின்றனர்.
5. ஒழுக்கமும், திறமையும், தன்னம்பிக்கையும் நிறைந்த மாணாக்கியர்களை உருவாக்குவதே இதன் முக்கிய நோக்கம்.
6. கல்லூரி பேருந்து வசதி உள்ளது.
7. நவீன ஆய்வுக்கூட வசதி பெற்றது.
8. தங்கும் விடுதி வசதி உள்ளது.
9. அதிக நூல்களைப் பெற்றுள்ள வசதியான நூலகம் உள்ளது.

***சுவாமி அபேதானந்தா கல்வி அறக்கட்டளை - வந்தவாசி.***

**திரு.B. முனிரத்தினம்,**
சேர்மன்

**Dr.சாவித்ரி தேவராஜ்.**
முதல்வர்



# இலக்கிய (அரசியல்) வாதிகள்!

**எச்சரிக்கை!**
**கட்சி அரசியலைவிட சூடாக இருக்கும்!**

ஒரு பெட்டிக்கடை வைத்திருப்பவன்
மருந்துக்கடை வைத்திருப்பவன்
ஜவுளிக்கடை வைத்திருப்பவன்
கவிதை எழுதினால் ஏற்றுக்
கொள்கிறார்கள். ஆனால்
சினிமாவுக்குப் பாட்டெழுதுபவனை
மட்டும் கவிஞனாக ஏற்க
மறுக்கிறார்கள்.

*– சுகிர்தராணி கவிதை நூல் வெளியீட்டு விழாவில் நா. முத்துக்குமார்*

எப்படி திருக்குறள், நாலடியார்
முதலானவை இலக்கியங்களாகக்
கொள்ளப்பட்டாலும் கவிதைகளாகக்
கொள்ளத் தயக்கமாக இருக்கிறதோ
அப்படியொரு நிலை விக்கியின்
கவிதைகளுக்கும் உண்டு.

*– விக்ரமாதித்யன் கவிதைகள் பற்றி ஞானக்கூத்தன்*

கிரீடங்களோடும் சிம்மாசனங்களோடும் வந்து உட்கார்ந்திருப்பவர்களால் சற்று நேரம் பொறுத்திருக்க முடியாது. அத்தனை பாரங்களோடு உட்கார்ந்திருப்பது சாத்தியமில்லை.

*– நூல் வெளியீட்டு விழா ஒன்றில் இடையே வெளியேறிச் சென்றுவிட்ட ஞானக்கூத்தன் பற்றி அழகிய பெரியவன்.*

'இன்றைக்குப் பத்திரிகைகளில் எழுதினால் நிறைய சம்பாதிக்கலாம் என்ற நிலை இருக்கிறது. இந்தியா டுடேவில் ஒரு கவிதைக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கிறார்கள். இம்மாதிரி பத்திரிகைகளில் எழுதினால் நல்ல சம்பாத்யம்தான்."

*– காவ்யா வட்ட விமர்சன அரங்கில் பழமலய்*

● "அப்படியொரு நிலை இல்லை. உங்களுடைய ஒரு கவிதையைப் பிரசுரித்துவிட்டு அந்தத் தொகையைக் கொடுப்பார்கள். மாதத்தில் நான்கு வாரமும் உங்கள் கவிதையைப் பிரசுரித்தால்தான் நான்காயிரம் ரூபாயாவது கிடைக்கும். அப்படி பிரசுரிப்பார்களா? மாத நாவல், வார நாவல் எழுதுகிறவர்கள் மட்டுமே பத்திரிகைகளில் எழுதி சம்பாதிக்க முடியும். உங்களைப் போன்றும் என்னைப் போன்றும் எழுதுகிறவர்களால் நிச்சயம் சம்பாதிக்க முடியாது."

*– ஞானி*

"கலாசாரம் என்பது இடையறாது நடந்து கொண்டிருக்கும் அகவயமான தகவல் பரிமாற்றம். இது செயல்களாக, பொருட்களாக புறத்தே வெளிப்படுத்தப்படுகிறது. மொகலாயர் கால ஓவியங்கள், நாயக்கர் கட்டிட கலை, மேலை நாட்டு இசை என்பவை சில உதாரணங்கள். தமிழ்க் கலாசாரம் என்ற சொல்லாடலும் இப்படிப்பட்டதுதான்."

*– திண்ணை. காமில் மாலன்*

● "என் கலாசாரத்தின் உண்மையான பின்புலம் குமரிமாவட்டம். அடுத்த பின்புலம் கேரளமும் தமிழ்நாடும். அடுத்த பின்புலம் இந்தியா. உலகமே என் பின்புலமாகும். ஒன்று இன்னொன்றிலிருந்து முளைக்கிறது. நாராயண குருவின் தொடர்ச்சியை எப்படி என்னுள் உணர்கிறேனோ அப்படியே டால்ஸ்டாயையும் உணர்கிறேன். மனித கலாசாரம், தமிழ்க்கலாசாரம், கேரள கலாசாரம், குமரிமாவட்ட கலாசாரம் என்பவற்றுள் எந்த முரண்பாடும் என்னளவில் இல்லை.

*– ஜெயமோகன்*



இச் சூழ்நிலையில், எமது கட்சிக்கார ரிடம் மன்னிப்பு கோரும்படியும் அதனை அடுத்து வரும் கல்கி இதழில் உரிய முக்கியத் துவம் அளித்துப் பிரசுரிக்கும்படியும் தெரிவிக்கிறோம்.

மேலும் கசப்புணர்வுக்கு இடமளிக்கா மல், யோசித்து மாற்று நடவடிக்கை எடுக்க உங்களுக்குப் பதினைந்து நாள் அவகாசம் வழங்கப்படுகிறது.

டி.ஆர். ராஜாராமன்,
டி.ஆர். ராஜகோபாலன்
(வழக்கறிஞர்கள்)

*5, லா சேம்பர்ஸ்,*
*உயர்நீதிமன்ற வளாகம்,*
*சென்னை - 600 104.*

# மாறனின் மனவருத்தம்!

எமது கட்சிக்காரர் திரு.முரசொலி மாறன் (மத்திய அரசின் மாண்புமிகு தொழில்-வர்த்தகத் துறை அமைச்சர்) அறிவுறுத்திய முறையில் இந்த நோட்டீஸ் அனுப்பப்படுகிறது.

கல்கி 12.05.2002 இதழின் 2, 3ம் பக்கங் களில், 'சீறுகிறார் செங்கோட்டையன்' என்ற தலைப்பில் வெளியான கட்டுரை பொதுமக் கள் பார்வையில் எங்கள் கட்சிக்காரரின் நற் பெயருக்குக் களங்கம் விளைவிக்கும் நோக் கில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. குறிப்பாக கல்கி இதழில் இத்தகையதொரு கட்டுரை வெளியாகியிருப்பது, மிக அதிக அளவில் வேதனை, துன்பம், மனச் சித்தரவதை மற் றும் அதிர்ச்சியை உண்டாக்கியிருக்கிறது.

சட்டசபையில் திரு பொன்னையன் கூறியதற்கு எமது கட்சிக்காரர் விடுத்த மறுப்பு குறித்து, தமிழ்நாட்டின் முன்னணி பத்திரிகை என்கிற முறையில் உங்களுக்குத் தெரியாமல் இருக்க முடியாது. கல்கியில் பிர சுரமாகியுள்ள விஷயங்கள் எமது கட்சிக்கார ரின் நற்பெயருக்குக் களங்கம் விளைவிக்கும் என்பதை நீங்கள் அறியாமல் இருக்கவும் முடியாது. எனவே, மேற்படி பிரசுரம், பொது மக்கள் பார்வையில் எமது கட்சிக்காரரின் நற்பெயரைக் களங்கப்படுத்தும் நோக்குடன் தான் வெளியிடப்பட்டுள்ளது.

**பொதுவாகவே பேட்டி காணப்படு கிறவரின் கருத்துக்களை பத்திரிகையின் கருத்து என்பதாக எடுத்துக் கொள்ளக் கூடாது. 12.05.2002 கல்கி இதழில் செங்கோட்டையன் கூறியுள்ள கருத்துக்கள் கல்கி பத்திரிகையின் கருத்துக்கள் அல்லவே அல்ல. இந்த விஷயத்தில் கல்கி பத்திரிகையின் கருத்து என்ன என்பது கல்கி, ஏப்ரல் 21, 2002 இதழ் தலையங் கத்தில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. செங்கோட்டையனின் கருத்துக்கள் இப் பத்திரிகையில் இடம் பெற்றதில் எங்களுக்கு உள்நோக்கம் ஏதும் கிடையாது. இந்தப் பேட்டி யின் விளைவாக முரசொலி மாறனின் நற்பெயருக்குக் களங்கம் ஏதும் ஏற்பட்டிருக்குமானால் அதற்காக வருந்துகிறோம்.**

**- ஆசிரியர்**

# GOKULAM

**JUNE 2002**

*The monthly magazine for children*

**DO NOT DISAPPOINT YOUR CHILDREN!**
**BUY THEM A COPY TODAY!**



## GOKULAM GO (ES) KARTING

**- an exciting report on the gala event conducted by Gokulam**

## Resurgence of Ancient Medicine

*- insight column featuring Ayurveda*



**Single copy Rs.6/-  Six issues Rs.36/-  Twelve issues Rs.72/**

Fill in this form and send it along with a DD / MO in favour of Gokulam. Outstation cheques not accepted.

**THE CIRCULATION MANAGER**
**GOKULAM**
(English)
**47, JAWAHARLAL NEHRU ROAD,**
**EKKADUTHANGAL,**
**CHENNAI - 600 097.**

**Name :** ..............................................
..............................................
**Address :** ..............................................
..............................................
..............................................
**Pincode :** ..............................................
**Amount :**
**Period :**







ஆத்தாடி...
107, 108, 109ன்னு வெயிலு
எகிறிட்டுப் போவுது.
மண்டை உச்சில இறங்குற வெயிலு
உள்ளங்காலு வரைக்கும் வந்து தீப்பிடிக்குது.
இந்த நேரத்துல சும்மா 'ஜில்'லுனு
படம் காட்லாமேன்னுதான்
இந்தப்பக்கம்.

# ஆ... ஜில்!



இது போன்ற ஒரு நூல் இது வரையில் வெளியானது இல்லை.

# அருந்தொண்டு ஆற்றிய தமிழக அந்தணர்கள்

## முன் பதிவுத் திட்டம்

❖ 2500 ஆண்டுகளாகத் தொடர்ந்து தொண்டு செய்து வந்துள்ள அந்தணர்கள் பற்றிய முதலாவது நூல்.

❖ தமிழக பிராமணர்கள் சமுதாயத்திற்கு ஆற்றியுள்ள பணிகள் எவை? மக்களின் முன்னேற்றத்திற்காக அவர்கள் உழைத்த வரலாறுகள் எத்தகையவை? - இந்த ஒப்பற்ற நூல் பதில்களைத் தருகிறது.

அறிவியல், அரசுப்பணி, அரிஜன நலம், அவதானக் கலை, அரசியல், ஆட்சித்துறை, இசை, இராணுவம், எழுத்துத் துறை, கல்வி, கதாகாலட்சேபக் கலை, கணிதம், கால்நடை மருத்துவம், சமயம், சட்டம், சம்ஸ்கிருத இலக்கியம், சரித்திர ஆய்வு, சமுதாய நலம், சான்று பெற்ற பொதுத் துறை, தில்லை வாழ் அந்தணர் பெருமை, தொல்பொருள் ஆய்வு, தொழில் முறை, தொழிற்சங்கத் துறை, நாடகத்துறை, நுண் கலைகள், பஜனை பத்ததிகள், பதிப்பகத் துறை, பத்திரிகைத் துறை, புவியியல், பொறியியல் துறை, பொருளாதாரம், மருத்துவம், மகளிர் தொண்டு, மும்பையின் வளர்ச்சி, வங்கித் துறை, விடுதலை இயக்கம், விளையாட்டுகள், விவசாயம் முதலிய எல்லாத் துறைகளிலும் பெரும் சேவை புரிந்துள்ள தமிழ்நாட்டு பிராமணர்களின் வாழ்க்கைப் பணிகளும், சாதனைகளும் அடங்கியது இந்த மாபெரும் நூல்.

❖ உலகப் புகழ் பெற்ற நரம்பியல் மருத்துவ மேதை டாக்டர். திரு. பி.ராமமூர்த்தி (தலைவர்) முதுபெரும் பத்திரிகையாளர் - கலைமாமணி - கபிலவாணர் - திரு.கே.சி. லட்சுமி நாராயணன் (இணைத்தலைவர் & பிரதம ஆசிரியர்) தமிழ்நாடு பிராமணச் சங்கத் தலைவர், தாம்ப்ராஸ் பவுண்டேஷன் தலைவர் திரு. என். நாராயணன், (செயலாளர்) உள்ளிட்ட பெருமக்கள் அடங்கிய குழு, இந்த ஈடு இணையற்ற நூலை தயாரித்துள்ளது.

நான்கு தொகுதிகளாக வெளி வருகிறது. ஒவ்வொரு தொகுதியும் 650-க்கு மேற்பட்ட பக்கங்கள் கொண்டது. மொத்தம் 2600 பக்கங்களுக்கு அதிகமானது. (தெர்மல் பர்ஃபெக்ட் பைண்டிங் கொண்ட உயர்தரமான அச்சில்)

ஒரு தொகுதியின் விலை ரூ.300/-. நான்கு தொகுதிகளுக்கும் முன் பதிவு விலை ரூ.1000/- மட்டுமே. உடனடியாக ரூ.1000/- மணியார்டர் அல்லது சென்னையில் மாற்றக்கூடியD.D மூலம் (TAMBRAS HERITAGE PROJECT) என்ற பெயருக்கு கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பிப் பதிவு செய்து கொள்ளக் கோருகிறோம். வெளிநாடுகளில் வாழ்கின்றவர்கள் 50 US டாலர் அனுப்ப வேண்டும்.

திரு. கே.சி. லட்சுமி நாராயணன் (இணைத்தலைவர் & பிரதம ஆசிரியர்)

தாம்ப்ராஸ் ஹெரிடேஜ் புராஜக்ட்,
நெ.1076, 19வது மெயின் ரோடு, அண்ணா நகர் மேற்கு,
சென்னை-600040. இந்தியா, டெலிபோன் : 044 6267904
E-mail : brahminheritageproject@hotmail.com

ஒவ்வொரு தமிழரும் படித்துப் பாதுகாத்து வைக்க வேண்டிய பொக்கிஷம் இந்தச் சீரிய நூல்

ADVT

# கோட்டையில் ஓட்டை!



● கேபினட் கூட்டங்களில் பேசப்படும் செய்திகள் உட்பட, தலைமைச் செயலக விவகாரங்கள் அறிவாலயம் பக்கம் லீக்காகிறது என்று ஆளும் கட்சிப் பிரமுகர்கள் சந்தேகிக்கிறார்கள். சமீபத்தில் சேது சமுத்திர திட்டத்தை விரைவு படுத்த வேண்டி, பிரதமருக்கு முதல்வர் கடிதம் எழுதுவதாக முடிவாயிற்று. அதற்கான தகவல்கள் சேகரிக்கப்பட்டன. ஆனால் முதல்வர் கடிதம் தயாராவதற்குள், கலைஞர், அந்தத் திட்டத்தைச் செயல்படுத்தக் கோரி, பிரதமருக்கு நீண்ட கடிதம் எழுதி விட்டார். அதைக் கேள்விப்பட்ட முதல்வருக்கு ஷாக். அதிகாரிகளை வாங்கி விட்டாராம். கலைஞரின் கடிதத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட வைகோவும் உடனடியாக பிரதமரிடம் நேரம் கேட்டு அவரைச் சந்தித்து “தன்னை இந்த விஷயத்தில் யாரும் பின்தள்ள முடியாது” என்று அவர் பங்குக்கு ஒரு கடிதம் கொடுத்தார். இந்த மூன்று பேரும் ஒரு சேர இணைந்து பிரதமரை வலியுறுத்தினால், திட்டம் விரைவாக முடிந்து விடுமே! பகல் கனவு?

● ''இடைத் தேர்தல்களில் வழக்கம் போல அதிகார துஷ்பிரயோகம், மற்றும் போலீஸின் துணையை நம்பித்தான் ஆளும் கட்சி நிற்கிறது'' என்று சொல்கிறார்கள் தி.மு.க பிரமுகர்கள். சைதை தொகுதியில் வட்டவாரியாக முக்கிய தி.மு.க பிரமுகர்கள் பட்டியல் போலீஸால் எடுக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் மீது ஏதாவது வழக்குகள் பதிவாகியிருக்கிறதா என்றும் பார்க்கிறார்களாம். அவர்களில் யாரை வாக்குச்சாவடி ஏஜெண்டுகளாகப் போட்டாலும் வழக்கைக் காண்பித்து அவர்களை முடங்கச் செய்வது ஏற்பாடாம். இவ்வாறு சொல்லும் தி.மு.க பிரமுகர்கள் ''வாக்குச்சாவடி ஏஜெண்ட் யார் என்பதை கூடிய மட்டும் ரகசியமாக வைத்துக் கொள்ள முடிவு செய்திருக்கிறார்கள். ஆனால் மிரட்டியும் வழிக்கு வராத தி.மு.க ஏஜெண்டுகளுக்கு 'நோட்டுக் கட்டு'களைக் காண்பித்து சபலம் உண்டாக்கும் வேலையும் நடத்தப்படுமாம். இதற்காக அ.தி.மு.க மகளிர் அணியினர், தி.மு.க பிரமுகர்கள் குடும்பத்துப் பெண்மணிகளைத் தொடர்பு கொண்டு காரியத்தை முடிப்பார்களாம்.



● 'சர்க்கஸ் ரிங் மாஸ்டர்' போல அதிகாரிகளை வேலை வாங்குவதாக முதல்வர் சொன்னது மற்றும் ஐ.பி.எஸ் அதிகாரிகளுக்கு அரசு காட்டும் கரிசனம் ஆகியவற்றால் எரிச்சலில் இருக்கிறார்கள் ஐ.ஏ.எஸ் அதிகாரிகள் ''அதிகாரிகளை முழுதாக நம்ப வேண்டாம்; குறைந்த பட்சம் அவர்கள் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்கலாமல்லவா'' என்று குறைப்பட்டுக் கொள்கிறார் ஒரு பழுத்த அதிகாரி. ''ஐ.ஏ.எஸ் அதிகாரிகள் கொடுத்த புகார்கள் அடிப்படையில் தான் உட்பட அ.தி.மு.க பிரமுகர்கள் மீது வழக்குகள் முந்தைய தி.மு.க ஆட்சியில் தொடரப்பட்டதால், அவர்கள் மீது வருத்தமாம். ''ஆட்சியில் இருப்பவர்களுக்கு அடி பணிவது தவிர அவர்களுக்கு வேறு என்ன தெரியும்?'' என்றும் உயர்மட்டத்தில் கமெண்ட் அடிக்கப்படுகிறதாம். 'அரசுக்கு முதுகெலும்பு போன்றவர்கள் ஐ.ஏ.எஸ் அதிகாரிகள். அவர்கள் உற்சாகமாக வேலை செய்யும் சூழலை உருவாக்க வேண்டும்; அதை விட்டு விட்டு சங்கடத்தை உண்டாக்கும் வகையில் பேசினால் அதனால் ஏற்படும் பாதிப்பு அரசுக்கே' என்றார் அந்த அதிகாரி.

— சஞ்சயன்

அமைச்சர் வளர்மதி முயன்று பார்த்தார் – சிட்லபாக்கம் ராஜேந்திரன், கொட்டைக்காடு மூர்த்தி, பொலம்பாக்கம் ராஜா கிருஷ்ணமூர்த்தி, இளையரானி குமாரசாமி, இவர்களில் ஒருவருக்கு ஸீட் வாங்கிக் கொடுக்கலாம் என்று அம்மாவிடம் முட்டி மோதிப் பார்த்தார். ஆனால் லக்கி பிரைஸ் அடித்தது பொலம்பாக்கம் பூவராகவ மூர்த்திக்கு.

தொகுதி முழுக்கவும் மனிதருக்கு நல்ல பெயர் இல்லை. குறிப்பாக போலீஸ் வட்டாரத்தில். காரணம் சில மாதங்கள் முன்பு பக்கத்து வீட்டில் இருந்த, ஓய்வு பெற்ற காவலர் ஒருவரை நன்றாக 'கவனித்து' விட்டாராம் பூமூர்த்தி. அவரது சொந்த ஊரான பொலம்பாக்கத்திலேயே அ.தி.மு.க.வைச் சேர்ந்த ஐந்து பேர் போட்டி வேட்பாளர்களாக களத்தில் இருக்கிறார்கள்! இருந்தும் பஞ்ச தந்திரங்களையும் பயன்படுத்தி வெற்றி பெற்று விடுவோம் என்று நம்பிக்கையோடு சொல்கிறார்கள் அ.தி.மு.க.வினர்.


• பூவராகமூர்த்தி


• பார்வேந்தன்

தொகுதியில் மொத்தம் 163 வாக்குச் சாவடிகள். பத்து வாக்குச் சாவடிக்கு ஒரு அமைச்சர் வீதம் பொறுப்பு கொடுத்திருக்கிறார்கள். அமைச்சர்கள் டாட்டா ஸுமோவிலும், குவாலிஸிலும் கிராமங்களைச் சுற்றி சுற்றி வருகிறார்கள். "ஐயா... குடி தண்ணீர் பிரச்னைங்க." "அப்படியா சேதி.." அமைச்சர் செல்போனில் யாரையோ விரட்ட, டாங்கர் லாரி விரைகிறது கிராமத்துக்கு. "பஸ் வசதியே இல்லீங்க... எதாவது பண்ணுங்க" என்று இரும்பிலி கிராமத்து மக்கள் முறையிட, அடுத்த நாளிலிருந்து அந்த கிராமம் வழியாக சென்னைக்கு பஸ்! யார் யாருக்கு என்னென்ன தேவையோ.. எல்லாம் ஓ.கே. ஆகிறது. தேர்தல் விதிமுறைகள், கட்டுப்பாடுகள், காற்றில் பறக்கின்றன. அதிகாரிகள் அமைச்சர்களுடன் ஆலவட்டம் போடுகிறார்கள்.

அம்மாவின் மூன்று நாள் தொகுதி விஜயம் மாஜிக்கை நிகழ்த்தும் என்று காத்திருக்கிறார்கள், ரத்தத்தின் ரத்தங்கள். "தாங்கள் தோல்வியடையப் போவதை இப்போதே உணர்ந்து அராஜகம், அதிகார துஷ்பிரயோகம் என்று இப்போதே புலம்பத் துவங்கிவிட்டது எதிரணி" என்கிறார் பூமூர்த்தி.

எதிரணி ஆட்களைக் கவிழ்க்கும் வேலையையும் நடக்கிறது. மறைந்த பா.ம.க. எம்.எல்.ஏ. செல்வராஜின் மனைவி கிருஷ்ணவேணியை அ.தி.மு.க.வில் சேர்க்க அமைச்சர்கள் எடுத்த முயற்சி தற்காலிகமாக தோல்வியடைந்தாலும் தொடர்ந்து நடக்கிறது முயற்சி.



கிட்டத்தட்ட 75000 தாழ்த்தப்பட்ட வாக்

# கல்யாணப் பரிசு கிடைக்குமா?

காளர்களில் 50,000 வோட்டுக்களைப் பெற்றாலும் வெற்றி பெற்று விடலாம் என்ற கணக்கில் அமைச்சர்களின் யுக்தி அமைகிறது. தேர்தல் வேலைகளில் அனுபவம் வாய்ந்த பா.ம.க., தி.மு.க.வைச் சேர்ந்த சிலரை குண்டர்கள் சட்டத்தில் தூக்கி உள்ளே போடவும் ஏற்பாடுகள் நடக்கின்றன.

இவற்றையெல்லாம் எதிர்கொள்ளும் வகையில் பா.ம.க. தரப்பு ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை. கிராமத்துச் சுவர்களில் இலையைத் தவிர வேறு எந்த சின்னமும் இல்லை. அ.தி.மு.க.வின் துணி பேனர்களும் கொடி தோரணங்களும்தான் எல்லா இடங்களிலும்.



• எல்லப்பன்



• ராதா



• சுப்பராயன்



• தாஸ்

• மூர்த்தி



• கன்னியம்மாள்



''டாக்டர் ஐயா... லோக்கல் கேண்டிடேட்டைப் போட்டிருக்கலாம்'' என்று வன்னியர் சொந்தங்கள் சொல்கிறார்கள். இப்போது போடப்பட்டுள்ள பார்வேந்தன் வழக்கறிஞர். ஆறு மாதங்களுக்கு முன் வரை பூவை மூர்த்தியன் புரட்சி பாரதத்தில் இருந்தவர். காஞ்சிபுரத்தில் கோர்ட், கச்சேரி என்று பார்த்துக் கொண்டு ஒரு பக்கம் கட்டைப் பஞ்சாயத்தையும் கவனித்துக் கொள்வார். என்று தொகுதியில் பேச்சு இருக்கிறது. மிகத் தாமதமாக இவர் பெயரை டாக்டர் அறிவித்ததால் தேர்தல் வேலைகளைத் துவக்குவதில் பின்தங்கி இருக்கிறது பா.ம.க. இருந்தும் 50,000 வன்னிய வாக்காளர்களை நம்பி களத்தில் நிற்கிறது.

''இந்தத் தொகுதியில் உள்ள ஒவ்வொரு கிராமத்திலும் எங்கள் பாராளுமன்ற உறுப்பினர் மூர்த்தி, அவரது தொகுதி நிதியிலிருந்து ஏதாவது ஒரு நலப்பணி செய்திருக்கிறார் அதனால் அவருக்கு நல்ல பெயர். இது தவிர, மறைந்த எங்கள் எம்.எல்.ஏ. செல்வராஜ் நேர்மையான ஆசாமி. அவர் பெற்றிருக்கும் நல்ல பெயர் இப்போதும் மாம்பழத்துக்கு வாக்கு வங்கியைக் கொண்டு சேர்க்கும்'' என்று உறுதியாகச் சொல்கிறார் பார்வேந்தன்.

எதிர்பார்த்ததற்கு மாறாக தி.மு.க. உடன்பிறப்புகளிடமிருந்து நல்ல ஒத்துழைப்பு கிடைப்பதாக பா.ம.கவினர் சொல்கிறார்கள். சமீபத்தில் மரக்காணம் பகுதியில் பா.ம.க. தொண்டர்களுக்கும், காலனி மக்களுக்குமிடையே நடந்த மோதலில் தொகுதியின் கடற்கரையோர கிராமங்களில் பா.ம.க. வோட்டு வாங்குவது என்பது கடினமாகத்தான் இருக்கும். அன்புமணியும், ஏ.கே. மூர்த்தியும், தொகுதியில் உள்ள வன்னிய கிராமங்களைச் சுற்றி வந்து, சொந்தங்களைப் புதுப்பித்துக் கொண்டிருக்கிறார்கள். ''ஜெயித்தால் என்னுடைய முதல் வேலை எல்லா மக்களுக்கும் மூன்று சென்ட் பட்டா வாங்கித் தருவதுதான்'' என்கிறார் பார்வேந்தன்.

வாக்குப் பதிவு அன்று ஆளும் கட்சி அராஜகத்தைக் கட்டவிழ்த்து விடக் கூடும் என்ற அடிப்படையில் அதைச் சமாளிக்க பா.ம.க., தி.மு.க. திட்டங்கள் தயாராகின்றன.

இந்த இரு பலமான வேட்பாளர்களுக்கு மத்தியில் மாட்டிக் கொண்டிருக்கிறார் வலது கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளரான பி.எஸ். எல்லப்பன். இவர் மண்ணின் மைந்தர். பெருங்கருணை ஊர்க்காரர். வசதியான தோழர். முட்டி, முனகி ஒரு மூன்றாவது அணியை உருவாக்க முடியாத நிலையில் களத்தில் நிராதராவாக நிற்கிறார் எல்லப்பன். இவருக்காக, தொகுதியில் ஓரளவுக்குச் செல்வாக்குடைய திருமாவளவன் பிரசாரம் செய்கிறார். கழகங்களின் மீதுள்ள வெறுப்பு, பா.ம.க.வின் பல்டி அரசியல் ஆகியவற்றை வெறுக்கும் மக்கள் தனக்கு வோட்டுப் போடுவார்கள் என்று சொல்கிறார் எல்லப்பன். ஆனால் மக்களிடையே தேர்தல் பற்றிய உற்சாகம் இல்லை.



• ஏழுமலை

கிராமப் புற வாக்காளர்களைக் கொண்ட தொகுதி இது. தேசிய நெடுஞ்சாலையில் இருபுறமும் பரவிக் கிடக்கிறது. கிராமங்களில் எல்லாம் ஒன்றுக்குள் ஒன்று மாமன், மச்சானாக இருப்பதால், கட்சி ரீதியாக அவர்களைப் பிரிந்து மோத விட முடியாது. எனவே வாக்குப் பதிவு அன்று அராஜகம் தலைதூக்க வாய்ப்பில்லை என்றும் சொல்கிறார்கள். "ஆனால் தாழ்த்தப்பட்ட மக்களை வோட்டுச் சாவடிக்கு வரவிடாமல் விரட்டியடிக்கும் வேலையும் நடக்கும்" என்கிறார்கள் மாவட்ட அதிகாரிகள்.

பா.ம.க. வேட்பாளர் பார்வேந்தனுக்கு வாக்கு எண்ணிக்கை நடக்கும் ஜூன் இரண்டாம் தேதிதான் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. சட்டமன்ற உறுப்பினர் பொறுப்பு திருமணப் பரிசாக அமையுமா?

## மக்கள் குரல்!

**ஏழுமலை,** *கீழ் மருவத்தூர் :*

"தி.மு.க. ஆட்சியில்தாங்க ஊருக்கு ரேஷன் கடை வந்தது. கான்கிரீட் ரோடு போட்டாங்க. குடிநீர் வசதி, களத்துமேட்டுக்கு சிமெண்ட் தரை என்று கலைஞர் ஆட்சியில் பல வசதி நம்ம ஊருக்கு வந்தது. இவுங்க வந்து ஒரு வருஷம்தானே ஆகுது. பொறுத்திருந்து பார்க்கணும் இலைக்காரங்க வோட்டு கேட்டுட்டு போயிருக்காங்க. இப்ப ஒண்ணும் சொல்ல முடியாதுங்க."

**மூர்த்தி,** *ஊனமலை :*

"ஐம்பது அறுபது வருஷமா போராடி திமுக. ஆட்சியில்தாங்க பட்டா கொடுத்தாங்க. ஹைவேயிலிருந்து கிராமத்துக்குள்ளார மூன்று கி.மீ. ரோடு போட்டதும் அப்போதாங்க. ஒரு பஸ்விடச் சொல்லி கேக்கறோம். நடக்க மாட்டேங்குது. அப்படி இப்படின்னு காலனியில் எல்லாம் கலந்திருக்குதுங்க. வோட்டுப் பணம் வாங்கற பழக்கம் இங்கு இல்லீங்க."

**என்.தாஸ்,** *இரும்பிலி :*

"நெல்லுக்கு சரியா விலையில்லை. பஸ் கட்டணத்தை ஏத்திட்டாங்க... அராஜக ஆட்சி நடக்குதுங்க... இலைக்கு வோட்டு கிடையாதுங்க."

**சுப்பராயன்,** *தல்லாமூர் :*

"யாருக்குத் தம்பி வோட்டு போடச் சொல்லற. போனவாட்டி உதயசூரியன்ல போட்டேன். நமக்கு ஒண்ணும் தெரியலை கண்ணு. நம்ம பசங்க என்ன சொல்றாங்கன்னு தெரியலை."

**கன்னியம்மாள், எல்லம்மாள்,**
*பேரம்பாக்கம் :*

"இத்தினி வருஷம் ஆச்சு குந்திக்க சொந்த மண்ணு இல்லை. கவர்மெண்ட் நெலத்திலே குடிசை போட்டா ஊர்க்காரங்க கேஸ் போட்டுப் பிரிச்சு போட்டுடறாங்க. காட்ல பிறந்து காட்டுலேயே சாகறோம். இந்த சனத்துக்கு வோட்டு குடுத்து என்ன பிரயோசனம் ராசா!"

**உதயம் ராதா,** *சோத்துப்பாக்கம் (மதிமுக) :*

"இந்தத் தொகுதியில் எங்களுக்கும் கணிசமா செல்வாக்கு இருக்கிறது. வன்னியச் சொந்தங்கள் ஒட்டு மொத்தமாக மாம்பழத்துக்குதான் போடுவாங்க. திமுக. எங்களை ஓரங்கட்டப் பார்க்கறாங்க. நாங்க உண்மையா பா.ம.க.வுக்காக உழைப்போம்."

— ப்ரியன்

படங்கள் : வெங்கடேசன்



# SRI CHANDRASEKARENDRA SARASWATHI BHAKTHA JANA TRUST (Regd)

New No.12, Old No. 69, Moorthy Street,
West Mambalam, Chennai-600 033.
Ph: 4748265, 3711971

# லக்ஷதீபம்

**இடம் : ஸ்ரீ அயோத்யா மண்டபம், மேற்கு மாம்பலம்.**
**நாள்: 3.6.2002 திங்கட்கிழமை. நேரம்: மாலை 6 மணி.**

ஸாக்ஷாத் பரமாத்மாவும், கைலாஸபதியும், ஸர்வேஸ்வரர், ஈரேழு புவனச் சக்ரவர்த்தி, கருணாமூர்த்தி, ஸதாப்தி மஹோத்ஸவமூர்த்தி ஸர்வலோக ஜீவராசிகள் உய்யும் பொருட்டு அவதரித்த கலியுகக் கண்கண்ட தெய்வமான ஸ்ரீஸ்ரீஸ்ரீ மஹாபெரியவாளின் பெருங்கருணையினால் பக்த கோடிகளின் பேராதரவோடு 10 வருடங்களாக வைகாசி அனுஷ ஜயந்தி கோலாகலமாக நடைபெற்று வருகின்றது.

தற்பொழுது உள்ள காலதேச வர்த்தமானத்தால் நமது பாரத தேசம் மட்டும் அல்லாது உலகெங்கும் ஏற்பட்டு உள்ள தீவிரவாதங்களும் சத்ரு பயமும் உடனடியாக ஒடுங்கவும், எங்கும் ஜலக் கஷ்டம் நீங்கி ஜலஸமிருத்தி, தனதான்யங்கள் அபிவிருத்தியும், அன்னஸமிருத்தியும், அவரவர்களுக்கு தற்பொழுது ஏற்பட்டுள்ள ருண மற்றும் ரிண விமோசனத்திற்கும், மத நல்லிணக்கம் ஏற்பட்டு ஜனங்களிடையே பரஸ்பர ஒற்றுமை நிலவவும், அனைவருக்கும் அஷ்ட ஐஸ்வர்யங்கள் கிடைக்கப் பெறவும், திருமணமாகாதவர்களுக்கு திருமணத் தடைகள் விலகவும், குழந்தைகள் கல்வி மேன்மை, செய்தொழில் வளர்ச்சி காணவும், மேற்கண்டவற்றை **ஸ்ரீஸ்ரீஸ்ரீ மஹாபெரியவாளின்** பேரனுக்ரஹம் ஒன்றுதான் நிறைவேற்றித்தரும் என்ற உயரிய நோக்கோடு 3.6.2002 திங்கட் கிழமை அன்று மாலை 6 மணிக்கு சென்னை மேற்கு மாம்பலத்தில் அமைந்துள்ள அயோத்யா மண்டபத்தில் **லக்ஷதீபம்** ஏற்ற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் குறைந்தது ஒரு நபராவது இந்த கைங்கர்யத்தில் ஈடுபட்டு காணிக்கையாகவோ அல்லது நல்லெண்ணெய், நெய் போன்றவைகளை சஹாயம் செய்து **ஸ்ரீஸ்ரீஸ்ரீ மஹாபெரியவாளின்** பேரனுக்ரஹம் பெற்று ஸகலக்ஷேமங்களையும் அடைய ப்ரார்த்திக்கிறோம்.

நன்கொடைகள் அனுப்ப வேண்டிய முகவரி: ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி பக்த ஜன ட்ரஸ்ட் (Regd), New No.12, Old No. 69, Moorthy Street, West Mambalam, Chennai-600 033.

நன்கொடைக்கு வருமான வரி விலக்கு உண்டு.

சுபம்

# கல்கி வைரவிழா
# தமாஷ் ஹைகூ
# கவிதைப் போட்டி!

தமாஷ் ஹைகூன்னாலும் சும்மா தமாஷுக்கு எழுதிப் போட முடியாதுங்க!

*பாசாங்கில்லாத, உருவகம், உவமையில்லாத நேரடிக் கவிதை... வருணனை, கட்டுப்போட்டாலும் கிடையாது. பிலாசபி போதனை எல்லாம் இல்லை. ஒரு படிமம் அல்லது ஒன்றுடன் ஒன்று உதவும் இரண்டு படிமங்கள். அத்தனைதான். அதிலிருந்து இணைத்து எழும் எண்ணங்கள் வாசகன்பாடு!*

- ஹைகூவுக்குச் சுஜாதா வரைந்துள்ள இலக்கணம் இது. பாரம்பரிய ஜப்பானிய மூன்று வரி ஹைகூக்கள் இப்படித்தான் இருக்கும்.

● போட்டிக்கு நீங்கள் அனுப்பும் ஹைகூவும் இப்படித்தான் இருக்க வேண்டும். ஆனால், எண்ணங்களுடன் கூடவே சிரிப்பையும் ஏற்படுத்த வேண்டும். பின்னே முதல் பரிசு ரூ.1000/- என்றால் சும்மாவா! இரண்டாம் (ரூ.750/-), மூன்றாம் (ரூ.500/-), ஆறுதல் பரிசுகளும் (ரூ.250/-) உண்டு.

● சொந்தக் கற்பனை என்பதற்கான உறுதி மொழியுடன் கவிதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.

● ஒருவர் பல கவிதைகள் அனுப்பலாம். தேர்வாகாதவற்றைத் திருப்பியனுப்ப போதுமான தபால் தலைகள் இணைக்க வேண்டும்.

● முடிவு வெளியாகும்வரை கடிதப் போக்குவரத்து, தொலைபேசி விசாரிப்புகள் கூடாது.

● உறையின் மேல் **'அமரர் கல்கி நினைவு ஹைகூ கவிதைப் போட்டி 2002'** என்று கட்டாயம் குறிப்பிட்டு

**ஆசிரியர் - கல்கி**
**47, ஜவஹர்லால் நேரு சாலை,**
**சென்னை - 97**

என்ற முகவரிக்கு அனுப்புங்கள். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

நடுவர்கள் நிச்சயிக்கும் போட்டி முடிவும் பரிசுக் கவிதையும் ஆகஸ்ட் 4 ஆண்டு மலரில் வெளியாகும்.

பரிசுகள் கல்கி வைர விழா நிகழ்ச்சி மேடையில் ஆகஸ்ட் 4, 2002 அன்று வழங்கப்படும்.

**கல்கி** வைரவிழா சிறுகதைப் போட்டியும் உண்டு! விவரம் அடுத்த இதழில்



ஐயோ..!
அநியாயம்!
அக்கிரமம்....
பாம்பை
உள்ளே விடறாரு...



2002 மே 26
சித்ரபானு வைகாசி 12
மலர் : 60
இதழ் : 43

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## தலைதூக்கும் ஹிந்து பயங்கரவாதம்!

குஜராத் கலவரத்தின் ஆரம்பம் என்ன என்பதை அறியும்போது அதிர்ச்சியுடன் வேதனையும் ஏற்படுகிறது.

கோத்ரா ரயில் நிலைய சம்பவம் என்பது ஒரு சதித்திட்டத்தின் திரியில் வைக்கப்பட்ட தீப்பொறிதான். குஜராத்தில் ஹிந்து – முஸ்லிம் ஒற்றுமையை உண்டு இல்லை என்று பண்ணிவிட ஒரு மாபெரும் வஞ்சக திட்டம் ஆறு மாதங்களுக்கு முன்னதாகவே தீட்டப்பட்டது என்பதற்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன.

**Concerned Citizens Tribunal** என்ற நடுவர்மன்றக் குழு ஒன்று நீதிபதி வி.ஆர்.கிருஷ்ணய்யர் தலைமையில் இயங்கி குஜராத் குறித்த உண்மைகளைச் சேகரித்திருக்கிறது.

இந்நடுவர் மன்றத்தின் இடைக்கால அறிக்கை (இறுதி அறிக்கை ஆகஸ்ட் மத்தியில் வெளியாகும்), மோடி முதல்வராகப் பதவியேற்ற நாள் முதலாக குஜராத்தில் சிறுபான்மையினருக்கு எதிரான நடவடிக்கைகள் தொடங்கிவிட்டதற்கான ஆதாரங்களைச் சேகரித்திருக்கிறது. கலவரங்களால் பாதிக்கப்பட்டவர்கள் வழங்கிய சாட்சியங்களின் அடிப்படையில்




தயாரிக்கப்பட்ட அறிக்கை இது. கோத்ரா நிகழ்வுக்கு முன் வி.எச்.பி., பஜ்ரங்தள் நடவடிக்கைகளால் வெறுத்துப் போய் அவ்வமைப்புகளிலிருந்து வெளியேறிய சிலரும் இந்த நடுவர் மன்றத்துக்கு சாட்சியங்களை வழங்கியிருக்கிறார்கள். குஜராத் அரசு அதிகாரிகளும் காவல்துறை அதிகாரிகளும் நடுவர் மன்றத்தின் விசாரணையில் பதில் கூறியிருக்கிறார்கள்.

சிறுபான்மையினர் வாழ்கிற பகுதிகள், அவர்கள் நடத்தும் கடைகள், வர்த்தக அமைப்புகள் குறித்துத் தகவல்கள் சேகரிப்பது, அவ்விடங்களைக் குறி வைத்துத் தாக்க தன்னார்வப் படைகளை உருவாக்குவது, அவர்களை ஆயுதம் ஏந்தவும் உபயோகிக்கவும் பழக்குவது என்று திட்டமிட்ட பயங்கரவாத நடவடிக்கைகள் ரகசியமாக அரங்கேறியிருப்பதற்கான ஆதாரங்களைச் சமர்ப்பித்திருக்கிறது நடுவர் குழு.

குஜராத் முதல்வர் இந்த நடுவர் மன்றத்தின் முன் தோன்ற மறுத்ததுடன் அதன் அறிக்கையை ஏற்கவும் மறுத்திருக்கிறார். மத்திய அரசும் இதுவரை இந்த நடுவர் மன்றக் குழுவின் இடைக்கால அறிக்கை பற்றி எதுவும் கூறவில்லை.

அரசால் நிறுவப்படாத தன்னார்வக் குழு என்பதாலேயே இந் நடுவர் மன்றத்துக்கு அந்தஸ்து இல்லாமல் போய்விடாது. இந்தியாவின் தலைசிறந்த நீதிபதிகள் சிலருடன் அருணா ராய், தனிகா சர்க்கார் போன்ற தன்னலம் கருதாத இயக்கவாதிகளும் கல்வியாளர்களும் இதில் இடம்பெற்றிருக்கிறார்கள்.

இந்த இடைக்கால அறிக்கை நம் நாட்டின் மதச்சார்பின்மையைக் கேள்விக் குறியாக்கியிருக்கிறது என்பது ஒருபுறமிருக்க, மற்றொரு கொடூரமான போக்கையும் சுட்டிக் காட்டுகிறது:

இது நாள்வரையில் இஸ்லாமிய பயங்கரவாதமும் பயங்கரவாதிகளும் உலக அமைதிக்கும் இந்தியாவின் ஒருமைப்பாட்டுக்கும் கேடு விளைவித்து வந்தார்கள்.




இப்போது ஹிந்து பயங்கரவாதம் என்ற புதிய விஷம் உற்பத்தியாக ஆரம்பித்திருக்கிறது. இதுநாள்வரை ஹிந்து அடிப்படைவாதமும் அங்கங்கே ஹிந்து தீவிரவாதமும்தான் நிலவின. இனி ஹிந்து அடிப்படைவாதிகளும் பயங்கரவாதிகளாக மாறி திட்டமிட்ட வன்முறையில் ஈடுபட விதையூன்றப்பட்டிருக்கிறது.

இந்தப் போக்கினால் நாட்டின் இறையாண்மைக்கு ஆபத்து; உலக அமைதிக்கு அச்சுறுத்தல்; ஹிந்து மதத்துக்கும் ஹிந்து தர்மத்துக்குமே பேரபாயம்!

ஆதி சங்கரர் காலத்துக்குப் பிறகு ஹிந்து மதத்தின் மேன்மையை பாரதம் உணர்ந்தது; விவேகானந்தர் காலத்துக்குப் பிறகு உலகமே அதன் பெருமைகளைப் புரிந்து கொண்டது...

பி.ஜே.பி. ஆட்சிக்காலத்துக்குப் பிறகு உலகமே ஹிந்துமதத்திடம் நம்பிக்கையிழந்தது என்ற அபகீர்த்தி சரித்திரத்தில் எழுதப்படலாம் என்கிற நிலை தோன்றியிருக்கிறது.

அவ்வாறு நேராது என்பதற்கு பி.ஜே.பி.யில் வாஜ்பாய் ஒருவரைத்தான் நாம் நம்பிக் கொண்டிருந்தோம். ஆனால் அதுவும் பொய்த்துப் போகின்ற அளவில் நிகழ்ச்சிகள் நடக்கின்றன. பல்வேறு நிர்ப்பந்தங்களால் மோடிக்குக் கவசமாக நிற்கிறார் பிரதமர். அது மட்டுமல்ல, சமீபத்தில் பிரதமரைச் சந்திக்க அனுமதி பெற்றிருந்த பெண்கள் அமைப்புப் பிரதிநிதிகளுக்குத் திடீரென்று அச் சந்திப்பு மறுக்கப்பட்டிருக்கிறது.

சமீப கலவரங்களின்போது குஜராத்தில் பெண்களுக்கு எதிராக நடந்த கொடூரங்களை எடுத்துச் சொல்லவே இச் சந்திப்பு என அறிந்ததுமே பிரதமர் அலுவலகம் அதை ரத்து செய்துவிட்டது. பிரிதொரு நாளும் நேரமும் ஒதுக்க மறுத்தும் விட்டது. தார்மிகப் பொறுப்புகளைத் தட்டிக் கழிக்கும் போக்கு பிரதமரிடம் அதிகரித்து, அவரிடமும் நம்மை நம்பிக்கை இழக்கச் செய்கிறது. ○

# வெட்கத்தைப் பாரு!

''உங்க வீட்டுக்காரர் வெட்கப்பட்டுக்கிட்டு சிரித்த முகமா காட்சி தர்றாரே... ஏன்?''

''இப்ப வந்துட்டுப் போன விருந்தாளிகள், 'சாப்பாடு பிரமாதம்னு' சொல்லிட்டுப் போய்ட்டாங்க, அதுதான்...''

- நாமக்கல் பாலு





''பள்ளிக்கூடப் பருவத்திலேயே உங்க பையனுக்கு அரசியல் வாசம் வந்துடிச்சு!''

''அடடே எப்படி சொல்றீங்க?''

''பத்தாம் வகுப்பு பாஸ் ஆனதுக்கு 'கட்-அவுட்' வைக்கணும்னு சொல்றானே!''

- காழி ஆர்.சீதாராமன்

''கோவிலுக்கு முன்னாடி எதுக்கு ஆர்ப்பாட்டம் பண்றாங்க..?''

''அன்னதானத்துல வாரத்தில் இரண்டு நாள் 'அசைவம்' போடணுமாம்!''

- எம். அருள்மூர்த்தி






''இருபது வருஷ லீஸ்ல வீடு வாடகைக்கு வேணுமாம்.''

''குடியிருக்கவா?''

''மெகா சீரியல் படம் எடுக்க!''

- பர்வதவர்த்தினி

# சூரியனைச் சுற்றுகிறவர்கள்!

ராகு கேது உட்பட ஒன்பது கிரகங்கள் என்பது, பாரம்பரியமான நம்முடைய ஜோதிடக் கணக்கு. அதிலும் சூரியன் சந்திரன் உட்பட்ட நவகிரகங்களுள் பூமியைச் சேர்ப்பதில்லை.

ஆனால் வளர்ந்து வருகிற வானியல் அறிவின்படி, இன்றைய நிலையில், சூரியனைச் சுற்றிச் சுழன்று வருபவை ஒன்பது கிரகங்கள். ஒன்பதாவதான புளூட்டோவைச் சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் கண்டு



பிடித்தார்கள். நம்முடைய கணக்கில் இது 248 ஆண்டுகளில் ஒரு முறை சூரியனைச் சுற்றி வருகிறது. இந்த புளூட்டோவுக்கும் ஒரு சந்திரன் உண்டு. இதன் பெயர் சரோன் என்று வைத்திருக்கிறார்கள்.

யுரானஸ், நெப்ட்டியூன் இரண்டும் பதினேழாம் நூற்றாண்டில்தான் கண்டு பிடிக்கப்பட்டன. அதற்கு முன் இவற்றை வான சாஸ்திரிகள் கவனித்திருக்கமாட்டார்கள் என்று சொல்ல முடியாது. ஒரு வேளை நட்சத்திரங்கள் என்பதாய் எண்ணியிருக்கலாம். நுட்பமான தொலைநோக்கிக்



● ராவல்

கருவிகள் உருவான பிறகுதான் இவற்றை கிரகங்கள் என அறுதியிட்டுக் கூற முடிந்திருக்கிறது.

ஆதிகாலம் தொட்டே, சனி கிரகத்துக்கு மட்டும் வளையம் இருப்பதைக் கவனித்திருக்கிறார்கள். ஒரு வளையமில்லை; இரண்டு வளையங்கள். ஒன்றை அடுத்து ஒன்றாகச் சுழல்கின்றன என்பதை 1675ஆம் ஆண்டில் ஜே.டி.காஸ்ஸினி என்கிற வானியலார் கண்டுபிடித்தார். இப்போது சனியைச் சுற்றி அடுக்கடுக்காக நிறைய வளையங்கள் சுழன்று வருவதையும், பதினைந்துக்கு மேற்பட்ட சந்திரன்கள் சுற்றிவருவதையும் கண்டறிந்திருக்கிறார்கள்.

இப்போது சொல்லப்படுகிற புளூட்டோவுக்கும் அப்பால் சூரிய மண்டலத்தில் பத்தாவதாக ஒரு கிரகம் உண்டா? என்கிற ஆராய்ச்சி முக்கால் நூற்றாண்டுக்கும் மேலாக நடைபெற்று வருகிறது.

அமெரிக்க விண்வெளி ஆய்வுகள் எல்லாம் உறுதி செய்வதற்கு முன்பே, மும்பையிலுள்ள நேரு விண்வெளி அரங்கைச்சேர்ந்த ஜே.ஜே.ராவல் என்பவர், நெப்ட்டியூனுக்கு நான்கு வளையங்களும் இருபது சந்திரன்களும் உண்டு என்று கூறியிருந்தார். வாயேஜர்-2 விண்கலங்கள் இதை உறுதி செய்தன.

இந்த டாக்டர் ராவல்தான் சூரியனைச் சுற்றிப் பத்தாவதாகவும், பதினொன்றாவதாகவும் இரண்டு கிரகங்கள் சுழன்று வருகின்றன என்ற கருத்தை இருபது ஆண்டுகளுக்கு முன்னர் வெளியிட்டார்.

சூரியனிலிருந்து 7,800 மில்லியன் கி.மீ. தொலைவில் பத்தாவதும், 15,000 மில்லியன் கி.மீ. தொலைவில் பதினொன்றாவது கிரகமும் இருப்பதாய் டாக்டர் ராவல் 1978ஆம் ஆண்டில் கண்டறிந்து சொன்னார். ஆனால் நாஸா நிறுவன வானியலார், ராவல் பதினொன்றாவது என்று குறிப்பிட்டதைப் பத்தாவது கிரகமாக இருக்கலாம் என்று ஒப்புக் கொண்டார்கள். எனினும் பத்தாவது கோள் பற்றிக் கூட இன்னும் உறுதி செய்யப்படவில்லை.

சூரிய மண்டலத்தின் எல்லையைப் பற்றிய மனிதர்களின் அறிவு விரிவடைந்து கொண்டே போகிறது.

இந்த இருபத்தோராம் நூற்றாண்டில், புதிய புதிய செய்திகள் உறுதி செய்யப்படலாம். இந்த அறிஞர் டாக்டர் ராவல் இப்போது ஓய்வு பெற்றிருக்கக் கூடும். ஆயினும் பத்தாவது பதினோராவது கிரகங்களுக்கு, வழக்கப்படி ஏதாவது ஒரு கிரேக்க ரோமானியக் கடவுளின் பெயரைச் சூட்டப் போகும் காலத்தில், இந்த பாரத தேசத்து வானியல் அறிஞரின் பெயரையும் சேர்த்துப் பேச வேண்டும்!

— சுப்ர. பாலன்

படங்கள் : நாஸா

**கா**தலில் ஒரு கதவு அடைக்கப்பட்டால் இன்னொரு கதவு திறக்கும் என்பதை, இசையின் துணைகொண்டு யதார்த்தமாகச் சொல்ல முயற்சித்து, வெற்றியும் பெற்றிருக்கிறார் இயக்குனர்.

கைகூடாத முதல் காதல் ஆறிவிடும் காயம்தானே தவிர, அதுவே வாழ்க்கையைக் காவு கேட்கும் காலன் அல்ல என இளைஞர்களுக்குத் தன்னம்பிக்கையூட்டும், குழப்பமில்லாத எளிய இளைஞனாய், இயல்பான நடிப்பில் ஜொலிக்கிறார் சூர்யா. கூடுதல் தகுதியாக இனிய குரலுடன் கூடிய தூய தமிழ் உச்சரிப்பு தனித்துக் காட்டுகிறது அவரை!

லைலாவின் நடிப்பில் கொஞ்சம் சுருதி குறைந்து விட, அழகாய்ச் சிரித்து, அளவாய் நடித்து லைலாவை முந்தி விடுகிறார் சினேகா.

படத்தில் சூர்யா தவிர மற்றொரு ஹீரோ தோட்டாதரணி. பழைய




தங்கும் விடுதி ஒன்றையும், பக்கத்திலேயே தஞ்சைபாணி முற்றமுள்ள ஓட்டு வீடு ஒன்றையும் உருவாக்கியிருக்கும் தரணியின் தரமான கலை இயக்கம், ரசிகனை களத்திற்குள் பிரவேசிக்க வைக்கும் உயிர்ப்போடு இருக்கிறது.

அப்சரா லாட்ஜில் தங்கியிருக்கும் விதவிதமான பாத்திரங்களுக்குப் பிரதான கதையோடு பெரிய தொடர்பு ஒன்றும் இல்லாததால், இயல்பான காமெடி தொலைந்து போய் 'டிராக்' உணர்வை ஏற்படுத்துகிறது. என்றாலும் விரசமில்லாத நகைச்சுவை என்பதால், குடும்பத்தோடு தியேட்டருக்குப் போவோர் நெளிய வேண்டியதில்லை.

சிற்பியின் மெல்லிய மெட்டுக்கள் உள்ளத்தைக் கிள்ளுவதைப் போலவே, பாலசுப்ரமணியத்தின் 'ஜில்' என்ற படப்பிடிப்பு குளுமையூட்டுகிறது.

இரண்டாவது பாதியில் சூர்யா - லைலா காதல் புதுப்பிக்கப்பட, அய்யோ! என்ன இது அபத்தம் என்று இதயம் படபடக்கையில், அந்தப் பதற்றத்தைத் தணிக்கிறது படத்தின் 'நச்' முடிவு.

தனது பாணியிலிருந்து விலகாவிட்டாலும், இந்த முறை யதார்த்தத்தின் விகிதத்தை உயர்த்தியிருப்பதற்காக விக்ரமனைத் தரமான இயக்குனர் என்று தைரியமாய்ச் சொல்லலாம்!

— விஷுவல்தாசன்

● அபவ் ஆவரெஜ்

# கலவர



ஒரு குஜராத்தி போர் வீரர், சண்டையில் அடிபட்டு மருத்துவ மனைக்குக் கொண்டு வரப்பட்டாராம். "போரிட்டதெல்லாம் போதும். எப்போது வீட்டுக்கு அனுப்புவீர்கள்?" என்று அவர் நச்சரித்துக் கொண்டே இருந்தாராம். ஒரு நாள் அவருக்கு இரத்தம் செலுத்த வேண்டியிருந்தது. ஒரு பஞ்சாபியின் இரத்தத்தை அவருக்குச் செலுத்தினார்கள். அடுத்த கணத்திலிருந்து "எப்போது மறுபடி போர் முனைக்கு அனுப்புவீர்கள்?" என்று துளைத்து எடுக்க ஆரம்பித்துவிட்டாராம் அவர்!

- மற்றவர்களிடம் மல்லுக்கு நிற்காத குஜராத்தியர்களின் அமைதி பற்றி இப்படியொரு வேடிக்கை கதை உண்டு. ஆனால் இன்று?...

எண்பது நாட்களுக்குப் பிறகு அகமதாபாத் நகரில் வன்முறை இப்போதுதான் குறைய ஆரம்பித்துள்ளது.

அயல்நாட்டுத் தூதரகங்கள், ஐரோப்பியக் கூட்டமைப்புப் பிரதிநிதிகள், சுற்றுலாத்துறை ஏஜெண்டுகள் என்று எல்லோரும் 'குஜராத் வன்முறை' பற்றிக் குறிப்பிடாமல் இருப்பதில்லை. "இந்தியாவுக்குப் போனால் குஜராத் பக்கம் தலைவைத்துக்கூடப் படுக்காதீர்கள்" என்று அயல்நாட்டுச் சுற்றுலா ஏற்பாடு செய்வோர் அமைப்பு, பயணிகளுக்கு அட்வைஸ் செய்திருக்கிறது.

"சிறுபான்மை இனத்தைச் சேர்ந்த பெண்களுக்குக் கொடுமை இழைத்திருக்கிறார்கள்" என்று அங்கு நேரில் போய் நிலைமையைக் கண்டுவந்த அகில இந்திய ஜனநாயக மாதர் சங்கத் தலைவி பிருந்தா காரத் கூறியிருக்கிறார். எதிர்க் கட்சிகள் எல்லாம் நரேந்திர மோடியை ராஜினாமா செய்யச் சொல்லி வற்புறுத்தி வருகின்றன.

கோத்ரா ரயில் எரிப்புச் சம்பவம் நடந்த பிறகு தொடங்கிய வன்முறைகள், கிட்டத்தட்ட ஆயிரம் பேரைக் காவு கொண்டன.

"விளைவு என்று ஒன்று நிகழ்ந்தால், அதற்கு எதிர்விளைவு நிச்சயம் இருக்கும் என்ற நியூட்டன் தத்துவத்தைத் தாம் சொல்லவே இல்லை" என்கிறார் நரேந்திர மோடி!

"ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் நடத்திய அமைதிப் பேரணியில் நரேந்திர மோடி கலந்து கொண்டதே எங்கள் வெந்த புண்ணில் வேல் பாய்ச்சிய மாதிரி இருந்தது. அவர் கலந்து கொள்ளுவதாக எங்களுக்கு முன் கூட்டியே தெரிந்திருந்தால், நாங்கள் அதில் கலந்து கொண்டிருக்கவே மாட்டோம்!" என்று சிறு பான்மை இனத்தவர் பிறகு கூறிய செய்தியும் வெளியாகிற்று.

தொழிலதிபர்கள் எல்லாம் அரசின் அணுகுமுறை தவறாக இருக்கிறது என்று எடுத்துக் கூறியும்கூட மசிவேனா என்கிறார் மோடி.

"தீவிர ஆர்.எஸ்.எஸ்.காரரான மோடிக்கு, பழி தீர்த்துக் கொள்ளக் கிடைத்த சந்தர்ப்பமே இது" என சிறுபான்மையினர் குற்றம் சாட்டு கின்றனர்.

"நீங்கள் உங்களை சர்தார்பட்டேலின் வாரிசு என்று பெருமையடித்துக் கொள்ளு கிறீர்கள். உங்களை ஹிட்லருடன் அல்லவா எல்லாரும் ஒப்பிடுகிறார்கள்?" என்று ஒரு நிருபர், மோடியைக் கேட்டதற்கு, "ஹிட்லரை வழிபடுபவர்களுக்கு ஹிட்லர்தான் தெரிவார். பட்டேலை நம்புகிறவர்களுக்குப் பட்டேல் நிச்சயம் தெரிவார்" என்று நக்கலான பதிலை அளித்திருக்கிறார் மோடி.

"உதவி முகாம்களில் ஆயிரக் கணக்கில் தங்கியிருக்கும் மக்கள், வீடு திரும்பவே பயப் படுகிறார்களே" என்றால், "காஷ்மீர் பண்டிட்டு களின் குடும்பங்கள் வருடக் கணக்காக உதவி முகாம்களில் தங்கிக் கொண்டிருக்கிறார்கள். மாநில அரசுக்கு எதிராகவோ, மத்திய அர சுக்கு எதிராகவோ அவர்கள் போராட வில்லை. அவர்களின் நிலைமை பற்றி ஏன் இதே நபர்கள் வாய் திறப்பதில்லை?" என்று பதிலடி கொடுக்கிறார் இந்த பலே மோடி!

தினசரிக் கொலைகள் குத்து-வெட்டுக்கள், துப்பாக்கிச் சூடுகள் தொடர்ந்து வருகின்றன. மூன்று இலக்கச் சாவு எண்ணிக்கை இல்லையே தவிர, மரணத் தாலாட்டுகள் தொடர்கின்றன.

"நான் எந்த முகத்துடன் வெளிநாடுகளுக் குச் செல்வேன்?" என்று அகமதாபாத் முகாம் ஒன்றைப் பார்வையிட்ட பிரதமர் சொல்லிய மறுநாளே, கோவாவில் "இந்த நிலைமைக்கு முஸ்லீம் இனத்தவரின் போக்குதான் காரணம்" என்று தமது சுயரூபத்தை வெளிப்படுத்தினார். முதல் நாள் ஓர் அறிக்கை விடுத்தால், அடுத்த நாள் அதற்கு விளக்கம் கொடுக்கிற புது வழக்கத்தை வேறு தொடங்கியிருக்கிறார் பிரதமர்.

உள்துறை அமைச்சர் அத்வானியோ, "நரேந்திர மோடியை வீட்டுக்கு அனுப்பி வைக்கிற எண்ணமே எங்களுக்குக் கிஞ்சித்தும் கிடையாது" என்ற பிரகடனம் செய்யாத குறையாக அறிவிக்கிறார். இந்தக் கோரமான பின்னணியிலேயே, அவசரம் அவசரமாகத் தேர்தலை நடத்தி முடித்துவிட இவர்கள் முயன்றதுதான் இன்னும் கொடுமை. நல்ல வேளை, யார் நல்ல புத்தி சொன்னார்களோ, அதைக் கைவிட்டார்கள். நரேந்திர மோடியை விரட்டச் சொல்லியதில், வெற்றி பெறாத எதிர்க் கட்சிகளுக்கு, 'தேர்தல் இப்போது கிடையாது' என்று அறிவிக்க வைத்ததில் ஒரு சின்ன வெற்றி என்றுகூடச் சொல்லலாம்.

போலீஸ் கமிஷனர் பாண்டேயைத் தூக்கிவிட்டு கௌஷிக்கை நியமித்திருக்கிறார் கள். அடுத்த படியில் உள்ள காவல் துறை யினரையும் மாற்றி இருக்கிறார்கள். ஆனால் மாற்றங்கள் செய்யப்பட்ட அன்றே பயங்கரக் கலவரம்!

'சூப்பர் காப்' என்ற பயங்கர இமேஜுடன் பஞ்சாபிலிருந்து கே.பி.எஸ்.கில் வந்தும் உட னடியாக நிலைமையில் ஏதும் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நிகழவில்லை. மாறாக அதிகரித் தது. தீயணைப்புப் படையினரே வன்முறைக் கும்பலால் தாக்கப்பட்டார்கள். அவர்கள் ஒட்டுமொத்தமாக வேலை நிறுத்தம் செய்ய, பிறகு அவர்களைச் சமாதானப்படுத்த வேண்டி வந்தது!

அகமதாபாத் நகரில், நாரான்புரா பகுதி யில், வசிக்கும் தமிழர் கோபாலகிருஷ்ணன் சொன்னார் :

"லால் தர்வாஜா, தீன் தர்வாஜா, ஜமால்பூர், கான்பூர், கோம்திபுர், வேஜால்பூர் போன்ற பகுதிகளில்தான் கலவரங்களும், வன்முறை களும் நடக்கின்றன. நகரின் விரிவுப் பகுதி யான நவ்ரங்புரா, நாரான்புரா போன்ற குடியிருப்புப் பகுதிகளில் எந்தப் பிரச்னையும் இல்லை. இங்கே பக்கத்தில் இருக்கிற பிரக்ருதி நகர், விஜய் நகர் எல்லாம்கூட அமைதியாகத் தான் இருக்கிறது. ஆனால் நகரின் மையப் பகுதியில் நிலைமை மோசம். இப்படி-அப்படி

"ரவுடி ராமு உங்களைப் பார்க்க வந்திருக்கான், தலைவரே!"

"என்னவாம்!"

"கட்சில ரவுடி அணின்னு ஒண்ணு உருவாக்கி, அவனைத் தலைவனாப் போடணுமாம்!"

- திருப்புலிவனம் அறிவழகன்

என்று சொல்ல முடியாமல் 'அன்-பிரிடிக்டபிள்' என்பார்களே, அந்த மாதிரி இருக்கிறது நிலைமை. அலுவலகங்கள், வணிக நிறுவனங்கள் நிறைந்துள்ள ஆசிரம் ரோடு, ரிலீஃப் ரோடு பகுதிகள் எல்லாம் ஊரடங்கு உத்தரவுக்குக் கீழ் வந்திருக்கின்றன."

இவர் 40 வருடங்களாக அகமதாபாத்வாசி. "இருபது வருடங்களுக்கு முன் கலவரம் வந்தபோதுகூட, சில தினங்களில் நிலைமை சீரானது உண்டு. இந்த முறை அப்படி இல்லை. பீதியில் வாழ்கிறோம்" என்கிறார்.

சர்தார் படேல் காலனிவாசியான வேணு என்பவரும் நீண்ட கால அகமதாபாத்வாசி.

"எங்கள் பகுதிகளில், அடுத்துள்ள பாங்க் ஆஃப் இந்தியா காலனி - எங்குமே பிரச்னை இல்லை. காய்கறிகள் எல்லாமும் கிடைக்கின்றன. ஆனால் விலை ஏறிவிடும் என்கிற அச்சம் இருக்கிறது. பால்டி என்ற இடத்தில் ஒரு சிறிய பகுதிதான் பாதிக்கப்பட்டிருக்கிறது. சிறுபான்மையினர் அதிகமாகப் புழங்கும் பகுதிகளில் மட்டுமே குழப்பமான நிலைமை நிலவி வருகிறது" என்கிறார்.

கான்பூர் பகுதியில் அலுவலகம் உள்ளவர்களில் ஒருவர் தனியார் துறை உயர் அதிகாரியான காப்டன் பஜாஜ்.

"இந்த இரண்டு - மூன்று மாதங்களாகவே பிஸினஸ் இந்தப் பகுதியில் பாதிக்கப்பட்டிருக்கிறது. தினமும் அலுவலகம் திறந்தால், பன்னிரண்டு மணி அல்லது ஒரு மணி வரை பிரச்னை ஏதுமில்லை என்றால் வேலைகளைப் பார்ப்போம். அருகில் உள்ள காவல் நிலையத்தில் உள்ள இன்ஸ்பெக்டரிடம் ஃபோனில் தொடர்பு கொண்டு, நிலைமையின் தீவிரம் அறிந்து அலுவலகத்தை மூடிவிடுவது உண்டு." என்கிறார் இவர்.

"உங்களால் தொடர்ந்து பயணங்கள் செல்ல முடிகிறதா?"



"மொத்தமாக 'குஜராத் கலவரம், குஜராத் வன்முறை' என்று சொன்னாலும், வன்முறை அகமதாபாதின் மையப் பகுதிகளிலும், பரோடாவிலும் மட்டுமேதான். வேறு எந்த நகரமும் பாதிக்கப்படவில்லை. அதனால் டூர் போவது பாதிக்கப்படவில்லை. போகும் இடங்களிலும் பிரச்னைகள் ஏதும் இல்லை. மற்ற இடங்களில் வங்கிகளும் ஒழுங்காகவே நடக்கின்றன. இங்கே அப்படி இல்லை. தினசரி நிலைமையைப் பொறுத்தே அலுவலகங்களும், வங்கிகளும் செயல்படுகின்றன."

"கலவரத்தில் யார் பங்கு அதிகம்...?"

"ஒரு தரப்பு சீண்டினால் இன்னொரு தரப்பு திருப்பி அடிக்கிறது. இத்தனை வருடங்களாக நண்பர்கள் போலப் பழகிவந்த இரு தரப்பினரும், மாறிய நிலைகளை எப்படி எடுத்துக் கொள்ளுகிறார்கள் என்பது புதிராகத்தான் இருக்கிறது. கத்திக் குத்திலும், துப்பாக்கிச் சூட்டிலும் பெரும்பான்மையினரும் நிறையவே மரணம் அடைந்திருக்கிறார்கள். ஆனால் சிறுபான்மையினரின் சாவு எண்ணிக்கை கணிசமாக இருப்பதால், இதை யாரும் குறிப்பிட்டுச் சொல்லுவதில்லை. பொதுவாகவே இங்கே காஷ்மீர் ஆட்கள் உள்ளே புகுந்து கலவரத்தைத் தங்கள் கையில் எடுத்துக் கொண்டு அதன் போக்கை நிர்ணயிக்கிறார்களோ என்று சந்தேகம் நிலவி வருகிறது. இல்லை என்றால் பாகிஸ்தான் கொடியைச் சில பகுதிகளில் ஏற்றி வைத்து, பெரும்பான்மையினரை ஏன் உசுப்பிவிட வேண்டும்? உள்ளூர் ஆட்கள் மட்டுமே விரோதம் முற்றிப் போய்க் கலவரத்தில் ஈடுபட்டு வருகிறார்கள் என்று முடிவாகச் சொல்ல முடியாது. மீடியாவும் நடுநிலையோடு செய்திகளையும் படங்களையும், நிகழ்ச்சிகளையும் வெளியிடுவதில்லை என்பேன்."

"பொதுவாக மக்களின் மனநிலை எப்படி இருக்கிறது?"

"சகஜ வாழ்க்கையும், பிஸினஸும் பாதிக்கப்பட்ட நிலையில், எப்போது நிலைமை சீராகும் என்றே பெரும்பாலான மக்கள் ஏங்குகிறார்கள். போதும் போதும் என்றாகிவிட்டது அவர்களுக்கு. ஆனால் இது அரசியல் சார்ந்த விஷயமாக இருப்பதால், என்று, எப்போது, யாரால் பழையபடி அமைதி திரும்பும் என்று சொல்ல முடியாத நிலைமை இருக்கிறது!"

**வா**ழ்க்கையில் அவ்வப்போது போராட்டங்களைச் சந்திக்க வேண்டியிருக்கும் என்பார்கள். வாழ்க்கையே போராட்டமாக மாறிப் போய்விட்ட அகமதாபாத் நகர மக்களுக்கு நாம் என்ன சொல்வது?

**— சாருகேசி**

# பாலகுமாரன்



கோடிக்கணக்கான
பணம் நடமாடற
இடம். பணம்
நடமாடற
இடத்துல
சந்தோஷம்
இருக்காது.
சந்தேகம்தான்
இருக்கும்.

# மனம் உருகுதே... 1



நிலம் முழுவதும் நீரால் மறைக்கப்பட்டு வானத்திலுள்ள கருமேகங்கள் நீரில் பிரதிபலித்து அந்த வெட்ட வெளியைக் கறுப்பாய், குளுமையாய் மாற்றிக் கொண்டிருந்தன. அந்தக் குளுமையைக் கூதற்காற்று அதிகப்படுத்தியது. ஒரு பறவை ஒரு பிராணி கூட வெளியே தெரியாமல் முடங்கிக்கிடந்த அந்த மழைநாளில் தாவரங்கள் மட்டும் தண்ணீர் உறிஞ்சி மிக ஆனந்தமாக தலையாட்டிக் கொண்டிருந்தன.

ஊர் முழுவதும் மழையை நிந்தித்துக் கொண்டிருக்க, தாவரங்கள் மட்டும் இன்னும் கொடு என்பதுபோல் மேகங்களை நோக்கி கை ஏந்திய வண்ணம் இருந்தன. 'வாவா' என்று தலையாட்டி அழைத்தன.

ராதாகிருஷ்ணன் அந்த ஆளுயர கற்பாறை மீது ஏறி நின்றிருந்தார். ஆளுயர கற்பாறையும் நீரில் மறைந்திருந்தது. பாறை ஸ்படிகம்போல் குளிர்ந்திருந்தது.

எது அந்த மலையின் கால் நுனி என்று தெரியவில்லை. ஆனால், இந்தப் பாறையைப் பார்த்தால் ஏதோ பிரமாண்டமான உருவத்தின் வலது கால் கட்டை விரலும் அதற்கு அடுத்த விரலும் போல இருக்கும். வெகு நாள் இருந்ததால் இரண்டும் ஒட்டிக் கொண்டது போல தோற்றமளிக்கும்.

பாறையைப் பார்த்து பயந்து பூமி முழுவதும் பாறையாக இருக்குமோ என்று அங்கங்கே தோண்டிப் பார்க்க, மூன்றடி நான்கடி தூரத்திற்கு வெறும் ஈர மண்ணே இருப்பது தெரிந்து ராதாகிருஷ்ணன் எல்லா காசும் போட்டு ஒன்பது கிரவுண்ட் நிலம் வாங்கினார்.

"ஒரே ஆளால இவ்ளோ நிலம் வாங்க முடியுமா? நிலம் வாங்கறதுக்குன்னு ஒரு தனி அதிர்ஷ்டம் வேணும். தனி ஜாதகம் வேணும். ஆனா, நிலம் வாங்கறபோது பார்த்து வாங்குப்பா. நிலம் வாங்கி நாசமாப் போனவனும், நிலம் வாங்கி உசரத்துக்கு உயர்ந்தவனும் உண்டு. நிலம் வாங்கின நாலாம் நாள்ல, நிலம் தன் யோக்கியதையை காண்பிச்சுடும். நமக்கு

அது ஸ்நேகமா இருக்கா இல்லை துரோகம் பண்ணப் போறதா அப்படின்னு தெள்ளத் தெளிவா தெரிஞ்சுடும்."

யாரோ ஜோசியர் சொல்ல, ராதா கிருஷ்ணன் எந்தவிதச் சலனமுமில்லாமல் கேட்டுக் கொண்டார்.

"கூடப் பத்து ரூபா கொடுத்தனுப்புங்கோ. ஏதாவது பேசி மனசைக் குழப்பிடப் போறார்" மனைவி ரேவதி காதோரம் கிசு கிசுக்க, உரத்துப் பேசிக் கொண்டிருந்த ஜோசியரை காசு கொடுத்து வெளியே அனுப்பினார்.

ஜோசியர் வெளியே போனதும் வெளியேயிருந்த புரோக்கர்கள் உள்ளே நுழைந்தார்கள்.

"இன்னும் ஒரு இடத்துல ஆறு கிரவுண்ட் இருக்குங்க. இன்னும் ஒரு இடத்துல நாலு கிரவுண்ட் இருக்குங்க" என்று அடுக்கினார்கள்.

அவர்களையும் மெல்ல வெளியேற்றினார்.

"வாங்கின இடம் தப்பா. ஏன் இத்தனை பேர் ஓடிவரா? ஜோசியரை நாம கூப்பிடவே இல்லையே. தானா வந்து தானா அறிமுகம் பண்ணிண்டு, நீங்க அங்க நிலம் வாங்கியிருக்கேளா அப்படின்னு சொல்லி இல்லாததும் பொல்லாததும் சொல்றாரே எதுக்காக?"

"பணம் கரக்கறதுக்கு ஒரு ஐடியாதான். அந்த இடம் சுத்திப்பார்க்கறபோது இந்த இடத்துல தண்ணி நன்னாயிருக்கும். இந்த இடம் ரொம்ப சுபிட்சமான இடம். இந்த இடம் தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் போர் நடந்து அமிர்தம் கொட்டின இடம்னு ஏகப்பட்ட பொய் விட்டான். இப்போ வந்து உன்னை நிலம் கவுத்தாலும் கவுத்தும் அப்படிங்கறான். என்ன கவுத்துடும்னா முதல்ல அம்பது ரூபாய் கொடும்பான். அப்போதான் பேசுவேன்னுவான்."

"ஏன். இத்தனை புரோக்கர்ஸ் வரா?"

"நான் என்னமோ ஒட்டுமொத்தமா பெரிய கிரவுண்டா வளைச்சுப் போட்டு துண்டு துண்டா விக்கப்போறேன்னு நினைச்சுண்டிருக்கான்."

"நீங்க அந்த மாதிரி பண்ணப் போறேளா? எதுக்காக ஒன்பது கிரவுண்ட் வாங்கினேள்."

"என்னால இந்த தம்புசெட்டி தெருவுல இருக்க முடியலை. போரும்னு தோன்றது."

"பொறந்ததுலேர்ந்து நீங்க இருந்த இடமில்லையா. இப்போ திடீர்னு போகணும்னு தோணுவானேன்."

"இது பிஸினஸ் சென்ட்டர். கோடிக் கணக்கான பணம் நடமாடற இடம். பணம் நடமாடற இடத்துல சந்தோஷம் இருக்காது. சந்தேகம்தான் இருக்கும். யாரைப் பார்த்து நமஸ்காரம்னு சொன்னாலும் எதுக்கு நமஸ்காரம் சொல்றான் அப்படின்னுதான் உடனே யோசனை வரும். கீழ உட்கார்ந்து ரோடுல பார்த்திருக்கியா. புர்ருனு எங்கயும் இடது வலது திரும்பிப் பார்க்காம நேரா கோடு கிழிச்சுப் போற வெள்ளை சட்டை ஆட்கள் நிறைய. அப்படிப் போர வெள்ளை சட்டையில நிறைய பேர் கோடீஸ்வரர்கள். இந்தத் தெருவுல கார்ல போக முடியாது. மோட்டார் சைக்கிள் கூட உதவாது. ஒரு காலத்துல கோச் வண்டியா போன இடத்துல இப்போ நடந்துதான் போக முடியும். பார வண்டியும், சைக்கிள் ரிக்ஷாவும், தலை கூலி ஆட்களும் நடந்து நடந்து கெட்டி பட்டுப் போன இடம். ரிப்பேரே பண்ண முடியாத அளவுக்கு இந்த இடம் கெட்டுப் போயிடுச்சு. நோண்டி பாதாள சாக்கடை போடவோ, குழாய் பதிக்கவோ முடியாது. வெள்ளக்காரன் காலத்துல போட்டதுதான் இன்னமும் இருக்கு. இன்னும் பத்து வருஷத்துல இது வாழத் தகுதியில்லாத இடம்னு ஆயிடும். இதுல வாழ்ந்தா பைத்தியம் புடிச்சுடும்."

"ஒரு காலத்துல ஆஹா.. ஓஹோன்னு சொன்னேள்."

"ஆமாம். சொன்னேன் ரேவதி. சொன்னது தப்போன்னு இப்ப தோன்றது. ரொம்ப தள்ளிப்போயிடணும். தென்னை மரமும், மாமரமும், வேப்பமரமும் சூழ்ந்த இடத்துக்

"முதல்ல இந்தத் தெருவை விட்டு வேற தெருவுக்குக் குடித்தனத்தை மாத்துங்க மாப்ளே."

"ஏன் மாமா...! இந்தத் தெருவுக்கு என்ன குறை?"

"மாப்பிள்ளை எங்கே குடி இருக்கார்னு யாராவது கேட்டால் 'நடுத்தெருவுல' இருக்கார்னு சொல்ல சங்கடமா இருக்கு!"

— சீர்காழி வி. ரேவதி



குப் போய் காலார நடக்கணும். கட்டில் போட்டு உட்கார்ந்துண்டு ராமாயணம், மகாபாரதம் படிக்கணும்."

"என்ன... அவ்னோ என்ன வயசா யிடுத்து?"

"வயசாகலை. அலுப்பு வந்துடுத்து. ஒரே பொய். சுத்தி சுத்தி சுத்தி ஏகப்பட்ட பொய். முதலாளி பொய் சொல்றதால நானும் பொய் சொல்ல வேண்டியிருக்கு. ஏன் பொய் சொல்றீங்கன்னு ஒருத்தன் வந்து கேட்கிறான். வேற வழியில்லைடா. பொய் சொல்றேன்னு நிஜம் சொல்ல வேண்டியிருக்கு. பெரிய குழப்பம் வந்துடுத்து. நான் நிஜம் சொன்னா பொய்யான்னு நினைக்கறான். நான் பொய் சொன்னா நிஜம்னு நினைக்கிறான். நான் சொல்றது என்னன்னே ஒரு ஸ்டேஜ்ல எனக்குப் புரியலை. அதனாலதான் இந்த இடத்தை விட்டு ஓடணும்னு நினைச்சிட் டேன்."

"படப்பையிலேர்ந்து ஜார்ஜ் டவுனுக்கு வரப்போறீங்களா?"

"இல்லை ஜார்ஜ் டவுன்ல எனக்கு வேலையே இல்லை."

"அப்போ படப்பையில என்ன வேலை?"

"தெரியலை. இருக்கற காசை வச்சுண்டு வெறும் மோர் சாதம் கிச்சிலிக்கா ஊறு கான்னு தொட்டுண்டு சாப்டுண்டிருக்க வேண்டியதுதான்."

"நீங்க சாப்பிடலாம். குழந்தேள்."

"அதுக்கு ஏதோ ஒரு வழி பிறக்கும். பயப் பட வேண்டாம்."

மிகப் பெரிய வயல்வெளியை யாரோ யாருக்கோ விற்க, அந்த யாரோ, இவருக்கு அளந்து கல்நட்டு விற்றார்.

இருபத்தியோரு வருட சம்பாத்தியம். அதில் சேர்த்த காசு. அதில் வாங்கின நகை. அனைத்தையும் கரன்சியாக்கி கொண்டு போய்க் கொடுத்து பத்திரம் எழுதி வாங்கி வந்தார். வாங்கின அன்றே பத்திர ஆபிஸில் பதினேழு பேர் வாங்கினார்கள். எல்லார் நிலமும் அன்றே நல்ல நாள் என்பதால் பதிவு செய்யப்பட்டது. பதிவு செய்துவிட்டு கார் ஏறும் போது கிராமவாசி ஒருவன் வண்டி யில் இடம் கேட்டான்.

"ஜிஎஸ்டி ரோடுல இறக்கிவிடுங்க ஸார்" என்றான்.

அவனை ஏற்றிக் கொண்டதும் முதல் வார்த்தையாக "இங்கபோய் நிலம் வாங்கி யிருக்கீங்களே மழை நாள்ல வந்து பார்த் திருக்கீங்களா?" என்று கேட்டான்.

"மார் அளவு தண்ணி போவும். அப்போ



"நீங்க போடற செருப்பெல்லாம் ரொம்ப நல்லா இருக்கே. எங்க செலக்ட் பண்றீங்க?"
"கல்யாண மண்டபத்தில்தான்."
— நாராயண ஹரிகிருஷ்ணன்

என்னா பண்ணுவீங்க" என்று சொல்லி விட்டு "கீழ இறக்கிவிட்ருங்க ஸார். இங்க ஒரு வேலைய முடிச்சுட்டு ஜிஎஸ்டி ரோடுக்கு நடந்து போய்க்கறேன்" என்றான்.

அவன் காரில் ஏறியது எங்கும் போவ தற்கல்ல. இதைச் சொல்லுவதற்கு என்று புரிந்து போயிற்று.

அவன் சொன்னபடியே நிலம் வாங்கின மூன்றாம் மாதம் நல்ல மழை. நீரில் நிலம் மூழ்கிப்போயிற்று. சில இடங்களில் மார் அளவு தண்ணீர் ஓடிற்று.

அவர் பாறைமேல் நிற்பதைப் பார்த்து கிராமமக்கள் ஐயோ பாவம் என்று சொல்லி விட்டுப் போனார்கள்.

"கட்டிடமெல்லாம் கட்டமுடியாதுங்க. முன்ன வேலிகாத்தான் விளைஞ்சிருந்தது. சும்மா மழை இல்லேன்றதுனால வெட்டிப் போட்டு ஒரு போகம் பண்ணோம். சுமாரான பலன். நாலு கல்லு தாண்டி நேர் எதிர் ஏரி. அது உடைச்சுகிச்சுன்னு வச்சுக்கோங்க இந்தத் தண்ணி இறங்கறதுக்கு ரொம்ப நாள் ஆகும். இதை எப்படி நிலம்னு வாங்கினீங் கன்னே எங்களுக்குத் தெரியலை. இது குட்டைங்க. நிலமில்லை."

ஆனால் இந்த நீர் கூட ஒருநாள் இல்லை யெனில் ஒரு நாள் வடியும். நல்ல வெய்யில் காலத்தில் உலர்ந்து போகும்.

நிலம் வாங்கிய ஆறாம்நாள் அந்த ஜோசியன் சொன்னதுபோல நிலம் இவரைக் கவிழ்த்துவிட்டது.

அவர் மகள் சாவித்ரி, தான் கோவிந்தன் என்பவரை காதலிப்பதாகவும் அவரையே திருமணம் செய்து கொள்ளப்போவதாகவும் அவர் இன்று மாலை வீட்டைத் தேடி வரப் போவதாகவும் வந்தால் சரி என்று சொல்லும்படியாகச் சொன்னாள்.

அவர் திடுக்கிட்டு எழுந்து நிற்க "கத்தி கூச்சல்போட்டு ரகளை பண்ணா நான் பொட்டியத் தூக்கிட்டு வெளியே போயிருவேன். பொட்டிய பிடிங்கிவச்சா கட்டின புடைவையோட போயிடுவேன். எது உங்களுக்கு வசதிங்கறத இங்க தீர்மானம் பண்ணிண்டு அதுக்கேத்தபடி நடந்துக்கோங்கோ" என்று சொன்னாள்.

இருபத்தோரு வயது பெண் சுமாராக பாடுவதைத் தவிர வேறொன்றும் அறியாத பெண் என்று நினைத்துக் கொண்டிருந்தவருக்குத் தூக்கிவாரிப் போட்டது.

அந்த கோவிந்தன் அவர் சொல்வதற்கு முன்பே உள்ளேவந்து உட்கார்ந்து கொண்டான்.

"என்னா சொல்றீங்க. உங்க பொண்ணு எல்லாம் சொல்லிடுச்சா?" என்று எந்த அறிமுகமுமில்லாமல் தடக்கென்று கேட்டான்.

சிறிது கூட நாகரிகமில்லாத ஒரு வாலிபனோடு, தான் என்ன பேச முடியும் என்று தெரியாமல் ராதாகிருஷ்ணன் தவித்தார். மனைவியை, நீ பேசு' என்று சொல்லி விட்டு மேல்மாடிக்குப் போனார்.

இது ஒரு அற்புதமான கட்டிடம். அங்கிருந்து ஹைகோர்ட் தெரியும். பக்கமாக இருக்கின்ற காளிகாம்பாள் கோவில் கோபுரம் தெரியும்.

இது அப்பாவும், அம்மாவும் வாழ்ந்த வீடு. அவர் வளர்ந்த வீடு. நிமிர்ந்து நின்ற வீடு.

"தம்புச் செட்டித் தெருவுல வீடா? கடைதானே இருக்கும். அங்க எப்படி வீடுன்னு சொல்றீங்க?"

அவர் விவரிக்க, மயிலாப்பூர், மந்தவெளியில் உள்ளவர்கள் வாய்பிளப்பார்கள். "அங்க கொத்தவால்சாவடி கிட்டக்கயா?"

"எல்லாம் கிட்டக்க. உலகமே கிட்டக்க" என்று ஒரு காலத்தில் இறுமாப்போடு பதில் சொல்லி வந்தார். பொறுப்புகள் வரவர இறுமாப்பு உடைந்து போயிற்று. பொய் சொல்வதற்கு ஒரு வயது வேண்டும். நாப்பத்தியாறு வயதிற்குப் பிறகு பொய் சொல்ல முடியவில்லையெனில் அது மிகப் பெரிய சங்கடம். அந்தச் சங்கடம் ஒரு வகையில் ஆசிர்வாதம். வாழ்க்கைப் பாதையையே மாற்றிக் கொள்ள என்கிற சூசகம்.

ஒரு மகள். ஒரு மகன் என்று நின்ற திமிரா? எல்லாவற்றையும் மனைவி ரேவதி பார்த்துக் கொள்வாள் என்கிற அலட்சியமா? அல்லது தன் கையில் இருக்கின்ற ஆங்கிலப் பேச்சும், நிர்வாகத்திறனும், தன் இறை நம்பிக்கை தன்னைக் காப்பாற்றும் என்கிற கர்வமா? என்று தெரியவில்லை.

"என்னைப் பொய் சொல்ல வேலைக்கு அனுப்பாதீங்க ஸார்" என்று அலுவலகத்தில் கேட்டுக் கொண்டார்.

அலுவலகம் சற்று நேரம் சிந்தித்தது.

பத்து நாள் வேலையில்லாமல் அவரை வெறுமே உட்கார வைத்தது. பிறகு மெல்ல கூப்பிட்டு "அப்படி ஒரு வேலை இந்த ஆபீஸ்ல இல்லை. வேற எங்கயாவது கிடைச்சா மாறிக்கறீங்களா?" என்று கேட்டது.

அவர் பதில் சொல்லாது ஒரு பத்து நாள் உட்கார்ந்திருந்தார்.

"ஏதாவது ஒரு விதமா பதில் சொல்லி விட்டு என்ன பண்ணனுங்கறத முடிவு பண்ணிக்கோங்க." அலுவலகம் கேட்டுக் கொண்டது. கிட்டத்தட்ட அதற்கு 'போய்வா' என்று பொருள்.

இது நிலம் வாங்கிய மறுமாதம் நடந்தது.

"ஐயோ... வித்துடலாமா...?"

மனைவி ரேவதி பயந்தாள். பரபரத்தாள்.

ராஜினாமா கடிதம் எழுதிக் கொடுத்து வீட்டிற்கு வந்தபோது ரேவதியின் அப்பா இறந்து போனார் என்று செய்தி வந்தது. வாரி சுருட்டிக்கொண்டு கும்பகோணம் போனார்கள்.

"வைத்தியத்துக்கே நிறைய செலவாயிடுத்து அத்திம்பேர். நீங்க வந்துதான் மிச்சகாரியம்னு காத்துண்டிருக்கோம்."

உள்ளே நுழைந்தவுடன் தனியே கூப்பிட்டுக் கொண்டுபோய் சொன்னார்கள்.

ராதாகிருஷ்ணன் பர்ஸ் பிரித்தார். அவனிடம் முதல் தவணையாக அம்பதாயிரம் ரூபாய் கொடுத்தார். மடமட

## ஹீரோவாகிறார் விஜய்!

தற்போதைய பிஸி பாடலாசிரியரான பா. விஜய் விரைவில் சினிமா ஹீரோவாகப் போகிறார். "இயக்குனர் நண்பர் ஒருவர் கேட்டார். ஆசை யாரை விட்டது. முயற்சிக்கலாமே என்றேன். புகைப்படங்கள் எடுத்திருக்கிறார்கள். இருந்தாலும் பாடல்தான் எனக்கு முக்கியம். எழுதிக் கொண்டே நடிக்கலாமென்றிருக்கிறேன்" என்கிறார் விஜய்.

விஜயகாந்த், தலைவாசல் விஜய், விஜய் என்று இதே பெயரில் மூன்றுபேர் இருக்கிறார்கள். இப்போது இன்னொருவர்.

— அப்பு

வென்று காரியங்கள் நடந்தன.

மறுபடியும் சென்னை வந்தபோது பூட்டிக்கிடந்த வீடு உடைக்கப்பட்டிருந்தது. அதில் எல்லா சாமான்களும் வாரி இறைக்கப்பட்டிருந்தன.

வாடகை வீட்டின் மீது நடந்திருந்த வழக்குபற்றிய ஃபைல் காணாமல் போயிருந்தது. இதற்குமேல் இந்த இடத்தில் தாக்கு பிடிக்க முடியாது என்று அன்றுதான் தீர்மானம் செய்தார். நிலத்தை அடமானம் வைத்து வீடுகட்டலாம் என்று நினைத்து வங்கிக்குப் போனார். தருகிறேன் என்று சொன்னார்கள்.

நில பத்திரங்கள் கொண்டுபோய் காண்பித்தார்.

இன்றைக்குக் காலையில் இங்கு நிலத்தைப் பார்வையிட வங்கியாட்கள் வருவதாக இருந்தது.

அவர் வந்து நின்று விட்டார். அவர் வருவதற்கு முன்னே மழை வந்திருந்தது. நீர் வந்திருந்தது. இப்பொழுது நீர்ப்பெருக்கு வரத்து அதிகமாயிருந்தது.

வங்கி அதிகாரிகள் வரமாட்டார்கள் என்று தெள்ளத் தெளிவாகத் தெரிந்தது. வந்தாலும் தரமாட்டார்கள் என்றும் அவருக்குத் தோன்றியது. என்ன செய்ய... என்ன செய்ய? _ அவர் யோசித்தார்.

ஒரு குடிசை போட்டுக் கொண்டாவது இங்கு இருப்பேனே தவிர நான் மறுபடியும் அந்த இடத்திற்குப் போகமாட்டேன். பாறையிலிருந்து அவர் தரையில் குதித்தார். இடுப்பளவு ஆழம் இருந்தது. தொடர்ந்து நடந்தார். நெஞ்சளவு ஆழம்போயிற்று.

நடுத்திடலில் போய் நின்று இது என்னுடைய நிலம். இது என்னுடைய பூமி என்று உரக்கக் கத்தினார்.

சுற்றியுள்ள தாவரங்கள் மட்டும் அவரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தன.

அவருக்கு மெல்லியதாய் அழுகை வந்தது. பசித்தது.

எங்கேயோ கெட்டி மேளச்சத்தம் கேட்டது.

'இந்த மழையில எப்படி கல்யாணம் பண்றாங்க?' ஆச்சரியமாக இருந்தது.

தூரத்தில் வெள்ளைவெளேரென்று ஆறேழு குடியிருப்புகள் தெரிந்தன. அங்கிருந்துதான் நாகஸ்வர சப்தம் வருகிறது. போய் சாப்பிட ஏதாவது கேட்கலாமா.

அவர் நீரிலேயே நடந்து குடியிருப்புகள் நோக்கிப் போனார்.

அவர் உள்ளுக்குள்ளும் கெட்டிமேளச் சப்தம் கேட்டது.

(தொடரும்)

## 'செல்ல' குளோனிங்!

அமெரிக்காவில் உள்ள டெக்ஸாஸ் பகுதியில் இயங்கும் ஒரு நிறுவனம் ''உங்கள் வீட்டுப் பூனையை எங்களிடம் எடுத்துவந்து குளோனிங் செய்து கொள்ளுங்கள். ஒரிஜினல் இறந்தாலும் நகல் உங்களுக்குப் பெரும் ஆறுதல் அளிக்கும்'' என்று விளம்பரம் செய்ய அதற்கும் பலர் விண்ணப்பித்திருக்கிறார்கள்.



இந்த வருடத்திற்குள் குளோன் செய்யப்பட்ட பூனைகள் உரியவர்களுக்கு அளிக்கப்பட்டுவிடுமாம். மனித குளோனிங்கிற்குதான் எதிர்ப்பே தவிர செல்லப் பிராணிகளை குளோன் செய்ய பரவலான எதிர்ப்பு கிடையாது என்பதும் இது போன்ற நிறுவனங்களுக்குச் சாதகமாக இருக்கிறது.

உருவ அமைப்பில் இரு பூனைகளும் ஒன்றாகவே இருக்கலாம். ஆனால் இரண்டும் முழுக்க முழுக்க ஒரே மாதிரி குணாதிசயம் கொண்டதாகத்தான் இருக்கும் என்பது கட்டாயமில்லை.

இந்த வகை குளோனிங்கில் ஒருவகை ஆபத்து உள்ளது என்று குறிப்பிடுகிறார்கள் சில ஆராய்ச்சியாளர்கள். ஒரிஜினல் செல்லப்பிராணி இறந்தபிறகு, உயிரோடு இருக்கும்போது அதன் உடலில் இருந்து எடுக்கப்பட்ட மரபணுக்களின் மூலம் உருவாக்கப்பட்ட குளோனிங் பிராணி தாங்கள் எதிர்பார்த்தபடி நடந்து கொள்ளவில்லையென்றால் அதன் சொந்தக் காரர்கள் கடும் ஏமாற்றத்துக்கோ பெரும் கோபத்துக்கோ உள்ளாகலாம். அப்போது அந்த நகல் பிராணியையே அவர்கள் தங்கள் வீட்டிலிருந்து வெளியேற்றிவிடலாம். இதையெல்லாம் சம்பந்தப்பட்டவர்களுக்கு விளக்கிக் கூறி அவர்கள் மனத்தை பக்குவப்படுத்திய பிறகுதான் இந்த குளோனிங்கில் இறங்கவேண்டும் என்கிறார்கள் மருத்துவர்கள்.

மறுபுறம் ''யாருடைய கவனிப்புமின்றி அனாதையாகக் கிடக்கின்றன பல நாய்களும் பூனைகளும். அவற்றில் ஒன்றை எடுத்து வளர்க்காமல் குளோனிங் என்ன வேண்டியிருக்கிறது!'' என்று சீறுபவர்களின் எண்ணிக்கையும் அதிகமாகி வருகிறது.

— ஜி.எஸ்.எஸ்.

# மகிழ்ச்சித் திருவிழா!

இருநூற்றி ஐம்பது நட்புக் குடும்பங்கள் ஒன்றாகக் கூடினால்...?

"இப்படியொரு கேள்வியை எழுப்பினோம். அந்த மகிழ்ச்சித் திருவிழா மனத்துள் விரிந்தது. நண்பர்களிடம் சொல்லி வருஷம் ஒருமுறை இப்படிக் கூடுவது என முடிவு செய்தோம். இது நான்காவது வருடம்" என்று சொல்லி நம்மை புருவம் உயர வைக்கிறார் இதன் அமைப்பாளர் டாக்டர் இரா. இளவரசு.

இம்மாத தொடக்கத்தில் இந்தக் குடும்பங்கள் படப்பை, பல்லவர் ஓவியர் கிராமத்தில் கூடியன.

ஓவியர் முகாம், இசை மாலை, கலந்துரையாடல், பொம்மலாட்டம், கரிசல் குயிலின் மக்களுக்கான பாடல், குழந்தைகளுக்கான ஓவிய வண்ணக் கலவை பட்டறை மாமல்லபுரம் டூர் என மூன்று நாட்கள் அமர்க்களப்பட்ட இந்த நட்புத் திருவிழாவின் நோக்கம்?...

"பெரும்பாலும் தூய தமிழ், தமிழ் உணர்வுள்ள குடும்பங்கள், பெரியார் கருத்தைச் சார்ந்த பகுத்தறிவில் பற்றுள்ள குடும்பங்கள், பொதுவுடைமை, தமிழ், பகுத்தறிவு இந்த மூன்றையும் ஏற்றுக் கொள்கிற, நட்போடு பழகக்கூடிய குடும்பங்கள், மதம், ஜாதி, பொருளாதார ஏற்றத்தாழ்வு, பெண்ணடிமை நான்கையும் எதிர்க்கக்கூடிய குடும்பங்கள் வருடம் ஒருமுறை கோடையில் இணைகிறோம்.

"கொள்கை சார்ந்த வாழ்வில் குழந்தை குதூகலம் குறைந்துபோகிறது. திருவிழாக்கள், தீபாவளி போன்றவற்றை நாங்கள் கொண்டாடுவதில்லை. அவர்களுக்கான ஆர்வம் குறைந்து விடக்கூடாது என்பதற்கான அக்கறை, இயந்திரகதியாகி விட்ட வாழ்வில் ஆண்கள் மட்டுமே நண்பர்களைச் சந்திப்பதும் பழகுவதுமாக இருக்கிறது. இவர்கள் வீட்டுப் பெண்களையும் நட்போடு பழக வைக்கும் நோக்கில் இந்தத் திருவிழாவை நடத்துகிறோம்" என்கிறார் இங்கு கலந்து கொண்ட வழக்கறிஞர் அருள்மொழி.

இங்கு நடந்த கலந்துரையாடலில் நகைகள் அணியாமல் வாழ்வது எப்படி என்ற சின்ன விளக்கத்தையும் அளித்தார் இவர்.



"ஐம்பது அறுபது பவுன் போட்டால் தான் திருமணம் செய்வோம் என்று சொல்கிறார்கள். கண்ணீர் சுமந்த கஷ்டத்தின் வழியே நகைகள் போட்டுத் திருமணம் நடக்கிறது. நகைகளைப் பார்த்த கணவனுக்கு 'பைக்' வாங்க ஆசை வருகிறது. ஆசை கணவனின் 'பைக்' ஆசைக்கு அடகுக்குப் போகின்றன மனைவியின் நகைகள். கஷ்டப்பட்டு நகை வாங்கிக் கொடுத்த அப்பாவாலும், கழுத்து நிறைய போட்டிருந்த மகனாலும் நகையை அனுபவிக்க முடியவில்லை. இது தேவையா?

"தங்கத்திலும் வைரத்திலும் அணிகள் போடுவது பணக்காரர்களுக்கு வேண்டுமானால் குடும்பத்தின் செல்வாக்குக்காக

இருக்கலாம். ஆனால் உழைக்கும் மக்களுக் கல்ல. தங்கம்தான் வேண்டுமென்றால் தங்கக் காசுகளாக சேமியுங்கள். தங்க நகைகளை விட்டு விட்டுப் பாசிமணி மாலைகளை வேண்டுமானால் அணியலாம்!" இதுதான் அருள்மொழியின் அட்வைஸ்.

மருது, விஸ்வம் முத்துசாமி, வீரசந் தானம் என்று ஒரு பட்டாள ஓவியர்களை யும், பல எழுத்தாளர்களையும் கொண் டிருந்த இந்த திருவிழாவில் மகிழ்ச்சிக்கு மட்டும் பஞ்சமில்லை.

நண்பர்கள் குடும்பத்தின் சார்பில் மன்னார்குடியிலிருந்து வந்திருந்தார் ஒரு விவசாயி.




''வயல்காட்டையும் உள்ளூர் மக்களையும் பார்த்துக் கொண்டிருந்த எனக்கு இங்கு இவர் களைச் சந்தித்து கலந்துரையாடுவது சந்தோஷ மாகயிருக்கிறது" என்றார் அவர்.

"நம்முடைய அறிமுகமும் உறவும் சாதி வழிபட்டதல்ல. மதத்தோடும் பிணைக்கப் பட்டதல்ல. நாம் முற்றிலும் புதிய மனிதர் கள். நட்பின் வழி உறவுக்காரர்கள். இதைப் புரிந்து கொள்ள வேண்டும்" என்று சொல் லும் ஓவியர் வீர சந்தானம் "ஓவியங்கள் உள் ளிட்ட விஷயங்களை, தங்களுக்கானது' என்று சொல்லிக் கொண்டிருப்பவர் களுக்கு மத்தியில், அவை மக் களுக்கானவை என்ற



உணர்வைப் பெற, ஓவியர்கள் _ எழுத்தாளர் கள் சந்திப்பு நடத்தினோம்; நமது பண்பாட் டுத் தளக் கருத்துக்களைப் பகிர்ந்து கொள் வது இன்றைய இளைய தலைமுறையின ருக்கு அவசியம் என்ற நிலையில் இந்த நட்பின் திருவிழா நடக்கிறது"' என்றார்.

திருநெல்வேலி, தஞ்சாவூர், திருச்சி போன்ற ஊர்களில் ஏற்கெனவே இது போன்ற சந்திப்பை நடத்தியிருக்கிறார்களாம் இவர்கள்.

வாழ்க்கை அந்நியமாகிப் போய்விட்ட இந்த நகரச் சூழ்நிலையில் நம்மை அடை யாளங் காண இம்மாதிரியானச் சந்திப்புகள் அவசியம்தானே!

- வதனன்

# காகங்கள் குறித்து...

• மின்கம்பியில்
அடிபட்டுச் செத்த
காக்கை கண்டு
அலறிக் கூடின
ஆயிரம் காக்கைகள்

குறைந்து வருகிறது கூட்டம்
இழவு வீடுகளில்

• அம்மா வைத்த
அமாவாசைப் பொங்கலைத் தின்று
களைப்பாறுகிறது
குடல்சரிந்த எலியினைக்
கவ்வி வந்த காகம்

சைவமோ அசைவமோ
தீட்டுப் பார்க்கிறது மனசு

• விடாது கரையும் காகம்
விரட்டி அடிக்கப்படும்
விருந்தாளி வருகையை
முன்னறிவிக்கிறது என்பதால்.

ஜெயந்தன் ஆர்.சி.

## அண்டை வீட்டு வம்பு

**மா**ணவர்கள், சினிமா நடிகைகள் என்று தற்கொலை முடிவைத் தேடிக் கொள்பவர்கள் வரிசையில் சமீபத்தில் மேல் தட்டு மற்றும் அரசியல் குடும்பத்தவர்களும் சேர்ந்திருக்கிறார்கள். தில்லியில் நட்வர் சிங்கின் மகனைத் தொடர்ந்து பெங்களூரில் ஸ்வப்னா பாட்டீல் (35) தற்கொலை செய்து கொண்டார். இவர் மக்களவை முன்னாள் தலைவர் சிவ்ராஜ் பாட்டீலின் மகள். ஸ்வப்னாவின் கணவர் பஸ்வபிரபு எஸ் பாட்டீல் ஹைகோர்ட் வக்கீல். ஸ்வப்னாவுக்கு 20 நட்களுக்கு முன்னால் தான் குழந்தை பிறந்திருக்கிறது. உடல் ரீதியாக ஏதோ ஒரு குறையுடன் குழந்தை பிறந்திருப்பதாகவும் அதைப் பார்த்து மிகவும் மனமுடைந்து போனதால் தான் ஸ்வப்னா தற்கொலை செய்து கொண்டார் என்றும் சொல்கிறது போலீஸ். சுமார் இரண்டு வருடங்களுக்கு முன்னால் கான்ஸரினால் மரணமடைந்த தாயை நினைத்து ஸ்வப்னா எப்போதும் ஒரு டிப்ரஷனில் இருந்ததாக ஒரு தகவல் தெரிவிக்கிறது.


ஊர்மிளா


ஸ்வப்னா

**இ**ஸ்கான் (ஹரே ராமா ஹரே கிருஷ்னா) ஏழை குழந்தைகளுக்கென 'அட்சய பாத்திரா' என்ற புது திட்டத்தை உருவாக்கியிருக்கிறது. பிரபல ஹிந்தி நட்சத்திரங்களான அனில் கபூர், ஃபர்தின் கான், ஊர்மிளா, அபிஷேக் பச்சன், மஹிமா சௌத்ரி போன்றோர் கலந்து கொண்டனர். ''சமூக பிரச்னைகளில் ஸ்டார்களும் ஆர்வம்காட்ட வேண்டும். வெறுமே பேசிக் கொண்டிருப்பதைவிட செயலில் காண்பிப்பதே நலம்'' என்றார் ஊர்மிளா. ''எங்கள் வீட்டில் எந்த பர்த்டே பார்ட்டியாக இருந்தாலும் அக்கம்பக்கத்துக் குழந்தைகளுக்கும் அழைப்பு உண்டு. பொது நலனில் அக்கறை கொண்டவர்கள் நாங்கள்'' என்றனர் அனில் கபூர் தம்பதி. ''சும்மா பப்ளிக்கை உற்சாகப்படுத்துவதற்காக தருமம் செய்கிறேன் என்றெல்லாம் நான் சொல்லவில்லை. நிஜமான அக்கறை எனக்கு உண்டு. 'இஸ்கானுக்கு' அடிக்கடி வருவேன். இன்னும் பல தர்ம ஸ்தாபனங்களுடன் கூட நான் செயல்பட்டு வருகிறேன்'' என்றார் அபிஷேக் பச்சன்.

## குறட்டைக்கு குட்பை!

**கு**றட்டைத் தொல்லையிலிருந்து விடுபட இப்போது சிகிச்சை வந்துவிட்டது. சில நிமிடங்களிலேயே முடிந்துவிடும் இந்த ஆபரேஷனுக்கு ஆகும் செலவு சுமார் 3500லிருந்து 5000 ரூபாய்க்குள். சிலருக்கு இரண்டு வருடத்திற்குப் பிறகும்கூட மறு முறை ஆபரேஷன் செய்ய வேண்டியிருக்குமாம். ''இதை ஆபரேஷன் என்று சொல்ல முடியாது. ரேடியோஃப்ரீக்வென்ஸி டெக்னாலஜி என்று சொல்லலாம். ஆபரேஷன் என்றால் இருபதாயிரம் வரை ஆகும். லேஸருக்கும் அதே போலவே ஆகும். ஆனால் இந்த புதிய முறை சிகிச்சை கண்டிப்பாக பலனளிக்கும்'' என்கிறார் ஈ.என்.டி. சர்ஜன் டாக்டர் சஞ்சய் சுப்பையா.

குறட்டை விடும்போது திடீரென ஆக்ஸிஜன் சப்ளை தடை ஏற்பட்டு உறக்கத்திலேயே இறந்து விடும் வாய்ப்பும் உண்டாம்! பயமுறுத்தல்...?!

— லதா சேகர்

# 2 டாலரால் வந்த வினை!

## ராசய்யா!

ராசய்யா திரைப்படங்களுக்கு இசையமைக்க வந்தபோது, ஏ.எம். ராஜாவும் இருந்ததால், பெயர் குழப்பம் வரும் என்று பலரும் நினைத்தனர். ஏ.எம். ராஜாவை மூத்தராஜா என்றே பலரும் குறிப்பிடுவர். உடனே பஞ்சு அருணாசலம் பெயர் குழப்பத்தைத் தவிர்க்க ராசய்யாவிற்கு 'இளையராஜா' என்று பெயரிட்டார்.

- அரிச்சந்திரன்,
சென்னை-41.

## மோனாலிசா

லியோனார்டோ டாவின்சி என்ற ஓவியரின் முன் அமர்ந்திருந்த 'விசாகியா கண்ட' என்ற பெண்ணிற்குப் பிற்காலத்தில் உலகமே வியந்து பாராட்டப் போகும் ஓர் ஓவியத்திற்காக, தான் மாடலாக அமர்ந்திருக்கின்றோம் என்ற விஷயம் நிச்சயமாகத் தெரிந்திருக்க முடியாது. டாவின்சியின் நகைச்சுவைப் பேச்சுக்களை ரசித்தபடி மூன்றாண்டுகள் 'விசாகியா கண்ட' கொடுத்த போஸ்தான் உலகம் போற்றும் 'மோனாலிசா'வாக உருவாகியது. இத்தனைக்கும் அந்த முகம் அம்மை வடுக்கள் நிறைந்ததாம்!

ஒளவை ஏ.எஸ். யோகானந்தம்

## A, B, C, D இல்லாமல்...

ஆங்கில மொழியில் முதல் நான்கு எழுத்துக்களான A, B, C, D இல்லாமல் மற்ற ஆங்கில எழுத்துக்களை மட்டும் பயன்படுத்தி 99 வார்த்தைகளை யாராவது உங்களைச் சொல்லச் சொன்னால், பட்டென்று ஒன்று முதல் 99 வரையிலான எண்களை ஆங்கிலத்தில் சொல்லிவிடுங்கள். இந்த 99 வார்த்தைகளில் A, B, C, D நான்கு எழுத்துக்களும் பயன்படுத்தப்படுவதே இல்லை. இதேபோல் A என்ற எழுத்து மட்டும், 999 வரை ஆங்கிலத்தில் எழுதினால் அவற்றில் ஒன்றில் கூட இடம் பெறாது.

- கே. சங்கர்,
கோபி.

● தேன்கூடு

## எண்ணெய்! குச்சி!

ஆப்பிரிக்காவில் வாழும் பாபீரோ இனமக்கள் விவாக ரத்து செய்வது சுலபம். கண வன் படுக்கையிலிருந்து எழுந் ததும் ஒரு ஜாடியில் எண்ணெ யையும் ஒரு குச்சியையும் தன் மனைவியின் படுக்கை அருகில் வைத்துவிட்டுச் சென்றுவிட்டால் உடனே விவாகரத்து செய்து விட்டதாக அர்த்தம்!

- சி. மணி, புத்தனாம்பட்டி.



ஜெர்மனியில் பிறந்த காரல்மார்க்ஸ் 'நியூயார்க் டைம்ஸ்' நாளிதழில் வேலை யில் சேர விண்ணப்பித்தார். ஓரிரண்டு டாலர்கள் ஊதிய வித்தியா சத்தில் அந்த வேலையை ஏற்றுக் கொள்ள மறுத்து இங்கிலாந்து சென் றார்.

அமெரிக்க அதிபராக இருந்த கென்னடி, வேடிக்கையாக இப்படி குறிப்பிட்டார்:

"'நியூயார்க் டைம்ஸ்' கஞ்சத் தனம் காட்டாமல் இரண்டு டாலர் கூடுதலாக ஊதியம் கொடுத்திருந் தால், காரல் மார்க்ஸ் அமெரிக்கக் குடிமகனாக வாழ்ந்திருப்பார். கம் யூனிச தத்துவத்தை எழுதியிருக்க மாட்டார். ஒரு சோவியத் யூனியனும் செஞ்சீனாவும் உருவாகி இருக்காது. அமெரிக்கா இவ்வளவு பெரிய எதிரி களை எதிர்கொள்ள வேண்டிய அவ சியம் ஏற்பட்டிருக்காது. எல்லாமே



இரண்டு டாலரால் வந்த வினை.

தகவல்: ராம்மோகன், விருதுநகர்

எழுத்தாளர் ஆஸ்கார் ஒயில் டிடம் ஒரு பத்திரிகை ஆசிரியர் சிறந்த நூறு புத்தகங்களின் பட்டி யலை அனுப்பும்படி கேட்டார்.

அதற்கு ஆஸ்கார் ஒயில்டு, "என்னால் அது முடியாது. காரணம், நான் இதுவரையில் ஐந்து புத்தகங்கள் மட்டுமே எழுதியிருக்கிறேன்' என பதில் அளித்தார்!

- பா. குணா, சேத்துப்பட்டு.

## வித்தியாச காலண்டர்!

உ.பி மாநிலத்திலுள்ள கோரக்பூர் போலீ ஸார் ஒரு காலண்டர் வெளியிட்டுள்ளனர். இதில் சினிமா நட்சத்திரங்களின் படங்களோ இயற் கைக் காட்சிகளோ இடம் பெறவில்லை. அந்தப் பகுதியின் பிரபலமான ரௌடிகள், ஜேப்படித் திருடர்கள் முதலியோரின் படங்கள் அச்சிடப் பட்டுள்ளன! இந்தக் காலண்டரை இலவசமாக அனைவருக்கும் அளிக்கின்றனராம், அந்நகரப் போலீஸார். வித்தியாசமான காலண்டர்தான்! வித்தியாசமான போலீஸ்தான்!

- ஆர். மார்க்கண்டன்

# நல்லதம்பி

பத்து நாட்களுக்கு முன்புதான் நாவரசர் நல்லதம்பி நாவாடிச் சென்றிருக்கிறார். மீண்டும் அவருடைய பேச்சைக் கேட்கும் வாய்ப்பு. ஆனால் என்ன? கட்சி மாறிப் பேசுகிறார். முன்பு அவர் எதிர்க்கட்சி. இப்போதோ ஆளும் கட்சி.

எனக்கு கட்சி ஈடுபாடு - ஆதரவு மனப்பான்மை எதுவும் இல்லை. நல்ல பேச்சாளர்கள் பேசினால் கேட்க வேண்டும்.... அவ்வளவுதான்.

அன்று கூட்ட நாள். ஆளும் கட்சி கூட்டம் நடத்துகிறது என்றால் சும்மாவா? சிறு நகரமாக இருந்தால் என்ன? சாலையை மறித்துக்கொண்டது கூட்ட மேடை. போக்கு வரத்துக்கு இடைஞ்சல். வண்டிகள் திருப்பி விடப்பட்டன. சாலையின் இருமருங்கிலும் அடிக்கொரு குழாய் விளக்கு. மரங்களில் வண்ண வண்ண விளக்குப் பூக்கள் தொங்கின.

நாவரசர் நல்லதம்பியைப் பெருமைப்படுத்துகிற விதமாய், பெரிய மேடை ஒளி விளக்கு களால் வெளிச்சம் நிரம்பி இருந்தது.

உள்ளூர்ப் பேச்சாளர்கள் பேசி முடித்து நாவரசர் நல்லதம்பி பேச ஆரம்பிக்க இரவு பத்து மணிக்கு மேலாகி விட்டது.

"போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரிய..."

"ஓர் ஆள் இடையில் புகுந்தான். "அண்ணன் நல்லதம்பி அவர்களுக்கு இந்த மலர் மாலையை அணிவிக்கிறேன்" என்றான்.

**பொன். ஜெயந்தன்**

"ஒப்பற்ற ஒரே பேச்சாளர் - எங்கள் கொள்கைச் சிங்கம், கிடைத்தற்கரிய பொக் கிஷம், இளையவேந்தன் அண்ணன் நாவுக்கு இனிய அரசர் நல்லதம்பி அவர்களுக்கு இந்தக் கதராடையை அணிவிக்கிறேன்" என்று அணிவிக்க நாவரசு நல்லதம்பி முகம் மலரச் சிரித்து அந்தக் கதராடையைத் தோளில் வாங்கிக்கொண்டார்.

மைக் முன்னே அலறி, மாலை மரியாதை செய்தார்கள். கூட்ட அமைப்பாளர் - நகரக் கழகச் செயலாளர் நூறு ரூபாய் நோட்டு மாலை அணிவித்தார். நாவரசு நல்லதம்பிக்கு வாயெல்லாம் பற்கள்... அப்படியே அந்தக் கழகச் செயலாளரைக் கட்டிப் பிடித்துக் கொண்டார். கூட்டம் ஆரவாரித்தது.

மாலை, கதராடை, பொன்னாடை அணிவிப்பதெல்லாம் சடங்கு போல, கடைசித் தொண்டன் வரைக்கும் பெற்றுக் கொண்டு பேச ஆரம்பித்தார்.

"உங்கள் ஊருக்கும் எனக்கும் அப்படி என்ன ராசியோ? பத்து நாட்களுக்குள்ளாக இரண்டாம் முறையாக இங்கே மேடை ஏறி இருக்கிறேன். இதே இடம்தான் என்றாலும் ஒரு சிறு வித்தியாசம்... அன்று அங்கே இருந்தேன். இன்று இங்கே இருக்கிறேன்..."

"நாளை எங்கே இருப்பாயோ?" கூட்டத்தில் யாரோ ஒருவன் கத்தினான். நாவரசு நல்லதம்பி காதில் வாங்கிக் கொள்ளாதவரைப் போல தொடர்ந்து பேசினார். ஆனால் பார்வை மட்டும் குரல் வந்த திசைக்குத் தன்னிச்சையாகப் போனது.

"எப்படி அங்கே இருந்தேன் இத்தனை நாளும்? நினைத்து நினைத்துப் பார்க்கிறேன்... என் மதி மயங்கிக் கிடந்ததா? நான் இத்தனை நாளும் வேதனையோடிருந்தேன். இப்பொழுது

தான் நான் மனநிறைவோடிருக்கிறேன். கடவுள் முன்னே சம்மணமிட்டு உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். இப்போது...''

தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார். எனக்கு என்னவோ அவருடைய பேச்சின் ஆரம்பமே பிடிக்கவில்லை.

கடந்தமுறை இந்த ஊரில் அவர் பேசிய போது, அப்போது அவர் இருந்த கட்சியின் தலைவரை வானுயரப் புகழ்ந்து பேசினார். அவருக்கு ஈடு இணை இந்த உலகத்தில், ஏன் ஈரேழு உலகத்திலும் இல்லை என்று பேசினார். அந்த உத்தமத் தலைவனுக்கு ஆயுள் முழுவதும் உண்மைத் தொண்டனாக இருப்பேன் என்று பேசினார்.

அவர் ஓர் அரசியல்வாதி, சொன்னது ஒன்று, செய்தது ஒன்று.

பத்து நாட்களுக்கு முன்னதாக ஆளும் கட்சித் தலைவரைச் சந்தித்து சாஷ்டாங்கமாய்க் காலில் விழுந்து - சேவித்து கழகத்தில் சேர்ந்துகொண்டார். அவர் அப்பட்டமாகக் காலில் விழுந்து கிடந்ததைப் படமெடுத்து கழகத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டார் என்று அறிக்கை வெளியிடப்பட்டது.

வெட்கம்!

ஊரே சிரித்தது. அதனால் எனக்கென்ன கவலை?

அவர் எங்கே இருந்தால் என்ன - எங்கே சேர்ந்தால் எனக்கென்ன? இன்று ஆளும் கட்சி சார்பாகப் பேசுகிறார். முதலில் சில விளக்கங்கள் - சில சால்சாப்புகள். இப்போது சேர்ந்திருக்கிற கழகத்தின் உண்மைத் தொண்டனாம் இவர் - சொல்கிறார். கடைசித் தொண்டனாக இருந்து ஆட்சியைப் பாதுகாப்பேன். என் உயிரையும் தரச் சித்தமாயிருக்கிறேன் என்று சூளுரைக்கிறார்.

அட ஈஸ்வரா!

''...சிலர் பேசுகிறார்கள். வாய்க்கு வந்தபடி, உப்புச் சப்பில்லாமல்...! நான் கோடி பணம் பெற்றுக் கொண்டேனாம். எனக்குத் தெரிந்த கோடி எல்லாம் தெருக்கோடிதான். அதுபோல எனக்கு ஒரு கேடியையும் தெரியும். அந்தக் கேடி கிளப்பி விட்ட கதைதான் இது...''

பேச்சின் சாரம் உயர்வாயிருக்கவில்லை.

என்ன மனிதர்? ஒருவரைப் புகழ்ந்து - மற்றவரை இகழ்ந்து - இதென்ன பேச்சு?

அசையும் நா எப்படி வேண்டுமானாலும் புரள்கிறது. என்ன ஒரு கொடுமை! மக்கள் 'ஆ'வென்று வாய் பிளந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

காற்றோடு கலந்த பேச்சுக்கு உயிர் இல்லை என்று நினைத்துவிட்டாரா? எனக்குள் ஓர் எண்ணம் ஓடியது. இன்று அவர் பேசியது எல்லாம் எச்சில் வார்த்தைகள். எனக்குள் ஒரு வேகம். அரசியல் மேடை ஏறி எதைப் பேசினாலும் சகித்துக்கொண்டிருக்க வேண்டுமா? எனக்குள் ஒரு கேள்வி. காதுகளை அவ்வளவு மட்டமாகவா நினைத்துக்கொண்டார்? ஈனப் பிறவிகளுக்கு முன் நின்றா பேசுகிறார்? புரட்டிப் புரட்டிப் பேசுகிறாரே... அவருடைய வாயிலிருந்து புறப்பட்ட வார்த்தைகளையே அதளபாதாளத்திற்குள் தள்ளிவிடுகிறாரே... இந்த மனிதரின் பேச்சை எந்த முகாந்திரத்தின் அடிப்படையில் நம்புவது? ஒருநாள் பேசியதை மறுநாள் மறுக்கிறார்... வாய் முழுக்கப் பொய் பித்தலாட்டம்... சராசரிப் பேச்சாளரைவிடத் தாழ்ந்து போன பேச்சு... பகட்டான வார்த்தைகளில் பொய்யாய்ப் பேசுவதை



விட உண்மையின் ஒளி ஏந்தி சாதாரணமாகப் பேசுவதே - மேல்!

இப்போது அவர் சேர்ந்திருக்கிற ஆளும் கட்சித் தலைவரை உயர்வாகப் பேசட்டும் - அது அவர் விருப்பம். ஆனால் அன்று மிகவும் தரக்குறைவாகப் பேசி இருக்கக் கூடாதே...

எதிர்க்கட்சித் தலைவரைக் கீழ்த்தரமாகப் பேசுகிறார். அது உண்மை என்றால் அன்று புகழ்ந்து பேசியது எதற்காக? சமய - சந்தர்ப்பவாதி இந்த மனிதர்... இவரை ஒரு பொருட்டாக மதித்து இவருடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டுமா? என்ன வேணுமானாலும் பேசுவார் - எப்படி வேண்டுமானாலும் பேசுவார் - அவருடைய பேச்சுக்குத் தலையாட்டிக் கேட்டுக்கொண்டிருக்க மக்கள் என்ன பூம்பூம் மாடுகளா?

கூட்டத்தின் கடைசியில் நின்றுகொண்டிருந்தேன்.

''கொஞ்சம் வழி விடுகிறீர்களா?'' என்று எனக்கு முன்னே இருந்தவரை ஒதுக்கிவிட்டு முன்னேறினேன்.

''...எங்கள் தலைவரை விட்டால் தமிழையும் தமிழ்நாட்டையும் காப்பாற்றுவதற்கு ஒரு நாதி உண்டா...?''

கூட்டத்தின் வயிற்றுப் பகுதியில் நெரிசலாக ஜனங்கள் உட்கார்ந்திருந்தார்கள்.

''...ஏழைகளின் கடவுள்... பசி போக்க வந்த பாராளும் தெய்வம்... தங்கத்தலைவர் தங்கத் தமிழ்மகனை விட்டால்...''

பக்குவமாக உட்கார்ந்திருந்த ஜனங்களைத் தாண்டிச் சென்றேன்.

''...எதிர்க்கட்சித் தலைவருக்கு ஒன்றைச் சொல்லிக்கொள்கிறேன். நீர் அரசியலை விட்டு ஓடிப் போய்விடும். இல்லாவிட்டால் உம்மை ஓட ஓட விரட்டி அடிப்போம். எம் தாய் தடுத்தாலும் எம் தலைவர் தடுத்தாலும் அஞ்சோம். அடங்கோம், உம்மை அரசியல் அநாதையாக்க அயராது பாடுபடுவேன். இது என் மீது ஆணை. என் தாய் மீது ஆணை. என் தலைவர் மீது சத்தியம்... உன்னை விட மாட்டேன்...''

கூட்டத்தின் முன் வரிசைக்கு வந்துவிட்டேன்.

நாவரசு நல்லதம்பி கையை வீசி வீசி ஆக்ரோஷமாகப் பேசிக் கொண்டிருந்தார்:

''உன்னைப் போல ஒரு கேடு கெட்ட தலைவனை என் வாழ்நாளில் நான் கண்டதில்லை!''

நான் ஓங்கிக் குரல் கொடுத்தேன்: ''உன்னைப் போல ஒரு உத்தமத் தலைவனை நான் உலகத்திலே கண்டதில்லை என்று முன்பு பேசினீரே...''

எதிர்ப்புக் குரல் வந்ததும் நாவரசு நல்லதம்பி பட்டென்று பேச்சை நிறுத்திவிட்டு என்னை உற்றுப் பார்த்தார்.

''நாவரசு நல்லதம்பி அவர்களே, எனக்கொரு சந்தேகம்'' என்றேன்.

''என்ன?'' என்பது போல பாவனை செய்தார்.

''தலைவர் என்று தலைமேல் தூக்கி வைத்துக்கொண்டாடியதும் நீங்கள்தான். இப்போது வார்த்தைகளால் அவரைச் சிதைப்பதும் நீங்கள்தான். இதில் எது உண்மை - எது பொய் - எதை நாங்கள் நம்ப வேண்டும்?'' - கேட்டேன்.

கூட்டத்தில் சிறு சலசலப்பு. கட்சிக்காரர்களிடம் சிறு பரபரப்பு...

நாவரசு நல்லதம்பி ஆடிப் போய்விட்டார். பிறகு சுதாரித்துக் கொண்டு, ''கூட்டத்தில் குழப்பம் செய்ய வந்திருக்கிறாயா?'' என்றார். ''எதிர்க்கட்சி ஆளாடா நீ?'' என்று கேட்டார். எனக்கு அதிர்ச்சி.

"நான் பொதுவானவன். எந்தக் கட்சிக்காரனுமல்ல. இரண்டு விதமாகவும் நீங்கள் பேசியிருக்கிறீர்கள். இதில் எது உண்மை, எது பொய். நீங்கள் எனக்கு மட்டுமில்லை. இங்கு கூடியிருக்கிற எல்லாருக்கும் விளக்கம் சொல்லவேண்டும்" என்று அவரிடம் கூறிவிட்டு ஜனங்கள் பக்கம் திரும்பி உரக்கப் பேசினேன். "எந்தப் பேச்சாளராக இருந்தாலும், பேச்சில் சுத்தம் இருக்க வேண்டும். நேற்றைய உண்மை இன்றைய பொய் என்றால் இன்றைய உண்மை நாளைய பொய்தானே? அதனால் முதலில் நாவரசு நல்லதம்பி உண்மையாக எதைப் பேசுகிறார் என்பதை நமக்கு விளக்க வேண்டும். அது நாளைய பொய்யாக இருக்காது என்பதற்கு உறுதிமொழி தர வேண்டும்"

கூட்டத்தில் யாரோ ஒற்றை ஆள் கை தட்டினார்.

''அரசியல் பேச்சாளர்கள் வாய்க்கு வந்தபடி பேசக்கூடாது. எதை வேண்டுமானாலும் பேசி விட்டுப் போய் விடலாம் என்ற நிலையை மாற்றிக் கொள்ள வேண்டும். இன்றைய ஆளும் கட்சித் தலைவரை நாவரசு நல்லதம்பி புகழ்வது எனக்கும் ஏற்புடையதுதான். ஆனால் புகழ்ந்த வாயே பின்னாட்களில் இகழாது என்பதற்கு என்ன உத்தரவாதம்?''

நாவரசு நல்லதம்பி மைக்கைப் பிடித்துக் கொண்டு கனைத்தார். ''கூட்டத்திலே கலவரம் உண்டு பண்ண வேண்டும் என்று வந்திருக்கிறாயா?''

"நான் இந்த ஊர்க்காரன். கூட்டத்தில் கலவரம் செய்வது எனக்கு வேலையும்

---

**''என் கணவர்கிட்ட வார இதழ் வாங்குறதை நிறுத்தச் சொல்லிட்டேன்.''**

**''ஏன்?''**

**''அதுல வர்ற ஜோக்ஸைப் படிச்சிட்டு என் மாமியார் சிரிக்கிறது எனக்குப் பிடிக்கலை!''**

**- சி.எஸ். ராஜமனை**



"தலைவர் ரொம்ப நொந்து போயிருக்கார்னு தோணுது."

"எப்படி?"

"மணமக்களை வாழ்த்திப் பேசும்போது, 'நம்ம கட்சி மாதிரி இல்லாமல் கணவனும் மனைவியும் ஒற்றுமையா இருக்கணும்'னு சொன்னாரே!"

- சீர்காழி வி. ரேவதி

அல்ல. நான் நியாயம் கேட்கிறேன். அவ்வளவுதான். நீங்கள் எதைப் பேசினாலும் நாங்கள் கேட்டுக் கொள்ள வேண்டுமா? நேற்று நீங்கள் உயர்த்திப்பிடித்த தலைவர் எந்த விதத்தில் தாழ்ந்து போனார்? வார்த்தைகளால் நீங்கள் மிதியோ மிதி என்று மிதித்த தலைவர் எப்படி இன்று உயர்ந்துவிட்டார்? நீங்கள் எப்படி அவரைத் தலைவராக ஏற்றுக்கொண்டீர்கள்? நீங்கள் எதைப் பேசினாலும் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டுமா என்ன?''

கூட்டத்தின் ஒரு மூலையில் இருந்து மீண்டும் ஒரே ஒரு ஆளின் கைதட்டல்.

''நாவரசு நல்லதம்பி மேடையில் உட்கார்ந்திருப்பவர்களைப் பார்த்துக் கத்தினார். ''என்னய்யா நீங்க இந்த ஆளு கூட்டத்திலே கலவரம் செய்றதுக்காகவே வந்திருக்கிறான். இவனை இன்னும் விட்டு வைத்திருக்கிறீர்களே...''

நாவரசு நல்லதம்பி என்னை நோக்கிப் பாய்ந்து வந்தார். ''எங்க தலைவரைப் பாராட்டுவது உனக்குப் பொறுக்கவில்லையா? அடேய் கைக்கூலி, உனக்கு எவ்வளவு தைரியம்? எங்களுக்கு எதிராகப் பேசுகிறாயா?''

கட்சிக்காரர்கள் ஓடி வந்து என்னை அமுக்கிப் பிடித்துக்கொண்டார்கள்.

''போடுங்கடா அவனை'' - நாவரசு முதல் ஆளாக என் மீது கை வைத்தார். தொடர்ந்து முதுகில், மூக்கில், முகத்தில் குத்துகள் விழுந்தன.

''இவனுக்கு விளக்கம் சொல்ல வேண்டுமாம்? ஆளும் கட்சி நடத்துற கூட்டத்துக்குள் புகுந்து கண் முன்னே கலவரம் செய்கிறான். போலீஸ்காரர்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். என்னய்யா இங்கே நடந்து கொண்டிருக்கிறது?'' - நாவரசு நல்லதம்பி போலீஸ்காரர்கள் மீது பாய்ந்தார். உடனே சில போலீஸ்காரர்கள் என்னைச் சுற்றி வளைத்துப் பிடித்துக் கொண்டார்கள். ஒருவர் முதுகில் ஓங்கி ஒரு குத்து விட்டார். என்னை வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டு போனார்கள். எனக்குக் கிடைத்த பரிசு... அடி... அடி.. உடலெங்கும் வலித்தது. அதைவிடக் கூடுதலாக மனவலி.

நாவரசு நல்லதம்பி தொடர்ந்து பேச ஆரம்பித்தார். ''நான் எந்தக் கட்சியில் வேண்டுமானாலும் சேருவேன். நான் ஏற்றுக் கொண்ட தலைவரைப் புகழ்ந்து பேசுவேன். இவன் யார் அதைக் கேட்க? இப்படி ஒரு சம்பவம் அந்த ஆளின் தூண்டுதல் காரணமாகத்தான் நடந்தது என்று நான் உறுதிபடக் கூறுவேன். பாம்பின் கால் பாம்பறியாதா? அந்தப் போக்கிரித் தலைவரின் பித்தலாட்டங்கள் இனியும் தொடர்ந்தால்....''

''நேற்று அவரை உத்தமர் என்றாயே,'' - யாரோ குரல் கொடுத்தார்கள். உறுதியாக ஒலித்தது அந்தக் குரல்.

''யாரடா அது?'' மைக்கில் நாவரசு நல்லதம்பி கத்தினார்.

''உன் அப்பன்டா'' எதிர்க்குரல் எழுந்தது.

''நான் பனங்காட்டு நரி. இந்தச் சலசலப்புக்கு அஞ்ச மாட்டேன்.''

''எங்க காதுல நீ பூ சுத்தினது போதும்.'' - கூட்டத்தின் மையப் பகுதியில் இருந்து ஒரு வாலிபன் எழுந்தான்.

''நல்லதம்பி நீ சொல்றதை எல்லாம் நாங்க கேட்டுக்க வேணுமென்றால் நீ நாக்குப் புரட்டியாக இருக்கக்கூடாது'' ஒரு முதியவர் தள்ளாடி எழுந்தார்.

அடிபட்ட வலி மாயமாய் மறைந்து விட்டது. இந்த எழுச்சிதான் வேண்டும். இந்த எழுச்சி பிறந்து விட்டால்...

எனக்குள் ஒரு மகிழ்ச்சிப் பூ மலர்ந்தது.

'அந்தத் தம்பி கேட்டதுல என்னப்பா தப்பு? மகனே, நீ பேசினதுல ஏதாவது உண்மை இருந்ததா?'' அந்தப் பெரியவர் மீண்டும் குரல் கொடுத்தார்.

நாவரசு நல்லதம்பி வெலவெலத்துப் போனார்.

ஆங்காங்கே தலைகள் எழுந்தன. எல்லாம் இளம் தலைகள். ○

# சிவகாமியின் சபதம்

முப்பத்து இரண்டாம் அத்தியாயம்

## மொட்டு வெடித்தது!

தடாகத்தில் ஒரு அழகிய தாமரை மொட்டு தண்ணீருக்கு மேல் தலை தூக்கிநின்றது. அதன் குவிந்த இதழ்களுக்குள்ளே நறுமணம் ததும்பிக்கொண்டிருந்தது. இரவெல்லாம் அந்த நறுமணம் வெளியில் வருவதற்கு முயன்று நாலாபுறமும் மோதிப் பார்த்தும் வெளியில் வர முடியாதபடியால் உள்ளுக்குள்ளேயே குமுறிக்கொண்டிருந்தது. தாமரை மொட்டுக்கும் அது மிக்க வேதனையளித்தது.

உதய நேரத்தில் நறுமணத்தின் குமுறலும் மோதலும் அதிகமாயின. திடீரென்று கீழ்வானத்தில் ஒரு ஜோதி தோன்றியது. உதய சூரியனின் அமுதனைய கிரணங்கள் தடாகக் கரையில் இருந்த விருக்ஷங்களின் இடையே நுழைந்து வந்து தாமரை மொட்டைத் தொட்டன. அந்த இனிய ஸ்பரிசத்தினால் மொட்டு சிலிர்த்தது; இதழ்கள் விரிந்தன. இரவெல்லாம் உள்ளே விம்மிக் கொண்டிருந்த நறுமணம் விடுதலையடைந்து தடாகத்தையும் தடாகக் கரையையும் வானவெளியையும் நிறைத்தது.

அவ்விதமே, சிவகாமியின் இதயமாகிய தாமரை மொட்டுக்குள்ளே இத்தனை நாளும் விம்மிக் குமுறிக் கொண்டிருந்த எண்ணங்களும் உணர்ச்சிகளும் மாமல்லரிடம் தனியாகப் பேசும் சந்தர்ப்பம் கிடைத்ததும், கரையை உடைத்துக்கொண்ட ஏரி வெள்ளத்தைப் போலப் பிரவாகமாகப் பெருகின. மாமல்லர்

அமரர் கல்கி



முதன்முதலில் அரண்ய வீட்டுக்கு வந்ததைக் குறிப்பிட்ட போதுதான் சிவகாமியின் வார்த்தைப் பிரவாகம் சிறிது தடைப்பட்டது.

அப்போது கிடைத்த சந்தர்ப்பத்தை மாமல்லர் பயன்படுத்திக் கொண்டு கூறினார்: ''ஆம்! எனக்கு நன்றாய் நினைவிருக்கிறது. நானும் சக்கரவர்த்தியும் முதன்முதலில் உங்கள் அரண்ய வீட்டுக்கு வந்தபோது, உன் தந்தையின் தெய்வச் சிலைகளுக்கு மத்தியிலே நீ நடனமாடிக் கொண்டிருந்தாய். ஆயனர் ஸ்வரக் கோவை பாடிக் கொண்டும், தாளம் போட்டுக் கொண்டும் இருந்தார். எங்களைக் கண்டதும் ஆயனர் பாட்டையும் தாளத்தையும் நிறுத்தினார். நீயும் ஆட்டத்தை நிறுத்தினாய். உன்னுடைய விரிந்த கண்கள் இன்னும் மலருமாறு விழித்து எங்களை நோக்கினாய். என் தந்தை 'நிறுத்த வேண்டாம்; ஆட்டம் நடக்கட்டும்!' என்று வற்புறுத்தினார். அதன் மேல் ஆயனர் பாடத் தொடங்க, நீயும் ஆடத் தொடங்கினாய்! ஆட்டம் முடிந்ததும் நான் பலமாகக் கரகோஷம் செய்தேன். நீ மகிழ்ச்சி ததும்பிய க்ண்களினால் என்னை ஏறிட்டுப் பார்த்தாய். அந்தப் பார்வையில்

நாணம் என்பது அணுவள வும் இருக்கவில்லை..."

"பிரபு! தாங்கள் கூறிய தெல்லாம் உண்மைதான். அப்போது நான் பன் னிரண்டு பிராயத்துப் பெண். உலகம் அறியாத வளாயிருந்தேன். தாங்கள் வானத்தில் ஜோதி மய மாய்ப் பிரகாசிக்கும் சூரி யன் என்பதையும், நான் கேவலம் பூமியில் புல் நுனி யில் நிற்கும் அற்பப் பனித் துளி என்பதையும் அறியாத வளாயிருந்தேன். ஆகையி னால், தங்களை ஏறிட்டுப் பார்க்கச் சிறிதும் தயக்க மடையவில்லை. சூரியனை ஏறிட்டுப் பார்க்கத் துணி யும் கண்கள் கூடிய சீக் கிரத்தில் கூசிக் குனிய நேரிடுமென்று அறியாமல் போனேன்...!"

"சிவகாமி! நான் சூரி யனுமல்ல; நீ பனித்துளியு மல்ல. நீ தீபச்சுடர்; நான் அதைச் சுற்றிச் சுற்றி வரும் விட்டில்...!"

"பிரபு! நான் சொல்ல ஆரம்பித்ததை விட்டு வேறு விஷயத்துக்குப் போனது தவறுதான். மன்னியுங்கள். நான் ஆடி நிறுத்தியதும் நீங் கள் கரகோஷம் செய்தீர்கள். எனக்கு அப்போது உண் டான மகிழ்ச்சிக்கு அள வில்லை. உங்கள் தந்தை உங்களைப் பார்த்து, "சிவ காமியோடு சற்று நேரம் விளையாடிக் கொண்டிரு! ஆயனரோடு பேசியான பிறகு உன்னைக் கூப்பிடு கிறேன்" என்றார். நீங்கள் உடனே என் அருகில் வந் தீர்கள். இருவரும் கை



கோத்துக் கொண்டு காட்டுக்குள்ளே குதித்தோடினோம்.

"காட்டிலே நான் பார்த்து வைத்திருந்த அழகான இடங்களையும் செடி கொடிகளையும் காட்டியான பிறகு தங்களை வீட்டுக்குள்ளே அழைத்துச் சென்று நான் வளர்த்து வந்த கிளிகளையும் புறாக்களையும் காட்டினேன். பிறகு என் தந்தை செய்து வைத்திருந்த சிலைகளைக் காட்டத் தொடங்கினேன். நடன வடிவச் சிலைகளைப் பார்க்கும் போது தாங்கள், 'நானும் நடனக் கலை பயில விரும்புகிறேன்' என்றீர்கள். அந்தச் சிலைகளில் ஒன்றைப் போல் அபிநயத் தோற்றத்தில் நின்றீர்கள். அதைப் பார்த்துவிட்டு நான் கலீரென்று சிரித்தேன். 'குழந்தைகள் அதற்குள்ளே வெகு சிநேகமாகிவிட்டார்களே!'' என்று நம் தந்தைமார் பேசிக்கொண்டார்கள்.

''அன்று முதல் தங்களுடைய வருகையை நான் ஆவலுடன் எதிர்பார்க்கலானேன். குதிரையின் சப்தமோ ரதத்தின் சப்தமோ கேட்கும் போதெல்லாம் தாங்கள்தான் வந்து விட்டீர்கள் என்று என் உள்ளம் துள்ளி மகிழ்ந்தது. உதயசூரியனையும், பூரண சந்திரனையும், வண்ண மலர்களையும், பாடு பறவைகளையும், பறக்கும் பட்டுப் பூச்சிகளையும் பார்க்கும்போது எனக்குண்டான குதூகலம் தங்களைப் பார்க்கும் போது உண்டாயிற்று. ஆனால் சூரிய சந்திரர்களிடமும், புஷ்பங்கள் பட்சிகளிடமும் பேச முடியாது. தங்களிடம் பேசுவது சாத்தியமாயிருந்த படியால், தங்களைக் கண்டதும் பேச ஆரம்பித்தவள் மூச்சு விடாமல் பேசிக்கொண்டேயிருப்பேன்...''

''உண்மைதான், சிவகாமி! அந்த நாளில் உன்னைப் பார்க்கும்போது, உன் தந்தையின் அற்புதச் சிலைகளில் ஒன்றைப் பார்ப்பது போன்ற மகிழ்ச்சி எனக்கும் உண்டாகும். ஆனால் சிலை பேசாது; நீயோ ஓயாமல் பேசுவாய். பறவைகளின் குரல் ஒலிகளில் எவ்வளவு பொருள் உண்டோ, அவ்வளவு பொருள்தான் உன் பேச்சுக்களிலும் இருப்பதாக எனக்குத் தோன்றும். ஒன்றும் புரியாவிட்டாலும் நெடுநேரம் கேட்டுக் கொண்டிருப்பேன்...''

''என் பேச்சைப் போலவேதான் நமது சிநேகமும் அப்போது அர்த்தமற்றதாயிருந்தது. கொஞ்ச நாளைக்கெல்லாம், தாங்கள் சக்கரவர்த்தியுடன் தேச யாத்திரை சென்றீர்கள். அப்புறம் மூன்று வருஷ காலம் அரண்ய வீட்டுக்கு நீங்கள் வரவில்லை. மறுபடியும் எப்போதுமே தங்களைப் பார்க்க மாட்டோமோ என்ற ஏக்கம் எனக்குச் சிற்சில சமயம் உண்டாகும். இல்லை, தாங்கள் எப்படியும் ஒருநாள் வருவீர்கள் என்று தைரியம் அடைவேன். தாங்கள் வருவதற்குள்ளே நடனக் கலையிலே சிறந்த தேர்ச்சியடைந்துவிட வேண்டுமென்றும், தாங்கள் திரும்பி வந்ததும் அற்புதமாய் ஆட்டம் ஆடித் தங்களைத் திகைக்கச் செய்ய வேண்டுமென்றும் எண்ணுவேன். தாங்கள் மீண்டும் வரும்போது தங்களுடைய உருவம் எப்படியிருக்குமென்று கற்பனை செய்து பார்க்க அடிக்கடி முயல்வேன். ஆனால் மனத்தில் உருவம் எதுவுமே வராது... கடைசியாக ஒருநாள் தாங்களே வந்துவிட்டீர்கள்! முற்றும் புதிய மனிதராய் வந்தீர்கள்...''

''நீயும் வெகுவாக மாறிப் போயிருந்தாய், சிவகாமி! உருவத்திலும் மாறியிருந்தாய்; குணத்திலும் மாறியிருந்தாய். நான் எதிர்பார்த்தது போல் என்னைக் கண்டதும் நீ ஓடி வந்து என் கரங்களைப் பற்றி வீட்டுக்குள் அழைத்துப்போகவில்லை. தூண் மறைவிலே நாணத்துடன் நின்று கடைக்கண்ணால் என்னைப் பார்த்தாய். 'கலகல'வென்று சிரிப்பதற்கு மாறாகப் புன்முறுவல் செய்தாய்! அந்தக் கடைக்கண் பாணமும்

கள்ளப் புன்னகையும் என்னைக் கொன்றன."

"ஓடி வந்து முகமன் கூறி உங்களை வரவேற்க முடியாமல் ஏதோ ஒன்று என்னைத் தடை செய்தது. முன்னால் வரலாமென்றால் கால் எழவில்லை. ஏதாவது பேசலாமென்றால் நா எழவில்லை. நின்ற இடத்திலேயே நின்றேன். என்னை நானே, 'சிவகாமி! உனக்கு என்ன வந்துவிட்டது?' என்று கேட்டுக்கொண்டேன். அதே சமயத்தில் அப்பாவும், 'சிவகாமி! ஏன் தூண் மறைவில் நிற்கிறாய்? வந்து சக்கரவர்த்திக்கு நமஸ்காரம் செய்! பல்லவ குமாரரைப் பார்! எப்படி ஆஜானுபாகுவாய் வளர்ந்திருக்கிறார்?' என்றார். நான் தயக்கத்துடன் வந்து நமஸ்காரம் செய்தேன். அப்போது சக்கரவர்த்தி, 'ஆயனரே! சிவகாமியும் வளர்ந்து போயிருக்கிறாள்! முதலில் எனக்கு அடையாளமே தெரியவில்லை. கற்சிலை செய்வதோடு நீர் தங்கச் சிலையும் செய்ய ஆரம்பித்து விட்டீரோ என்று நினைத்தேன்' என்றார். இதனால் என்னுடைய நாணம் இன்னும் அதிகமாகிவிட்டது. சற்று நேரம் பேசாமல் நின்றுவிட்டு அப்புறம் வீட்டிலிருந்து நழுவிக் காட்டுக்குள்ளே சென்றேன். தாமரைக் குளக்கரையில் உட்கார்ந்து எனக்கு என்ன வந்துவிட்டது என்று யோசித்துக்கொண்டிருந்தேன்.

"சற்று நேரத்துக்கெல்லாம் என் பின்னால் மிருதுவான காலடிச் சப்தம் கேட்டது. ஆனால் நான் திரும்பிப் பார்க்கவில்லை. தாங்கள் வந்து என் கண்களைப் பொத்தினீர்கள். மூன்று வருஷத்துக்கு முன்னால் இப்படிக் கண்களைப் பொத்தும் போது நான் உங்கள் பெயரைச் சொல்லிக் 'கலகல' வென்று சிரித்துக் கைகளைத் தள்ளி விட்டுத் திரும்பிப் பார்ப்பேன். இப்போது தங்களுடைய கரங்கள் என் கண்களை மூடிய போது, என் தேகம் செயலற்று ஸ்தம்பித்தது. என் உள்ளத்திலோ ஆயிரக்கணக்கான அலைகள் எழுந்து விழுந்து அல்லோலகல்லோலம் செய்தன.

"பிறகு நீங்கள் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து என் கையை உங்கள் கையோடு சேர்த்துக்கொண்டீர்கள். நான் செயலற்றுச் சும்மா இருந்தேன். "சிவகாமி! என் பேரில் கோபமா?' என்றீர்கள். நான் மௌனமாய் உங்களைப் பார்த்தேன். 'ஆமாம், கோபம்தான் போலிருக்கிறது!' என்று கூறி, தங்களுடைய யாத்திரையைப் பற்றி ஏதேதோ சொல்லிக்கொண்டே போனீர்கள். ஆனால், நீங்கள் சொன்னது ஒன்றும் என் காதில் ஏறவேயில்லை. 'நீங்கள் என் அருகில் உட்கார்ந்திருக்கிறீர்கள்; நம் இருவருடைய கரங்களும் ஒன்றுபட்டிருக்கின்றன' என்னும் ஒரு உணர்ச்சிதான் என் மனத்தில் இருந்தது. அந்த நினைவு என்னை வான வெளியிலே தூக்கிக் கொண்டு போய் மேக மண்டலங்களின் மேல், மிதக்கச் செய்தது. தடாகத்துத் தண்ணீரில் மிதக்கும் தாமரை இலைகளின் மேலே நின்று என்னை நடனமாடச் செய்தது. தண்ணீருக்குள்ளே அமுக்கிக் கீழே கீழே கீழே கொண்டு போய் மூச்சு விட முடியாமல் என்னைத் திக்கு முக்காடச் செய்தது...!"

"என்னை எத்தகைய அசடாகச் செய்துவிட்டாய் நீ! நான் சொன்னதையெல்லாம் நீ வெகு கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்ததாக எண்ணியல்லவா என் யாத்திரை அநுபவங்களையெல்லாம் உனக்குச் சொல்லிக் கொண்டிருந்தேன்?"

"கடைசியாக, நீங்கள் விடை பெற்றுச் சென்றபோது, 'சீக்கிரத்தில் திரும்பி வருவேன்' என்று சொல்லிவிட்டுச் சென்றீர்கள். அப்புறம் சில காலம் நான் தரையிலே நடக்கவேயில்லை. ஆனந்த வெள்ளத்தில் மிதந்து கொண்டேயிருந்தேன். என் வாழ்க்கையில் ஒரு மகத்தான அதிசயம் - அபூர்வமான புதுமை - யாருக்

கும் கிடைக்காத அற்புதமான பாக்கியம் கிடைத்து விட்டதாகத் தோன்றியது. அதனால் என் கண்களுக்கு உலகமே புதிய தோற்றம் கொண்டது. வானத்திலும் பூமியிலும் அதுவரை காணாத வனப்புக் களையெல்லாம் கண்டேன். மல்லிகையும் முல்லையும் செண்பகமும் அதற்கு முன் நான் என்றும் அறியாத



நறுமணத்தை அளித்தன. நீலவானம் புதிய மெருகுடன் பிரகாசித்தது. பட்சிகளின் கானத்தில் புதிய இனிமை தென்பட்டது. மூங்கில் காடுகள் காற்றில் அசையும்போது உண்டாகும் சப்தம் முன்னெல்லாம் அழுகைச் சப்தமாக எனக்குத் தோன்றும். இப்போது அதுவே ஆனந்த கீதமாக என் காதில் ஒலித்தது. செடிகளும் கொடிகளும் பட்சிகளும் பூச்சிகளும் ஆயிரம் ஆயிரம் குரல்களில் 'சிவகாமி! நீ கொடுத்து வைத்தவள்; பாக்கியசாலி' என்று ஆதரவோடு சொல்வதாகத் தோன்றியது. இரவிலே வானத்து நட்சத்திரங்கள் முன் எப்போதையும் விடக் குதூகலமாக என்னைப் பார்த்துச் சிரித்தன. வெண்மதியாகிய தந்தத் தோணியின் மேலே அமர்ந்து வானக் கடலில் அந்த விண்மீன்களிடையே சுற்றி வந்தபோது, இப்போது நான் தனியாகச் சுற்றவில்லை; தோணியில் என் அருகில் நீங்களும் வீற்றிருந்தீர்கள்! எல்லையற்ற உள்ளக் கடலிலே தாலாட்டிய சிந்தனை அலைகளுக்கு மத்தியில் மிதந்த வாழ்க்கைத் தெப்பத்தில் நான் மட்டும் தனியாக இருக்கவில்லை; பக்கத்தில் தாங்களும் இருந்தீர்கள். அப்போதெல்லாம் எனக்குத் தானாகவே பாட்டும் பாடத் தோன்றியது. ஆட்டத்தில் அளவில்லாத உற்சாகம் உண்டாயிற்று. நடனக் கலையில் நான் அடைந்த துரிதமான அபிவிருத்தியைக் கண்டு என் தந்தையே பிரமித்துப்போனார்..."

"சக்கரவர்த்தியும் நானும் கூடத்தான் அதிசயம் அடைந்தோம். பரத சாஸ்திரம் எழுதிய முனிவருக்கே எட்டாத நடனக் கலை விந்தைகளெல்லாம் உன் ஆட்டத்தில் வெளியாவதாக என் தந்தை அடிக்கடி சொன்னார். காஞ்சி மாநகரில் இராஜ சபையில் அரங்கேற்றம் நடத்த வேண்டும் என்று அவர்தான் வற்புறுத்தினார்."

"பிரபு! அந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த அரங்கேற்றம் நடக்கும் சமயத்தில் என் மனநிலை மாறிவிட்டது. அந்த மாறுதலை நினைத்தால் எனக்கே அதிசயமாயிருக்கிறது. மூன்று வருஷ பிரிவுக்குப் பிறகு தங்களைப் பார்த்ததும் எனக்குண்டான சந்தோஷம், குதூகலம் எல்லாம் சில நாளைக்குள் எங்கேயோ போய்விட்டன. வரவர, தங்களுடைய நினைவு எனக்கு மகிழ்ச்சியை அளிப்பதற்கு மாறாகத் துன்பத்தைத் தர ஆரம்பித்தது. எதைப் பார்த்தாலும் பிடிக்காமல் போய்விட்டது. சந்திரனும் நட்சத்திரங்களும் வெறுப்பை அளிக்கத் தொடங்கின. பொழுது விடிந்தால் ஏன் விடிகிறது என்று தோன்றியது. இரவு வந்தால் ஏன் இருட்டுகிறது என்று தோன்றியது. பூக்களைக் கண்டால் கசக்கி எறியத் தோன்றியது. என் கண்களிலிருந்து தூக்கம் மாயமாய்ப் போய்விட்டது. அருமையாக வளர்த்த மான் குட்டியையும் கிளியையும் வெறுக்கத் தொடங்கினேன். நடனக் கலையிலே கூட எனக்கு ஆசை குன்றத் தொடங்கியது. 'ஆட்டமும் பாட்டமும் என்ன வேண்டிக்கிடக்கிறது?' என்று எண்ணத் தொடங்கிவிட்டேன்... இந்தச் சமயத்தில்தான் அரங்கேற்றம் நடந்தது; அபசகுனம் போல் அது நடுவில் நின்று போனதில் எனக்குத் திருப்தியே உண்டாயிற்று..."

"அரங்கேற்றத்துக்குப் பிறகு தாமரைக் குளக்கரையில் நாம் சந்தித்த போதும் நீ ஒரு மாதிரி வருத்தத்துடனேதான் பேசினாய். என்னிடம் வாக்குறுதி கேட்டாய்! எனக்கு அதெல்லாம் பெருவியப்பாயிருந்தது..."

"பிரபு! அச்சமயம் தங்களுடைய திருமணத்தைப் பற்றிய பிரஸ்தாபம் என் காதில் விழுந்தது. ஏற்கெனவே வேதனைக்குள்ளாகியிருந்த என் உள்ளத்தில் அது வேலினால் குத்துவது போலிருந்தது. தாங்கள் எனக்கே

## அருள்வாக்கு

'ஆசார்யர்' என்பதுதான் 'ஆசிரியரா'கியிருக்கிறது. தமிழ்நாட்டில் மட்டும் எப்படியோ எழுத்தாளர்களையும் பத்திரிகை எடிடர்களையும் கதாசிரியர், பத்ரிகாசிரியர் என்றெல்லாம் 'ஆசிரியர்' பேர் கொடுத்துச் சொல்வதாக ஏற்பட்டிருக்கிறது. கல்விச் சாலையில் எழுத்தறிவிப் பவன் ஆசிரியன் எனப்படுவதிலிருந்தே எழுத்தைத் தொழிலாகக் கொண்ட ரைட்டர்கள், எடிடர்கள் ஆகியவர்களையும் ஆசிரியரென்று சொல்லும் வழக்கம் வந்துவிட்டது போலிருக்கிறது. அல்லது, நடைமுறை எப்படி இருந்தாலும், கதை எழுதுகிறவர்களும் பத்திரிகை நடத்துகிறவர்களும் ஆசார்ய ஸ்தானத்திலிருந்து கொண்டு நல்லறிவை வளர்ப்பவர்களாக இருக்க வேண்டும் என்ற அபிப்பிராயத்தில் அவர்களை ஆசிரியர்களாகச் சொல்லும் வழக்கம் உண்டாகியிருக்கலாம்.



**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

முழுவதும் உரியவராயிருக்க வேண்டுமென்று கருதினேன். தங்களைப் பார்க்காமல் ஒருகணம் போவது ஒரு யுகமாயிருந்தது. என்னுடைய தூண்டுதலினாலேதான் என் தந்தை காஞ்சிக்கு நாவுக்கரசர் பெருமானைப் பார்ப்பதற்கு வந்தார். அன்று நடந்ததைத் தாங்கள் அறிவீர்கள்..."

"அன்று நடந்ததை மட்டுமல்ல, சிவகாமி! உன் உள்ளத்தின் நிலைமையையும் அன்றைக்குத் தெரிந்து கொண்டேன். அதனாலேதான் மறுநாளே கண்ணபிரானிடம் ஓலை கொடுத்து அனுப்பினேன்!"

"அந்த ஓலையிலிருந்து நான் காஞ்சிக்கு வருவது தங்களுக்கு விருப்பமில்லையென்று அறிந்தேன். தங்களைப் பார்க்காமல் நான் கழித்த எட்டு மாதமும் எனக்கு எட்டு யுகமாயிருந்தது. நாளுக்கு நாள் என் மனவேதனையும் நெஞ்சு வலியும் அதிகமாகி வந்தன. தங்களிடமிருந்து ஓலை வந்த இரண்டொரு தினங்கள் சிறிது உற்சாகமாயிருப்பேன். பிறகு துன்பம் அதிகமாகிவிடும். தங்களை ஒரு நாளும் இனிப் பார்க்கப் போவதில்லையென்றும், என்னுடைய பகற்கனவு ஒரு நாளும் நிறைவேறப் போவதில்லையென்றும் தோன்றும். 'இப்படி எதற்காக உயிர்வாழ வேண்டும்? இந்த வாழ்நாளை முடித்துக் கொள்ளலாம்' என்று அடிக்கடி எண்ணமிடத் தொடங்கினேன். இப்படியே கொஞ்ச நாளிருந்தால் எனக்குப் பைத்தியமே பிடித்து விடலாம் என்று அடிக்கடி தோன்றியது... பிரபு தங்களுடைய விருப்பத்தின்படி அரண்ய வீட்டிலேயே காத்திராமல் ஏன் யாத்திரை கிளம்பி வந்தேன் என்று இப்போது தெரிகிறதா?" என்று சிவகாமி முடித்தாள்.

"தெரிகிறது, சிவகாமி! தெரிகிறது! இப்படிப் பிரளய வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு இரண்டு பேரும் திண்டாட வேண்டும். இந்த ஜன சூன்யமான ஏகாந்த தீவிலே வந்து ஒதுங்க வேண்டும் என்பதற்காகத்தான்! இது தெரியாதா என்ன?" என்று மாமல்லர் சொல்லிக்கொண்டிருக்கும்போதே அந்தத் தீவைப் பற்றிய அவருடைய வார்த்தையைப் பொய்ப்படுத்திக் கொண்டு, சற்றுத் தூரத்தில் வாத்திய கோஷங்களும் ஜனங்களின் ஆரவார ஒலிகளும் கேட்டன. இருவரும் திடுக்கிட்டு எழுந்திருந்தார்கள்.

(தொடரும்)







## திருவாரூர் மாவட்டம் குடவாசல் வட்டம் -

# சர்க்குணேஸ்வரபுரம்(கருவேலி)கிராமத்தில் ஐந்து கோவில்களுக்கு 30.5.2002 அன்று அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேகம்

அன்புடையீர்!

**சற்குணேஸ்வரபுரம் என்கின்ற கருவேலி கிராமத்தில்** எழுந்தருளியிருக்கும் **வினைதீர்க்கும் விநாயகர், அருள்மிகு ஆஞ்சநேயர், காத்தருளும் காளியம்மன், மகா மாரியம்மன், எல்லைதெய்வம் பிடாரியம்மன்** ஆகிய ஐந்து ஆலயங்களுக்கும், திருப்பணி செய்து ஆண்டவன் அருளாலும் ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளின் அருளாசியுடனும், திருவாளர்கள் V.வைத்தியநாதன், Dr. V. கிருஷ்ணமூர்த்தி சகோதரர்களின் முன்னிலையிலும், நிகழும் சித்ரபானு ஆண்டு வைகாசித்திங்கள், 16ம் தேதி (30.05.2002) வியாழக்கிழமை காலை 8.45 மணிக்கு மேல் 10.30 மணிக்குள், கடக லக்னத்தில் **அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம்** நடைபெற உள்ளது. ஆன்மீக அன்பர்கள் அனைவரும் வந்திருந்து கண்டுகளித்து பேரின்ப பெருவாழ்வு பெற்றிட வேண்டுமாய் அன்புடன் வேண்டுகிறோம்.

**அருள்மிகு காளியம்மன் கோவில் திருப்பணி கமிட்டி**
சர்க்குணேஸ்வரபுரம், ஏரவாஞ்சேரி அஞ்சல் - 609 501
குடவாசல் வட்டம் - திருவாரூர் மாவட்டம்.

இப்படிக்கு
**கிராமவாசிகள்**
**சற்குணேஸ்வரபுரம்(கருவேலி)**

# ப.சிதம்பரம் மௌனமாக இருக்கிறாரே?

● பி.ஜெயப்பிரகாஷ், பொள்ளாச்சி

*? 'வானத்திலிருந்து விண்கலம் பூமிக்கு மனிதநேயத்தைத் தேடி வருமானால், அது நிச்சயமாக அம்மாவின் போயஸ் தோட்டத்துக்கு வந்திறங்கும்' - செங்கோட்டையனின் இந்தப் பேச்சு எப்படிங்க...?*

! 'ஓ' போடறோம்! வானத்திலிருந்து விண்கலத்தில் வந்து இறங்குவோருக்குத்தான் அம்மாவின் மனிதநேயம் கிட்டும்; இங்குள்ளவர்களுக்கெல்லாம் வரிச்சுமை, அடாவடி சட்டம், அவமதிப்புத்தான்னு கரீட்டா முடிவு கட்டிப்புட்டார்!

● ஆர். சீதாராம், கோவை - 1

*? சட்டசபையை மாமல்லபுரம் செல்லும் வழியில் 2000 ஏக்கர் நிலப்பரப்புக்கு மாற்றும் திட்டத்துக்கு மாத்திரம் கஜானா காலி இல்லையா?...*

! 'சும்மா அது ஒரு ஐடியாதான்; இப்போதைக்குத் திட்டத்தை நிறைவேற்றப் போவதில்லை'ன்னு அடுத்த நாளே அம்மா ஜகா வாங்கிட்டாங்க. ஆனால், கஜானா காலின்னு சொல்லி, கின்னஸ் சாதனை வரிகளை விதிச்சவங்களுக்கு இப்படி ஒரு உற்பத்திக்கு உதவாத டம்பாச்சாரி திட்டம் தோன்றியதே தப்புதான்.

● கே.முரளிதரன், மதுரை - 10

*? மிகப் பெரிய 120 கம்பெனிகள் ரூ.18,600 கோடி வரி பாக்கி வைத்துள்ளனவாமே?*

! கம்பெனிகள் வரி பாக்கி; கிரிக்கெட் வீரர்கள் வரி பாக்கி; சினிமா துறையினர் வரி பாக்கி... வரி ஏமாத்துறவன் ஏமாத்திக்கிட்டே இருப்பதும் ஒழுங்கா வரி செலுத்துறவன், மேலே மேலே வரி போடுவதால் வதைக்கப்படுவதும் இந்திய ஜனநாயகத்தின் ஸ்பெஷாலிட்டி!

● கோ. வீரராகவன், அறந்தாங்கி ★

*? மூன்று இடைத் தேர்தல்கள் நடக்கவிருக்கிற நேரத்தில் ஸ்டிரைக் தடைச் சட்டத்தை ஜெயலலிதா கொண்டு வருகிறாரே.. அவரது துணிச்சலைத்தானே இது காட்டுகிறது?*

! துணிச்சலா அசட்டுத்துணிச்சலான்னு பார்க்கணும்ங்க. போக்குவரத்துத் துறையில் work to ruleன்னு ஆரம்பிச்சா போகாத, வராத துறையாகிடும்னு பேசிக்கிறாங்களே... இந்த work to rule வியாதி இதர அரசு ஊழியர்களிடமும் பரவினால் அம்போதான்!

● தி. காளீஸ்வரி திலீபன், வத்திராயிருப்பு

*? இலங்கைத் தமிழர் பிரச்னையை விரைவாகத் தீர்க்க, பிரதமர் விக்கிரம சிங்கே தலைமையிலான ஆளுங்கட்சியும் அதிபர் சந்திரிகா தலைமையிலான எதிர்க் கட்சியும் இணக்கமாகச் செயல்பட வேண்டும் என்று ஈழ மக்கள் ஜனநாயக கட்சி எம்.பி., டக்ளஸ் தேவானந்தா கூறியிருப்பது பற்றி...?*

! தேசத்தை எதிர்நோக்கும் பொதுவான பெரிய பிரச்னை எனும்போது ஆளுங்கட்சியும் எதிர்க்கட்சியும் இணைந்து ஒன்றுபட்ட சிந்தனையுடன் செயலாற்றுவதுதான் இலட்சிய ஜனநாயகம். ஆனால் அப்படியெல்லாம் எங்கே நடக்கிறது? எல்லோரும் கட்சி அரசியல் ஆதாயத்தைத்தான் பார்க்கிறார்கள். இந்தியாவிலும் அப்படித்தான். இல்லாவிட்டால் குஜராத் பிரச்னை இவ்வளவு பெரிதாக வளர்ந்திருக்குமா?

● வி. பத்மா, கும்பகோணம்

*? சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மனோகர் ஜோஷி சரியான நபர் அல்ல என்பது என் கருத்து... உங்கள் கருத்து...?*

! பால் தாக்கரேவின் கைப்பாவையாக இயங்குவார் என்ற அச்சத்தில் சொல்கிறீர்கள். அந்தத் தளையிலிருந்து விடுபட்டு நடுநிலைமை வகிக்கும் அதிகாரத்தை, பதவியே அவருக்கு வழங்குகிறது. தாம் சரியான தேர்வு என அவரே நிரூபிக்கலாம்; நிரூபிக்க வேண்டும்.

● ஆர்.விஸ்வநாதன், சென்னை - 4

*? வரப்போகும் ஜனாதிபதி தேர்தலில் நிற்கத் தகுதியானவராக யாரைக் குறிப்பிடுவீர்கள்?*

! நின்று, வெற்றிபெறத் தகுதியானவர்; பி.ஸி.அலெக்ஸாண்டர்.

□ ரூ.100 பரிசு பெறுவர் : டி. சுப்ரமணியன், மெயின் ரோடு, மேலையூர் - 609 107.

★ ரூ.50 பரிசு பெறுபவர் : கோ.வீரராகவன், புதுக்கோட்டை சாலை, அறந்தாங்கி, (முழு விலாசம் தேவை)

# நீங்கள் கேட்டவை - தராசு



• வேண்டாத வம்பு!

• மௌன மகிமை!





• தேர்வும் தீர்வும்!

• இரு கை சாட்டை!

• ஓஹோ போடு!

● ஜி.ஜி.கிருஷ்ணன், விசலூர்

*? 'வேலை செய்யும் எண்ணமே அதிகாரிகளுக்கு இல்லை; சாட்டையால் அடித்து அடித்து வேலை வாங்குகிறேன்' என்கிறாரே முதல்வர் ஜெ...?*

! அதிகாரிகளையும் தன்னையும் ஒரே நேரத்தில் அவமானப்படுத்திக் கொள்கிறார்.

● ஜிஜி. குமார், சென்னை - 29

*? குஜராத்தில் மதத்தின் பெயரால் நடைபெறும் கலவரங்களை டாக்குமென்டரி படமாக எடுத்து நாட்டின் பிற பகுதி மக்களுக்குக் காண்பிக்க வேண்டும் என நந்திதா தாஸ் கூறியுள்ளது சரிதானா...?*

! சரியில்லை; செய்திகள் மிகைப்படுத்தப் படவில்லை என்பதை உணர்த்த சில 'கிளிப்பிங்கு'கள் போடுவதுடன் நிறுத்திக் கொள்ள வேண்டும். அதற்கு அதிகமாக இன்று காண்பிப்பது வன்மத்தை வளர்க்கும். குஜராத் டாக்குமெண்டரி அங்கு அமைதியும் பரஸ்பரம் நல்லுறவும் வளரும் விதத்தில் எடுத்து திரையிடப்பட வேண்டும்.



• தகுதி அடிப்படை...

● டி. சுப்ரமணியன், மேலையூர். ❐

*? தமிழ்நாட்டிலுள்ள 27886 நியாய விலைக் கடைகளையும் மினி சூப்பர் மார்க்கெட்களாக மாற்ற ஜெயலலிதா உத்தரவிட்டுள்ளாராமே...?*

! நியாயம்தான்! நியாய விலைக்கு எதுவும் கிடைக்கப்போவதில்லை என்னும்போது பெயரை மாற்றுவதுதானே நியாயம்!

● உமரி பொ.கணேசன், மும்பை - 37

*? "குஜராத் பிரச்னை உள் விவகாரம்; அதில் வெளிநாடுகள் தலையிடுவதை ஏற்றுக் கொள்ள முடியாது" என்று ஜஸ்வந்த் சிங் கூறியுள்ளாரே...?*

! அடார்னி ஜெனரல் சோலி சொரப்ஜி அதற்குப் பதில் சொல்லியிருக்கிறார் 'குஜராத் பிரச்னை மனித நேயப் பிரச்னை - உலக நாடுகளுக்குக் கருத்து கூற உரிமை உண்டு' என்று. சரியான பார்வை இது.

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி

*? சட்டசபையில் ஒரே நாளில் நிறைவேறிய 23 சட்டங்கள் குறித்து...?*

! இது புல்டோஸர் அரசு!

● டி.கே.சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.

*? ப. சிதம்பரம் மௌனமாக இருக்கிறாரே என்ன காரணம்?*

! பேச வேண்டிய தருணங்களில் மட்டும் பேசினால் அந்தச் சொல்லுக்கு மதிப்பு அதிகம்.

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 21

*? 'பெண்ணியம் என்பது ஒரு பார்வைதான்; ஓர் ஆண் எழுத்தாளர்கூட பெண்ணியவாதியாக இருக்க முடியும்' என்று வாஸந்தி பேசியிருப்பது பற்றி...?*

! ரொம்ப சரி. சில நேரங்களில் பெண்ணியப் பார்வை ஆண்களைப் பொசுக்கி, பிடி சாம்பலாக்குவதுதான் சங்கடம்!



# ஹிந்தியில் பேச

ஒரு தாய் எலி தன் குஞ்சுகளுடன் காற்று வாங்க வெளியில் சென்றது. சிறிது தூரம் சென்றதும் எதிரில் ஒரு பூனையைக் கண்டது. குஞ்சுகள் பயந்து தாயின் காலில் ஒட்டிக் கொண்டன. தாய், குஞ்சுகளை ஆதரவாக அணைத்தபடி 'கவலைப்படாதீர்கள்' என்று கூறி உரத்த குரலில் 'லொள், லொள்' என்று குரைத்தது. எலிக் குஞ்சுகளைப் பார்த்து பாய்ந்து வந்த பூனை திடீரென்று வந்த குரைக்கும் ஒலியைக் கேட்டு அதிர்ச்சியுடன் பின் வாங்கியது. இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு எலிக் குஞ்சுகள் தன் தாயுடன் தப்பி ஓடின. தப்பிய எலிகள் தன் தாயை பெருமிதத்துடன் பார்த்தன. அப்போது தாய் எலி குஞ்சுகளைப் பார்த்து "மற்றவர் மொழியை அறிந்து இருப்பதால் எவ்வளவு லாபம் என்று இப்போது புரிகிறதா?" என்று கேட்டது.

உலகிலேயே அதிக புத்திசாலி யார் தெரியுமா? அதிகமான மொழிகளைக் கற்றவர் யாரோ அவரே அதிக புத்திசாலியாவார். ஏனெனில் அவர்களுக்கு மற்றவர்களிடம் இருந்து முதல்தர செய்தி (FIRST HAND INFORMATION) கிடைக்கிறது. ஒவ்வொரு செய்தியையும் அறிய மொழி பெயர்ப்பாளர்களையும், சார்ந்திருக்க வேண்டாம் பாருங்கள். அது மட்டுமில்லை. மற்றவர்களின் மனதில் இடம் பிடிக்க விரும்பினால் அதற்கான எளிய வழி அவர்கள் மொழியில் பேசுவது ஒன்றேயாகும். உதாரணத்திற்கு நாம் ஜபல்பூர் செல்வதாக வைத்துக் கொள்வோம். நாலாபக்கமும் ஹிந்தியிலேயே பேசுகிறார்கள். திடீர் என்று ஒருவர் உங்களிடம் வந்து "சௌக்கியமா எப்படியிருக்கிறீர்கள்?" என்கிறார். உங்களுக்கு எப்படியிருக்கும். காதில் தேன் வந்து பாய்வது போல் இருக்குமல்லவா?



• பயிற்சியில் தேறியவர்களுக்கு ஆண்டு தோறும் நடக்கும் 'பட்டமளிப்பு விழாவில்' சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. Dr.கிரண்பேடி I.P.S., சென்ற பட்டமளிப்பு விழாவில் முக்கிய விருந்தினராக கலந்து கொண்டு சான்றிதழ்களை வழங்கினார். முதல் மதிப்பெண் வாங்கியவர்களுக்கு தங்கப் பதக்கங்கள் வழங்கப்பட்டன.

பாரத நாட்டை சேர்ந்த நாம் நம் நாட்டை முழுமையாக அறிந்து கொள்ள, நம் நாட்டின் வளங்களை முழுமையாக அனுபவிக்க குறைந்தது ஐந்து மொழிகளாவது அறிந்திருத்தல் அவசியமாகும். அதிலும் ஹிந்தி மொழி அறிந்திருத்தல் மிகமிக அவசியமாகும். ஹிந்தி மொழி அறிந்திருப்பதில் ஒரு வசதி இருக்கிறது தெரியுமா? ஹிந்தி மொழி அறிந்தவர்களால் பஞ்சாபி, மராடி, ஸமஸ்கிருதம், குஜராதி, வங்காளம் போன்ற மொழிகளை எளிதில் புரிந்து கொள்ள முடியும். தவிர ஹிந்தி - தமிழ் இவ்விரண்டு மொழிகளும் அறிந்தவர்களால் தென்னிந்திய மொழிகளையும் (அதா வது மலையாளம், கன்னடம், தெலுங்கு போன்ற மொழிகளையும்) எளிதில் கற்க முடியும். அங்குள்ளவர்களுடன் நன்கு உரையாடி அவர்களின் மனதை வெற்றி கொள்ள முடியும்.

இவற்றையெல்லாம் மனதில் கொண்டு பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கப் பயிற்சி மையம் அஞ்சல் வழியில் ஹிந்தியில் பேச கற்பிக்க ஏற்பாடு செய்து

# அஞ்சல் வழிக் கல்வி

உள்ளது. இது பற்றிய விபரங்கள் பின் வருமாறு :

1) படிப்பின் பெயர் **DIPLOMA IN CONVERSATIONAL HINDI**

2) இப்பயிற்சி ஆங்கிலம் மற்றும் தமிழ் மூலமாக நடத்தப்படுகின்றது

3) பயிற்சி காலம் : ஆறு மாதங்கள் (ஜனவரி முதல் ஜூன் முடிய மற்றும் ஜூலை முதல் டிசம்பர் முடிய)

4) தகுதி : ஹிந்தி மொழி அகர வரிசையிலிருந்து கற்பிக்கப்படுவதால் ஒரு புதிய மொழியைக் கற்க ஆர்வமுடைய எவரும் இப்பயிற்சியில் சேரலாம்.

5) பாடதிட்டம் : ஹிந்தி எழுத்துக்கள் உச்சரிப்பு, சொற்கள் உச்சரிப்பு, பேச்சு மொழிக்குத் தேவையான இலக்கணங்கள், பல சூழ்நிலைகளுக்குத் தேவையான பயிற்சிகள்.

6) பயிற்சி அமைப்பு : ஒவ்வொரு மாதமும் அச்சிடப்பட்ட பாடங்கள், பயிற்சி பெறும் அனைவருக்கும் அனுப்பப்படும். ஒவ்வொரு பயிற்சியின் இறுதியிலும் பயிற்சிகள் அளிக்கப்பட்டிருக்கும். இப்பயிற்சிகளை பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். இப்பாடங்கள் திருத்தி திருப்பி அனுப்பவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. பாட சம்பந்தப்பட்ட சந்தேகங்களுக்கும், மொழி சம்பந்தப்பட்ட சந்தேகங்களுக்கும் கடிதம் மூலமாகவோ, தொலைபேசி மூலமாகவோ விளக்கமளிக்கப்படுகின்றன. தமிழ் மூலம் படிப்பவர்களுக்கு "பேச்சு மொழி சொற்களஞ்சியம்" என்ற அகராதியும், ஆங்கிலம் மூலம் பயில்பவர்களுக்கு CONVERSATION WORD FINDER என்ற நூலும் வழங்கப்படும்.

7) நேர்முக வகுப்புகள் ஒவ்வொரு மாத இறுதியிலும், ஞாயிற்றுக் கிழமைகளில் சென்னையில் (காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை) நேர்முக வகுப்புகள் நடத்தப்படுகின்றன. இப்பயிற்சிக்கு வருபவர்களுக்கு செவிக்கு மட்டுமின்றி வயிற்றுக்கும் ஈயப்படுகின்றது. சென்னைக்கு வர முடியாதவர் களின் வசதிக்காக திருச்சி, மதுரை, கோவை, ஹைதராபாத், டில்லி, மும்பை, பங்களூர் ஆகிய இடங்களில் மொழிவள மேம்பாட்டு மையங்கள் உள்ளன. இவ்விடங்களை அணுகி பயிற்சி பெறலாம். நேர்முக வகுப்புகளில் ஹிந்தியில் பேசுவதற்கு பயிற்சி அளிக்கப்படுகின்றது.

8) தேர்வு : பயிற்சி இறுதியில் (அதாவது ஜூன் மாத இறுதியிலும், டிசம்பர் மாத இறுதியிலும் தேர்வு நடத்தப்படும். தேர்வில் வெற்றி பெற்றவர்களுக்கு DIPLOMA IN CONVERSATIONAL HINDI என்ற சான்றிதழ் வழங்கப்படும். இந்த சான்றிதழ்கள் வருடந்தோறும் நடக்கும் பட்டமளிப்பு விழாவில் வழங்கப்படுகின்றன.

9) பயிற்சிக் கட்டணம் : ரூ.500/- (நேர்முக வகுப்புகள், தேர்வுக் கட்டணம் அனைத்தும் இதில் அடங்கும்)

10) ஒலி நாடாக்கள் : பேச்சு மொழி ஹிந்தி உச்சரிப்பு பயிற்சிக்காக இரட்டை ஒலி நாடாக்களும் (TWIN CASSETTES) தயாரிக்கப்பட்டுள்ளன. இவை ஆங்கிலம் மற்றும் தமிழ் இரு மொழிகளிலும் உள்ளன. இவ்வொலி நாடாக்களுடன் துணைநூலும் (COMPANION BOOKLET) இருப்பதால், ஒலி நாடாவை கேட்டபடி துணை நூலைப் பார்த்து உச்சரிப்புகளை நன்கு புரிந்து கொள்ளலாம். இவ்வொலி நாடாக்களைப் பெற விரும்புபவர்கள் ரூ.100க்கான உள்ளூர் காசோலை அல்லது DEMAND DRAFT அனுப்பி பெறலாம். ஜூலை மாதம் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புபவர்கள் கீழ்கண்ட முகவரிக்கு ரூ.100க்கான உள்ளூர் காசோலை அல்லது DEMAND DRAFT **SBIOA INSTITUTE, CHENNAI** என்ற பெயரில் சுய விலாசமிட்ட ரூ.6/-க்கான தபால் தலை ஒட்டப்பட்ட உறையுடன் அனுப்பி விண்ணப்ப படிவத்தைப் பெறலாம். (அனுப்பும்போது பயிற்று மொழியைக் குறிப்பிட்டு எழுதவும்)

**THE EXECUTIVE DIRECTOR,**
**SBIOA INSTITUTE,**
**229, N.S.C. BOSE ROAD, MERCANTILE PLAZA, II FLOOR, P.B.NO.1279, CHENNAI - 600 001.**
**PHONE : 5340226 FAX : 5261013**

இந்த ரூ.100/- பயிற்சிக் கட்டணத்திலிருந்து குறைத்துக் கொள்ளப்படும்.

# பொய்ப்பழில்



## வாஸந்தி

**கா**ண்டீனின் பளீரென்ற சுத்தம் புலன்களைத் தாக்கிற்று. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சாப்பாட்டு ட்ரேக்களும் வரிசையாக உள்ளேயிருந்து வந்த பதார்த்தங்களும் சலவை செய்த மடிப்புக் கலையாத ஒழுங்கை நினைவு படுத்தின. ஆஸ்பத்திரி கான்டீனுக்குப் பொருந்தாத ஒரு மெல்லிய சந்தோஷக் கலகலப்பு இருந்தது. இளசுகள் இரண்டு மேஜையில் அமர்ந்து சிரித்தபடி கோக்கை உறிஞ்சுவது காரணமாக இருக்கலாம்.

"என்ன இருக்கிறது?" என்று சரவணன் கேட்டார் ஆங்கிலத்தில். கம்ப்யூட்டரில் பில்லைத் தட்டிக்கொண்டிருந்த ஆள்,

'நார்த் இண்டியன் மீல்ஸ், சவுத் இண்டியன் மீல்ஸ், உப்புமா, இட்லி, பூரி, பாஜி' என்று அடுக்கினான்.

சரவணன் காமாட்சியைப் பார்த்து 'என்ன சாப்பிடறே? சவுத் இண்டியன் சாப்பாடு கிடைக்குமாம். சாப்பாட்டை முடிச்சுக்குவமா? ஒரு மணி ஆகப் போகுது' என்றார்.

"இங்கெல்லாம் எப்படியிருக்குமோ சாப்பாடு!" என்று அவள் மூக்கைச் சுளித்தாள்.

"கிடைச்சதைச் சாப்பிட வேண்டியதுதான். இங்கே சாதமும் சாம்பாரும் கிடைக்கும்."

"சரி சொல்லுங்க" என்று அவள் காலியாக இருந்த மூலைக்குச் சென்று அமர்ந்து கொண்டாள். எதிர்த்தாற்போல் இருந்த மேஜையில் ஜீன்ஸும் இறுக்கமான டீ ஷர்ட்டில் விம்மிய மார்புமாக மூன்று இளம் பெண்கள் அதே வயது ஆண்களுடன் உட்கார்ந்திருந்தார்கள். கூச்சமில்லாமல் ஒருவரையொருவர் தொட்டுப் பேசிச் சிரித்தார்கள் ஆஸ்பத்திரிக்கு வந்த நினைவு இல்லாதவர்கள் போல. ப்ரெட் ஸாண்ட்விச்சும் கோக்குமாக மாறி மாறி சாப்பிட்டார்கள். பெண்கள் மொழுமொழுவென்று வெனேரென்று மெழுகு பொம்மைகள் போல் இருந்தார்கள். நகை நட்டு போடாவிட்டாலும் பணக்காரப் பூச்சு மினுமினுத்தது. காமாட்சிக்கு அந்தப் பெண்ணின் முகம் நினைவுக்கு வந்தது. என்னவோ பெயர் சொன்னான் அந்தப் பிள்ளை. ஞாபகத்துக்கு வரவில்லை. பெயரைக் கேட்டபோது என்ன காரணத்தாலோ மகாபாரதம் நினைவுக்கு வந்தது. திரௌபதியா? இல்லை. அப்படிக் காதில் விழுந்ததாகத் தோன்றவில்லை. பார்க்க மூக்கும் முழியுமாகத்தான் இருந்தாள். இந்தப்

# பூத்த நிஜம்

பெண்களைப் போல வெளுப்பு இல்லாவிட்டாலும், நல்ல நிறம்தான். எந்த மாநிலத்தைச் சேர்ந்தவள் என்று அறுதியிட்டுக் கூற முடியாத முகவெட்டு. அதற்குத் தகுந்தாற்போல் அலங்காரம். கழுத்தும் காதும் கையும் மூளியாக இருப்பது ஃபேஷனோ என்னவோ. அதுக்காகக் கழுத்துமா வெறிச்சோடியிருக்கணும்? தாலியே கட்டாத ரெஜிஸ்டர் கல்யாணமா? க்ரிஸ்டியனோ என்னவோ. 'தமிழ் பேசற பொண்ணு'. தமிழ் பேசினா ஆச்சா? யாருமில்லாத அநாதை. 'உருவி விட்டாப்பலே மூளியா' நிக்குது, என் மருமகள்!' காமாட்சிக்கு இலேசாக மனசு அதிர்ந்தது. அடி வயிற்றைச் சங்கடப்படுத்தியது. ராஜா தங்களுக்குத் தெரிவிக்காமல் திருமணம் செய்துகொண்டிருக்கிறான் என்கிற விஷயம் இதுவரை அவளுக்கு ஏற்பட்டிராத அவமானம் போலத் தோன்றிற்று. நாபியிலிருந்து துக்கம் பந்தாகச் சுருண்டு எழுந்தது. 'அவர்தான் உன்னோட சண்டை போட்டார். நா என்னடா செஞ்சேன் உனக்கு? எனக்கு நீ ரகசியமா ஃபோன் பண்ணிச் சொல்லியிருக்கலாமில்லே? உன்னைப் பெத்தவ, நா உனக்கு அன்னியமா யிட்டனா? உயிரோட இருக்கையிலேயே சமாதி கட்டிட்டியா?''

''யாரு யாருக்குச் சமாதி கட்டினாங்க?'' ராஜா கேட்டதுபோல அவள் திடுக்கிட்டு நிமிர்ந்தாள். பளபளவென்று மின்னிய மேடையில் அடுக்கப்பட்டிருந்த எவர்சில்வர் ட்ரே இரண்டை ஏந்திப் பிடித்தபடி சரவணன் பதார்த்தங்களை வாங்கிக் கொண்டிருந்தார். எழுந்து சென்று ஒரு ட்ரேவை வாங்கிக் கொள்ளலாமா என்று யோசித்தபடி அவள் எழுந்தாள். அதற்குள் சரவணன் சாப்பாடு அடங்கிய ஒரு ட்ரேயை எடுத்து வந்து அவளிடம் கொடுத்தார். திருமணமாகி இந்த முப்பத்தி ஏழு ஆண்டுகளில் அவர் அவளுக்குச் செய்யும் முதல் சேவை என்று தன்னிச்சையாக எண்ணம் ஓடியது. ராஜா இவரை மாதிரி இருக்கமாட்டான். என்ன மாதிரி ஓட்டம் ஓடறானோ, அதான் முப்பத்து அஞ்சு வயசிலே மாரடைப்பு வந்து படுத்திருக்கான். அந்தப் பொண்ணு ஜாதகத்திலே என்ன தோஷமோ? குழந்தை பிழைச்சு எழுவானா? கண்ணில் பெருகிய நீரை அவள் அவசரமாகத் துடைத்துக்கொண்டாள். தம்ளரில் இருந்த குளிர்ந்த நீரை ஒரு மடக்கு விழுங்கினாள். சரவணன் வந்து அமர்ந்தார். இலேசான திருப்தியுடன் சொன்னார்.

''பரவாயில்லே. மெட்ராஸ்காரர் கட்டின ஆஸ்பத்திரிங்கறதனாலே, மெட்ராஸ் சாப்பாடு ஏற்பாடா கிடைக்குது. உப்புமா இட்லிகூட பார்த்தா நல்லாத்தான் இருக்கு. ராத்திரிக்கு வேணா டிபன் சாப்பிடுவோம்.''

பிள்ளை சாகக் கிடக்கிறான் என்பதையே இவர் மறந்துபோனாரா என்று அவள் யோசித்

7



தான்.

ஆனால் இன்று ப்ளேனில் காலை உணவை இருவருமே சாப்பிடாததால் அவளுக்கும் பசித்தது. இரண்டு வருஷமாகப் பிள்ளையின் நினைவே இல்லாமல் தானே வேளா வேளைக்கு வயிற்றுக்குக் கொட்டிக் கொண்டோம் என்று நினைத்தபடி,

"ஏன் கெஸ்ட் ஹவுஸிலே ஒண்ணும் கிடைக்காதா?" என்றாள்.

"கிடைக்கும். வடக்கத்தி சமையலா இருக்கும். உனக்கு அது பரவாயில்லேன்னா சரி தான்..."

"ஏதோ பசிக்குச் சாப்பிடணும். எதுவா இருந்தா என்ன?"

"அப்ப சரி."

சாம்பாரும் பொரியலும் ருசியாகவே இருந்தன. சாதமும் மிருதுவாக இருந்தது வீட்டில் செய்வது போல. சரவணன் சுற்றுச் சூழலை மறந்தவர் போல சாப்பாட்டில் லயித்திருந்தார்.

"சாப்பாடு நல்லாயிருக்கு இல்லே?"

"ஆமாம். மோசமில்லே" என்றாள்.

சரவணன் அவளை நிமிர்ந்து பார்த்து இலேசாகச் சிரித்தார்.

"இந்த இடத்திலே யாராவது உன்னை மாதிரி நகையும் பட்டுப்புடவையுமா வந்திருக்காங்களான்னு பாரு."

அவளுக்குச் சுரீரென்று கோபம் வந்தது. "நா தினசரி போட்டுக்கறதைத் தான் போட்டுக்கிட்டு வந்திருக்கேன். இங்கே வரதுக்காக நா வேஷத்தை மாத்திக்க முடியுமா? நம்ம பழக்கத்தைத்தான் விட்டுட முடியுமா? கழுத்து மூளியா அந்தப் பொண் ராஜாவுடைய பெண்டாட்டின்னு நிக்கறதைப் பார்த்து எனக்கென்னவோ சொரேல்னுதான் ஆயிடுச்சு."

சரவணன் பதில் ஏதும் சொல்லாமல் சாப்பாட்டைத் தொடர்ந்தார். கிண்ணத்தில் இருந்த ரஸத்தைச் சாதத்தில் விடும்போது சகுந்தலாவின் முகம் அதில் மிதந்தது. லட்சணமான முகம் என்பது மட்டுமே ஞாபகம். மூளிக்கழுத்தா மூளிக்காதா என்று நினைவில்லை. ராஜாவின் மனைவி என்று விவேக் சொன்னதும் தனக்குள் மூண்ட கோபம் நினைவுக்கு வந்தது. இப்போது யோசித்துப் பார்க்கும் போது கோபம் ஏன் வந்தது என்று புரியவில்லை. 'எனக்கும் உனக்கும் உறவு இல்லே இனிமே' என்று கைகழுவியபிறகு, அவனுடைய நினைவையே வலுக்கட்டாயமாக ஒதுக்கிய பிறகு, அவன் யாரைக் கல்யாணம் செய்து கொண்டால் நமக்கு என்ன என்று இன்று காலைவரை வீம்புடன் இருந்த மனசு, வீம்பை மீறி எகிறிய நினைப்பை 'எனக்கு மகன் இல்லே அவன்' என்று ராட்சஸ ஹுங்காரமிட்டு அடக்கிய ரௌத்திரம் பழகிய மனசு. அதை ஒரு

"அந்த வீட்டுக்காரர் சரியான பயந்தாங்கொள்ளி."

"அப்படியா?"

"ஆமாம். நாய் ஜாக்கிரதைன்னு இவரே எழுதி மாட்டிட்டு, பயந்து போய் வீட்டுக்குள்ளே நுழையாம வெளியிலே நிற்கிறாருன்னா பாரேன்!"

- பர்வதவர்த்தினி



குரூரத் திருப்தியுடன் திருப்பித் திருப்பி வெளிப்படுத்திய வாய் இது.

அவருக்கும் ராஜாவுக்கும் ஏற்பட்ட மனஸ்தாபத்தைப் பற்றி அறியாமல் கிராமத்திலிருந்து வந்த மணியக்காரர் ஜம்புலிங்கம், "நம்ம ராஜாவுக்கு அருமையான வரன் பார்த்திருக்கேன்" என்று சாப்பாட்டுக்கூடத்தை ஒட்டிய ரேழியில் இருந்த ஊஞ்சலை நெம்பியபடி காமாட்சி கொடுத்த காப்பியைக் குடித்துவிட்டு வெற்றிலைக் காவிப்பல்லைக் காட்டிச் சிரித்தபோது,



"ராஜாவா?" என்றார் சண்முகம் இறுகிய முகத்தோடு. "அவன் செத்து ஒரு வருஷமாகிறது."

ஊஞ்சலை நெம்பிய கால் சரேலென்று நின்றது. நின்ற அதிர்ச்சியில் ஜம்புலிங்கத்தின் அங்கவஸ்திரம் நழுவியது.

"என்னது?" என்றார் விழிகள் பிதுங்க. "என்னம்மா என்ன சொல்றாங்க அண்ணன்?"

காமாட்சி "என்னை ஒன்றும் கேட்காதே" என்று வலது கையால் தலையில் அடித்துக் கொண்டு இடது கையால் புடைவைத் தலைப்பைப் பிரித்து கண்ணைக் கசக்கினாள்.

சரவணன் கோபத்தை வரவழைத்தார். உணர்வுபூர்வமாகக் குரலை உயர்த்தினார்.

"ஏண்டா ஜம்பு, நா சொல்றேன், காதில் விழல்லியா? அவளை என்ன கேள்வி? ராஜா செத்தாச்சு."

"சிவ சிவா!" என்றார் ஜம்புலிங்கம், காமாட்சி செய்த ஜாடையில் விஷயத்தைப் புரிந்துகொண்டு, "அப்படியெல்லாம் சொல்லப்படாது. ஆகாது."

"அடேய், நீ பேசாதே. ஆகிறதும் ஆகாததும் எனக்குத் தெரியும்."

மறுபடியும் காமாட்சி ஏதோ ஜாடை செய்ய, ஜம்புலிங்கம் மௌனமாகச் சற்று நேரம் உட்கார்ந்திருந்தார்.

"வேற ஏதாவது பேச இருந்தா பேசு. எனக்கு வேலை இருக்கு."

ஜம்பு குனிந்தபடியே "வேற ஒண்ணும் இல்லே" என்று தலையாட்டினார். சரவணன் வீம்புடன் தன் அறைக்குச் சென்று காதைத் தீட்டிக்கொண்டு உட்கார்ந்தார். காமாட்சி ஏதாவது சொல்லாமல் இருக்க மாட்டாள் என்று காத்திருந்தார். ஆனால் ஜம்புவின் குரல்தான் பிசுபிசுத்துக் கேட்டது.

"இதென்னம்மா அநியாயம்? எத்தனை சந்தோஷமா வந்தேன்ங்கறீங்க? அருமையான வரன். பொண்ணு சொக்கத் தங்கம். உண்மையிலேயே தங்கத்தாலே இழைக்கற இடம் - படிச்ச பொண்ணு. ஒரே வாரிசு அத்தனை ஆஸ்திக்கும். அண்ணன் என்னாடன்னா இப்படிப் பேசறாங்க?"

சரவணன் விருவிருவென்று ஊஞ்சலுக்கருகில் சென்று நின்றார். நெற்றி நரம்பு புடைத்திருந்தது. கன்னங்கள் பளபளத்தன. ஜம்பு சப்தநாடியும் ஒடுங்கியவராய் எதிரில் நின்றவரின் கண்ணில் தெரிந்த வெறுப்பைக் கண்டு அதிர்ந்தவராய் வாயை மூடிக்கொண்டார்.

"ஜம்பு, இளம்பு!" என்றார் சரவணன். "சொக்கத் தங்கத்தை வேற எங்கேயாவது கொண்டு போய்க் கொடு. இங்கே பிள்ளையே இல்லேங்கறேன். வரனைப் பத்தி பேசறது அபத்தமாயில்லே? பொம்பளைக் கிட்டப் பேசி வத்தி

"என் சித்தப்பாவுக்கு நிலம், வீடுன்னு ஏகப்பட்ட சொத்து!"

"அதுக்காக 'என் அன்புள்ள சொத்தப்பாவுக்கு'ன்னு நீங்க லெட்டரை ஆரம்பிச்சிருக்கிறது நல்லா இல்லே!"

— உ. ராஜாஜி

வைக்காதே. பிள்ளைக்குத் தகனம் பண்ணி தண்ணி வார்த்தாச்சு!"

"ஈசுவரா!" என்றார் ஜம்புலிங்கம்.

"ஈசுவரா" என்றார் சரவணன். கிண்ணத்திலிருந்த தயிரை எடுத்துச் சோற்றில் விட்டபடி, பிசையும்போது விரல்கள் இலேசாக நடுங்கின. கவளத்தை வாயில் போடத் தோன்றாமல் தன்னைச் சுற்றி ஒரு பார்வை பார்த்தார். இத்தனை குசுர மாக இங்கிருப்பவர் யாராவது பேசியிருப்பார்களா என்று யோசித்தார். அந்த இளசுகளைத் தவிர மற்றவர்கள் ஏதோ சுமை தூக்கியவர்கள் போலத் தலை குனிந்திருந்தார்கள். ஒருவர் சாகக் கிடக்கையில் அவருடன் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோருக்குமே ஏதாவது ஒரு வகையில் குற்ற உணர்வு இருக்கும் என்று தோன்றிற்று. அப்பனுக்கும் பிள்ளைக்குமான சண்டை மனுஷன் ஜனிச்ச காலத்திலிருந்து வருவது.

சரவணன் கம்பீரமாக நிமிர்ந்தார். ஆனால் காமாட்சிக்கு மறக்காது. குத்திக் காட்டாமல் அவளால் இருக்க முடியாது. அவளைச் சமானித்தாக வேண்டும். அவர்கள் இருவருக்குமிடையேயான உறவு நிலை இன்னும் மோசமாகலாம் என்று ஆயாசமேற்பட்டது. இரண்டு பேரும் ஒருத்தரையொருத்தர் வெறுத்துக்கிட்டே சாகப் போறோம். தனக்குத் தெரிவிக்காமல், பிள்ளை கல்யாணம் செய்துகொண்டான் என்பதை காமாட்சியால் ஏற்க முடியவில்லை என்று அவருக்குப் புரிந்தது. சொக்கத் தங்கம் கை நழுவிப் போன ஆத்திரத்தில் இருப்பவள் அவள்.

"ஏதாவது சொன்னியா என்ன?"

"இல்லையே! என்றாள் அவள் ஏதோ ஞாபகத்தில்.

"அந்தப் பெண் சகுந்தலாவைப் பத்தி ஏதோ சொன்னமாதிரி இருந்தது."

"சகுந்தலாவா? ஓ, அதுதான் அந்தப் பெண்ணோடப் பேரா? எனக்கு மறந்து போச்சு. மகாபாரதத்திலே வர்ற பேருன்னு ஞாபகம் இருந்தது. திரௌபதியா சுபத்ராவான்னு யோசிச்சுக்கிட்டிருந்தேன். அவளைப் பத்தி என்ன?"

"நீதான் ஏதோ சொல்லிக்கிட்டிருந்தே!"

"என்னத்தைச் சொல்றது? ஒரு வார்த்தை பேசிக்கிடல்லியே? அவனா பிடிச்சிருக்கான். நினைவில்லாம அவன் படுத்திருக்கையிலே அது அந்நியமாத்தான் படுது. என்ன ஜாதி ஜனம் ஒண்ணும் தெரியல்லே!"

அவள் குரலில் அசூயைத் தொனிப்பதாக அவர் நினைத்தார்.

"குழந்தை இருக்கு. மறந்துராதே!"

அவள் பேசாமல் ஏதோ யோசனையில் ஆழ்ந்தவள் போல சாப்பிட்டாள்.

அவருடைய மகன் ஒரு பெண்ணைக் காதலித்துக் கல்யாணம் செய்துகொண்டிருக்கிறான் என்பது ஒரு விநோதமான உணர்வை அவருள் ஏற்படுத்தியது. அத்தகைய பந்தம் வித்தியாசமானதாக இருக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டார். அந்தப் பெண்ணின் பரிதவிப்பில் புரிந்தது. அவளும் ராஜாவுமே அடங்கும் உறவு வட்டம். அதில் அவருக்கோ காமாட்சிக்கோ இடமில்லை.

"அவன் நாளைக்கே கண்முழிச்சு நல்லா ஆயிட்டான்னா நாம கிளம்பப் போறோம், வந்த காரியம் முடிஞ்சதுன்னு. அவனாச்சு அவன் குடும்பமாச்சு!"

காமாட்சி பதிலே பேசவில்லை. ஆனால் கண்களிலிருந்து நீர் வந்தது. மூக்கிலிருந்து நீர் வழிவதை அவள் நாப்கின் அளவுக்குக் கொண்டு வந்திருந்த சின்னத் துண்டால் ஆக்ரோஷமாகத் துடைத்துக்கொள்ளும்போது வைர மூக்குத்திகள் நட்சத்திரங்களைத் தெறித்தன. அவளது அழுகை அவரைச் சங்கடப்படுத்தியது. 'ராஜாவுக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால்' என்ற கேள்வி தயக்கத்துடன் எட்டிப் பார்த்தது. 'தகனம் செஞ்சு தண்ணி வார்த்தாச்சு' என்ற கேடு கெட்ட ஆங்காரம் பலித்துப் போகலாம். பிறகு? அந்தப் பெண்ணை என்ன செய்வது? அந்தக் குழந்தை, அவருடைய ஜீன்களைச் சுமக்கும் குழந்தையை என்ன செய்வது? தனக்குத் தகவல் தெரிவித்ததற்கு உள்ளார்ந்த காரணங்கள் இருக்கலாம். அந்தப் பெண் அநாதை. அவளே முன்யோசனையுடன் தகவல் தெரிவிக்கச் சொல்லியிருக்கலாம்.'

"இதப்பார் காமாட்சி" என்றார் சரவணன் தெளிவாக. "சும்மா உணர்ச்சி வசப்படறதிலே ஒரு பிரயோசனமும் இல்லே. பெத்த கடனுக்கு வந்து பார்த்துட்டம். அவன் நம்பளைக் கூப்பிடச் சொல்லல்லே. நாளைக்குக் கண் முழிச்சான்னா ஏன் வந்தீங்கன்னு அவன் கேக்கலாம். பழைய கசப்பெல்லாம் திரும்பி வரும். இனிமே பய

**"சீக்கிரம் வெளிநடப்பு செய்துட்டு வாங்க. வீட்டுல வேலை நிறைய இருக்கு."**
**— எஸ். மோகன்**

மில்லேன்னு தெரிஞ்சதும் கிளம்பிப் போயிடணும் வந்த மாதிரியே. அந்தப் பெண்ணுக்கும் நமக்கும் இடையே எந்த ஒட்டுறவும் இல்லே. செலவுக்கு ஏதாவது பணம் கொடுத்துட்டுப் போகலாம். அதுக்கு மேல எங்கிட்டேந்து எதையும் எதிர் பார்க்காதே."

ராஜாவின் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டால் என்ன செய்வது என்கிற கேள்வியை இருவரும் தவிர்த்தார்கள். அதற்கும் என்னிடம் திட்டம் இருக்கு என்பது போல அவர் சொன்னார்.

"உனக்குக்கூட தெரிவிக்க வேண்டிய அவசியமில்லேன்னு, தானே பார்த்து கல்யாணம் பண்ணிக்கிட்டிருக்கான். நமக்கும் அந்த உறவுக்கும் சம்பந்தமில்லேன்னு முகத்திலே அரைஞ்ச மாதிரி, நாம ஒட்டிக்க வேண்டிய தேவையில்லே. வயசான காலத்திலே எந்தப் பொறுப்பையும் எடுத்துக்க வேண்டிய அவசியமில்லே."



காமாட்சி ஏதும் பேசவில்லை. சொந்தக் கருத்து ஏதும் உதிக்காத குழப்பத்தில் இருந்தவள் போல் இருந்தாள். இவளுக்கு ஏற்கெனவே அந்தப் பெண்ணிடம் விரோதம் ஏற்பட்டுப் போனதாகப் பட்டது. பெயர்கூட நினைவில் தங்காத அளவுக்கு... திரௌபதியா சுபத்ராவா என்று குழம்பும் அளவுக்கு. ஏதோ ஒரு பெயர். மகாபாரதத்தில் வரும் பெயர். நல்ல பெண்கள். அவருக்குச் சிரிப்பு வந்தது. 'சகுந்தலா' என்று விவேக் சொன்னதும் அவருக்குக் காளிதாசனின் நினைவு வந்தது. விநாடித் துகள்களில் கண்வரின் ஆசிரமமும் மான்களும் மலர்களும் தேன் உறிஞ்சும் வண்டுகளும் காட்சியளித்தன. கல்லூரியில் சம்ஸ்க்ருதத்தில் படித்து காதல் காவியத்தில் கிறங்கியதும் கனவு கண்டதும், காமாட்சியைக் கைப்பிடித்த பிறகு யதார்த்தத்துக்கு விழித்துக்கொண்டதும் நினைவுக்கு வந்தன. அந்த விநாடித் துகள்களில் விளக்க முடியாத ஒரு அருவை, தன்னுள் படர்ந்ததை இப்போது உணர முடிந்தது.

அவர்கள் நிதானமாகச் சாப்பிட்டார்கள். திரும்பிச் சென்றால் சகுந்தலாவைச் சந்திக்க நேரும் என்று தயங்கியவர்கள் போல, சர்க்கரைப் பாகில் பிசறிய சோம்பை மென்றபடி கிட்டத்தட்ட ஒரு மணி நேரத்துக்குப் பிறகு அவர்கள் ஐ.ஸி.யு இருந்த இடத்திற்கு வந்தபோது சகுந்தலா கிளம்பிப் போயிருந்தாள். விவேக்கையும் காணவில்லை.

"நாம கெஸ்ட் ஹவுசுக்குப் போவம்" என்றார் சரவணன். "சாயந்திரம் வரலாம்."

"ஒரு தடவை ராஜாவைப் பார்த்துட்டு வந்துடறேன்" என்று காமாட்சி கிளம்பினாள். அவர் தயங்கியபடி அவளைப் பின்தொடர்ந்தார். வெளியில் ஒரு புது ஆள் உட்கார்ந்திருந்தான். "யாரும் உள்ளே போகக்கூடாது" என்றான் ஹிந்தியில்.

"காலையில் விட்டார்களே?" என்றார் சரவணன்.

"அதான் தப்பு. நாலு நாட்களா நா லீவிலே போயிருந்தேன். பதிலுக்கு வந்த ஆள் புதுசு. டாக்டர்கள் இப்ப சப்தம் போடுறாங்க."

அங்கு வந்த நர்ஸ் அதை ஆமோதித்தாள். "நீங்கள் காலை டாக்டர் வரும்போது வந்தா போதும். உங்கள் டெலிபோன் நம்பரைக் கொடுத்துவிட்டுப் போங்கள். ஏதாவது தகவல் இருந்தா தெரிவிக்கிறோம்" என்றாள்.

"சே, இவங்க பேச்சே வயித்தைக் கலக்குது" என்றாள் காமாட்சி.

கெஸ்ட் ஹவுஸின் ஏ.ஸி அறையில் அமர்ந்து, எட்டு மணி ஸ்டார் நியூஸ் கேட்கும்போது ஆஸ்பத்திரியிலிருந்து தகவல் வந்தது. ராஜாவின் நண்பன் கதிர் பேசினான்.

"ராஜாவுக்கு பிரக்ஞை வந்திருக்கு" என்றான். "குட்!" என்றார் அவர் அவரையறியாமல் பெருக்கெடுத்த நிம்மதியுடன்.

"யா!" என்று தயங்கிய கதிரின் குரலில் சுரத்தில்லை என்று தோன்றிற்று.

"ஏதாவது ப்ராப்ளமா?" என்று கேட்க நினைத்து சரவணன் "நாங்கள் காலையில் வந்தால் சரிதானே?" என்றார்.

"சரிதான்" என்றான் கதிர்.

"டாக்டரையும் பார்க்கலாம்."

(தொடரும்)

# பூனை இளைத்திருந்தால்...

**பிற பத்திரிகைகளில் வெளியான சில கடிதங்கள். சற்றே சுருக்கமாக...**

### எளிதில் தீர்வு

உணவுத் துறையின் ஆலோசனையை ஏற்றுக்கொண்டு சீக்கிய இனத்தவர்களைத் தனது பாதுகாப்புக்குப் பயன்படுத்தத் தவறினால் இந்தியாவின் பிரதமராக இருப்பதற்குத் தனக்குத் தகுதியில்லை என அன்றைய பிரதமர் இந்திராகாந்தி அறிவித்தார். ஆனால் இவரது கொலையை அடுத்து சீக்கியர்கள் படுகொலை செய்யப்பட்டதை ராஜீவ்காந்தி நியாயப்படுத்தியது இன்றைய குஜராத் முதல்வர் நரேந்திர மோடிக்கு முன்னுதாரணமாக அமைந்து விட்டது எனலாம்!

இத்தருணத்தில் இந்திரா காந்தியின் மதச்சார்பின்மையைப் பிரதமர் வாஜ்பாய் முன்னுதாரணமாகக் கொள்ள முன்வந்தால் குஜராத் பிரச்னைக்கு எளிதில் தீர்வு கிடைத்துவிடும்.

(தினமணி - அ. கோராநிதி, திருச்சி)



### ஆணும் பெண்ணும் ஒன்று?

என் தோழி ஒருத்தி ஒரு என்.ஆர்.ஐயைத் திருமணம் செய்துகொண்டாள். திருமணமானகையோடு அவளது பெயரை மாற்றிவிட்டார்கள் அவளது புகுந்த வீட்டினர். காரணம் அவளது கணவரின் பதினோரு வயதுத் தங்கைக்கும் அதே பெயராம். ஆக, 26 வருடங்களாகத் தனக்கு அடையாளமாகத் திகழ்ந்த ஒன்றை என் தோழி இழக்க வேண்டிய கட்டாயம். ஆணும் பெண்ணும் ஒன்று என்பதெல்லாம் நடைமுறைக்கு முழுவதுமாக வரவில்லை.

(ஃபெமினா - தனுஸ்ரீ பொடார், பெங்களூர்)



### முரண் பேச்சு!

தமிழக முதல்வர் ஜெயலலிதா துணிச்சலுக்குப் பெயர் போனவர் என்பது அனைவரும் அறிந்ததே. ஆனால் எந்த விஷயத்திலும் தடாலடியாக முடிவெடுக்கும் அவர் அவற்றில் இறுதியாகவோ உறுதியாகவோ இருப்பதில்லை.

ரேஷன் கார்டுகள் கணக்கெடுப்புப் பணி துவக்கப்படும் என்றார். ஏதோ குளறுபடி என்று காரணம் கூறி, அதைப் பாதியிலேயே கைவிட்டார். சென்னையில் மேம்பாலங்கள் கட்டியதில் ஊழல் என்றார். கருணாநிதியை இரவோடிரவாகக் கைது செய்தார். ஸ்டாலினைத் தேடி வலை வீசினார். இன்றுவரை அந்த வழக்கில் குற்றப்பத்திரிகை கூடத் தாக்கல் செய்யப்படவில்லை. கருணாநிதியின் மீது பரிதாபப்பட்ட நீதிபதி மாற்றப்பட்டதுதான் மிச்சம். ஜோதிடர்களின் பேச்சைக் கேட்டு மெரினா பீச்சில் இருந்த கண்ணகி சிலையை அகற்றினார். தற்போது சிலையின் நிலை என்ன என்றால் 'விஷயம் நீதிமன்றத்தில் இருக்கிறது. தீர்ப்பு வந்த பிறகுதான் எதுவும் சொல்ல முடியும்' என்று நழுவுகிறார்.

இவ்வாறு நீண்டுகொண்டே செல்கிறது ஜெயலலிதாவின் முன்னுக்குப் பின் முரணான பேச்சுக்கள். இதற்குக் காரணம் எல்லாவற்றையும் தானே செய்ய வேண்டும் என்கிற பேராசை, சரியான ஆட்களைத் தேர்ந்தெடுக்கத் தெரியாமை, தேர்ந்தெடுத்தவர்களை நம்பாமை ஆகியவைதான். இது குறித்து தனிமையில் முதல்வர் சிந்தித்துப் பார்த்தாரேயானால் அவருக்குத் தெளிவு கிடைக்கக் கூடும்."

(காலைக்கதிர் - பி.எஸ். ராமநாதன், தர்மபுரி)




### திணிக்க வேண்டாம்!

இந்திய கிரிக்கெட் அணித் தலைவர் கங்குலி பற்றிக் காழ்ப் புணர்ச்சியோடு விளையாட்டு விமர்சகர்கள் கருத்து கூறுவது குறித்து எழுதியதற்கு நன்றி. சுனில் கவாஸ்கர், சித்து போன்றவர்கள் விளையாட்டை விமர்சனம் செய்வதோடு நிறுத்திக் கொள்ளட்டும். வாய்ப்பு கிடைத்ததே என்பதற்காக தங்கள் தனிப்பட்ட கருத்துகளைத் தொலைக்காட்சி ரசிகர்கள் மீது திணிக்க வேண்டாம்.

(அவுட்லுக் - பிரேம் கோஸ்வாமி, குர்கான்)

தற்போதைய அரசியல் நிகழ்வுகள் குறித்து கருணாநிதி எடுக்கும் முடிவுகள் அவருடைய இமேஜைக் குலைக்கும் வகையில் உள்ளன.

அச்சிறுபாக்கத்தில் பா.ம.க போட்டியிடும் என்று ராமதாஸ் தடாலென்று அறிவித்துவிட்டார். வேறு வழியின்றி கருணாநிதியும் அதை ஏற்றுக் கொண்டு விட்டார்.

'பூனை இளைத்திருந்தால் எலி மச்சான் முறை கொண்டாடும்' என்பது போல் மூன்று இடைத் தேர்தல்களிலும் பா.ஜ.க., தி.மு.கவை ஆதரிக்காது என்று தமிழக பா.ஜ.க அறிவித்திருக்கிறது.

கூட்டணிக் கட்சிகளை ஏமாற்றி வஞ்சித்த கருணாநிதியின் கடந்த கால அணுகுமுறையால் அவரது கூட்டணிக் கட்சிகளே இந்த இடைத் தேர்தலில் அவரை ஆதரிக்கவில்லை என்பது மட்டுமல்ல, ஜெயலலிதாவை எதிர்க்கும் கட்சிகளும் அவரோடு வந்து சேரத் தயங்குகின்றன. மேலும் சட்டமன்றத்தில் ஜெயலலிதாவுக்கு எதிரே வந்து உட்காரத் தயங்குவதும் அவரது இமேஜ் சரிவுக்கு ஒரு காரணம். கருணாநிதிக்கு ஏற்பட்ட கையறுநிலை அவருக்குக் கிடைத்த மிகப் பெரும் அரசியல் தண்டனை. ஜெயலலிதா வேறு அவருக்குத் தண்டனை கொடுக்க வேண்டுமா என்ன?

(தினமலர் - ம.ச. கவிதைக்கண்ணன், கல்லூரணி)



• நிஜ உற்சவர்



• கிருஷ்ணா, மாடல் கோவிலுடன்

# ஒரு மினி பிரம்மோத்சவம்!

திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் பிரம்மோத்சவம்! தினமும் சுவாமி புறப்பட்டு வீதியுலா வருகையில், வேதபாராயண கோஷ்டிக்கு அப்புறம், இன்னொரு சுவாமி புறப்பட்டு வரும். இது பொம்மை விளையாட்டுத்தான். பிரும்மோத்சவம் பத்து நாளும் என்னென்ன வாகனங்கள் உண்டோ அதே வாகனங்களைச் செய்து பெருமாளை எழுந்தருளப் பண்ணுகிறார்கள் அந்தப் பக்கத்துச் சிறுவர்கள்.

கொஞ்சம் வளர்ந்து விட்டால் இளைஞர் கிருஷ்ணாவைப் போன்றவர்கள், திருவீதியுலா ஏற்பாடுகளைச் செய்து கொடுத்துச் சிறுவர்களையே ஸ்ரீபாதம் தாங்க வைத்து விடுகிறார்கள். கிருஷ்ணா பிளஸ் டூ படித்துத் தேர்வு எழுதி விட்டுக் கல்லூரியில் சேர இருக்கிறார். மண்டயம் குடும்பத்தைச் சேர்ந்த இவருக்கு இந்த 'பொம்மை விளையாட்டில்' ஆர்வமூட்டி உதவுகிறவர்கள் பாட்டி ருக்மணியும் சித்தப்பா நரசிம்மனும்!

வீட்டின் மாடியில் ஒரு தனி அறையையே இந்த விளையாட்டுத் திருமேனிகளுக்காக ஒதுக்கித் தந்திருக்கிறார்கள். நாம் போயிருந்த போது, பெருமாள் குதிரை வாகனத்தில் ராஜா வாகப் பவனி வருகிறார். கிருஷ்ணாவின் கோவில் அறையில், அதேபோன்ற பொம்மைக் குதிரை வாகனத்தில், சிறிய உருவில் பெருமாளின் பஞ்சலோகத் திருமேனியை அமர வைத்து அலங்கரித்து வைத்திருந்தார். குதிரையின் பாதங்களுக்கு முன்னால் சிறிய வடிவில் சடாரி வேறு!

குட்டிக் குதிரை வாகனத்தை நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் மயிலையில் உள்ள ஒரு கைத்தொழில் பொருள் விற்பனையகத்தில் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு வாங்கித் தந்தார்களாம். விக்கிரகங்களின் தலைப்பாகைகள் (கொண்டைகள்) எல்லாம் திருக்கோவிலில் உள்ளது போலவே; ஆனால் இவருடைய விக்கிரக அளவுக்கு ஏற்றபடியே சிறிதாகச் செய்து வாங்கியிருக்கிறார். ராஜா கொண்டை, பாண்டியன் கொண்டை, வேங்கடாத்ரி கொண்டை, தொப்பாரம் என்று எல்லாம் வெகு அழகாக இருக்கின்றன. திருக்கோவிலுக்கு ஆடையணிகளைச் செய்து தருகிற கிருஷ்ணாஜி என்பவரே கொண்டைகள், முத்தங்கி, யானையின் முகபடாம் போன்றவற்றை எல்லாம் செய்து தருவாராம்.

கிருஷ்ணாவின் கோஷ்டியில் சுவாமியை வீதியுலாக் கொண்டு வருவதில் ஏழெட்டுச் சிறு பிள்ளைகள் பங்கேற்கிறார்கள். இவரைப் போலவே பார்த்தசாரதி, ராஜா, வெங்கடேஷ், ரகுராம் போன்ற இளைஞர்களின் முயற்சியால் ஏழெட்டு கோஷ்டிகள் தனித்தனியாகப் பெருமாள் சேவை வழங்குகிறார்கள். இந்தப் பொம்மைப் பெருமாளையும் பக்தர்கள் சேவிக்கிறார்கள்.

கிட்டத்தட்ட நூறு ஆண்டுகளுக்கு மேலாக, அல்லிக்கேணி மாடவீதிகளில் உள்ள சிறுவர்களிடையே இந்த விளையாட்டு வழிவழியாக நடைபெற்று வருகிறது.

மண்டயம் சீனிவாசய்யங்காரின் குமாரர், எண்பத்தாறு வயது பார்த்தசாரதி அய்யங்கார், தமக்கு ஆறு வயதானபோது இப்படிப் பொம்மை யானை வாகனத்தின் பின்னே அமர்ந்து வந்ததை நினைவு கூர்கிறார்.

கொஞ்சம் காஸ்ட்லியான பக்தி விளையாட்டுத்தான்! இருந்தாலும் இப்படியொரு விளையாட்டில், இந்த டீ.வி, சினிமா யுகத்திலும் சிறுவர்கள் ஈடுபடுவதும், வீட்டுப் பெரியவர்கள் அதை ஊக்குவிப்பதும் ஒரு வித்தியாசமான நடைமுறைதானே?

கட்டுரை, படங்கள் : **யெஸ்பால்**



• கந்தர்வன்

# இலக்கியமும் சிந்தனைகளும்...

சுவடுகள் : 20

திருப்பூர் கிருஷ்ணன்

இலக்கியச் சிந்தனை - வேறு எந்த மொழியிலாவது இப்படி ஓர் அமைப்பு உண்டா? மாதந்தோறும் ஒரு கூட்டம். அந்த மாதம் வெளிவந்த எல்லாப் பத்திரிகைச் சிறுகதைகளிலிருந்தும் சிறந்த ஒன்றைத் தேர்ந்தெடுப்பது. பாரதி - லட்சுமணன் - சிதம்பரம் ஆகியோரை அறங்காவலர்களாகக் கொண்ட இலக்கியச் சிந்தனை 385 மாதக் கூட்டங்களுக்கு மேல் நடத்திவிட்டது.

சிறந்த கதையைத் தேர்வு செய்யும் பொறுப்பு யாராவது ஒரு விமர்சகருக்கு வழங்கப்படுகிறது. விமர்சகரின் மனச்சாட்சியைப் பொறுத்துத்தான் தேர்வும் அமையும். மனச்சாட்சியுள்ள விமர்சகர் அமைவது என்பது அந்த மாதம் உண்மையிலேயே சிறந்த கதையை எழுதியுள்ள எழுத்தாளரின் அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது. என்ன செய்ய? ஜனநாயக முறையில், நன்மைகளோடு கூட, இதுபோன்ற சங்கடங்களும் உண்டு.

இலக்கியச் சிந்தனையில் மாதச் சிறுகதையைத் தேர்வு செய்ய வந்தார் ஒரு விமர்சகர். வேறு எந்தக் கதை பற்றியும் சொல்லாமல் ஒரே ஒரு கதை பற்றி மட்டும் அரைமணி சிலாகித்துப் பேசினார். கடந்த பத்தாண்டுகளில் அக்கதைக்கு இணையான கதை எதுவும் வெளிவரவில்லை என்றார். அக்கதைக்கே மாதப் பரிசு என அறிவித்தார். குள்ளநரி போல் விடைபெற்றார். பிறகு துப்புத் துலக்கியதில் தெரிந்த சங்கதி - அந்தக் கதையைப் புனை பெயரில் எழுதியவர் அவரே தான்! (இதன் காரணமாக அக்கதை நிராகரிக்கப்பட்டு, பின் வேறு கதை தேர்வு செய்யப்பட்டது.)

இலக்கியச் சிந்தனையின் முதல் கூட்ட விமர்சகர், தமிழின் முதல் எழுத்தில் தொடங்கும் பெயரையுடைய எழுத்தாளர் - அகிலன். அந்த மாதம் அவர் சிறுகதையும் வெளியாகியிருந்தது. அதைப் பரிசீலனைக்கு உட்படுத்தவில்லை என்று முதலிலேயே தெரிவித்து நீக்கியது அகிலனின் பண்பாடு.

நானும் இலக்கிச் சிந்தனைப் பரிசுகள் பெற்றிருக்கிறேன். எனக்குரிய மாதப் பரிசுகளை எஸ்.திருமலை, பா.கிருஷ்ணன், மணிமுடி ஆகியோர் வெவ்வேறு காலகட்டங்களில் தேர்வு செய்தார்கள். சின்னம்மிணி, கடைசி நெருப்பு, இரண்டாவது கணவன் ஆகிய கதைகள்

தேர்வுபெற்றன. 'சின்னம்மிணி' என்ற கவுண்டர் சமுதாயக் கதையை ஆண்டுப் பரிசுக்குத் தேர்வு செய்தவர் வல்லிக் கண்ணன். மெர்க்குரிப் பூக்கள் நாவலுக்காக பாலகுமாரன், தண்ணீர் தண்ணீர் நாடகத்திற் காக கோமல் சுவாமிநாதன் ஆகியோரோடு சின்னம்மிணி சிறுகதைக்காக நானும் அவர்கள் பரிசுபெற்ற அதே ஆண்டு பரிசு பெற்றேன். தீபம் இதழ் எங்கள் மூவர் படத்தையும் அட்டையில் வெளியிட்டு கௌரவித்தது.

இலக்கியச் சிந்தனை அமைப்பு, முன் னோடி எழுத்தாளர்களைப் பற்றி ஆண்டு தோறும் வானதி பதிப்பக வெளியீடாக ஒரு நூல் கொண்டு வருகிறது. (இவ்வாண்டு சி.சு.செல்லப்பா பற்றி வி. ராமமூர்த்தி ஐ.ஏ.எஸ். புத்தகம் எழுதியுள்ளார்.) சில ஆண்டுகள் முன் இதே வரிசையில் சுதந்திரத் தியாகியான எழுத் தாளர் கோதை நாயகி பற்றி நான் நூல் எழுதி னேன். ஏற்கெனவே என் மனத்தில் படிந் திருந்த காந்தியச் சிந்தனைகளைக் கோதை நாயகியின் வரலாற்று நிகழ்ச்சிகள் உறுதிப் படுத்தின. ராஜாஜியும் காந்தியும் சம்பந்தி களான பின், அவர்களுக்குப் பிறந்த பேரனுக்கு ராஜாஜி கேட்டுக் கொண்டபடிப் பெயர் சூட்டுகிறார் கோதைநாயகி. ராஜாஜியிலிருந்து ராஜ் - மோகன்தாஸ் கரம்சந்த் காந்தியிலிருந்து மோகன் என எடுத்து இணைத்து 'ராஜ் மோகன்' என அவர் பெயர் வைத்த சாதுரியம் உள்பட, கோதையின் வாழ்வுதான் எத்தனை சுவாரஸ்யம்!

இலக்கியச் சிந்தனை மாதக் கூட்டங்களில் பலமுறை பேசியிருக்கிறேன். இ.ஜா., சரஸ்வதி ராம்நாத், ஏ.என்.எஸ். உள்பட்ப் பலரைப் பற்றிப் பேச அந்த மேடையில் அல்லாமல் வேறு மேடையில் வாய்ப்புக் கிட்டுவது அபூர்வம்.

கடந்த காலத்தில் மூன்று முறை மாத விமர்சகனாகவும் இயங்கியிருக்கிறேன். மூன்று முறையும் மிகச் சிறந்த சிறுகதைகள் அந்த மாதங்களில் வெளிவந்திருந்தது என் அதிர்ஷ்டமே.

பிரபஞ்சன் கணையாழியில் எழுதிய பிரும்மம் என்ற கதையை முதல் முறை தேர்வு செய்தேன். உலகளாவிய தத்துவப் பார்வை யோடு, முருங்கை மரத்தைப் பிரதானமாக்கி எழுதப்பட்ட சிறந்த படைப்பு. வ.வே.சு. ஐயருக்கு அரசமரம் மாதிரி பிரபஞ்சனுக்கு ஒரு முருங்கை மரம். (அதே கதையை, பின் அந்த ஆண்டு வெளிவந்த பன்னிரண்டு சிறந்த கதைகளில் மிகச் சிறந்ததாக கரிச்சான்குஞ்சு தேர்வு செய்தார்.)

இரண்டாம் முறை விமர்சகனாக இயங்கிய போது, எனக்கு ஒரு தர்மசங்கடம். அந்த முறை 'லங்காபுரி ராஜா' என்ற அற்புதமான சிறுகதையைத் தருமூ சிவராமு எழுதியிருந்தார். ஆனால் அக்கதை நான் பணிபுரிந்த கதிரிலேயே வெளியாகியிருந்தது. நான் என்ன செய்ய? நான் பணிபுரியும் பத்திரிகைக் கதை என்பதால் நிராகரிப்பதா, தேர்வு செய்வதா? இந்தச் சங்கடத்தை மேடையிலேயே சொன்ன நான், அவ்விதம் தேர்வு செய்யாவிட்டால் மிக நல்ல கதை பரிசு வாய்ப்பை இழக்கும் எனக் கூறி அதை மாதத்தின் சிறந்த கதையாக அறிவித்தேன். கூட்டத்திற்கு வந்திருந்த கலை விமர்சகர் ப்ரஸன்னாராமசாமி மேடைக்கு வந்து அந்தக் கதையின் உயர்வு பற்றிப் பேசி என் தேர்வை மெச்சினார். அந்தக் கூட்டத் திற்கு தருமூ சிவராமுவும் வந்திருந்தார். தேர்வு முடிவைச் சொல்லிவிட்டு நான் நிமிர்ந்து பார்த்தபோது அவர் ஜோல்னாப் பையைத் தோளில் போட்டுக் கொண்டு சடாரென அந்த இடத்தை விட்டு ஓடியே போய்விட்டார். மிக நுணுக்கமான மனம் படைத்தவர். புகழ் மொழிகளை நேரில் சந்திக்கக் கூச்சப்பட்டு ஓடிவிட்டார் போலும்.

மூன்றாம் வாய்ப்பின்போது நான் தேர்வு செய்த கதை கந்தர்வன் எழுதி, செம்மலரில் வெளிவந்த 'துண்டு'. ஓர் உழைப்பாளியின் மேல் துண்டு எப்படி ஜாதித் தாழ்வை உணர்த் தும் குறியீடாக அமைந்துவிடுகிறது என்பதை நயம்படச் சித்திரித்த கதை. (பிறகு அந்தக் கதையையும் உள்ளடக்கிய கந்தர்வனின் சிறுகதைத் தொகுதியைப் புதுக்கோட்டையில் வெளியிட்டுப் பேசும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது.) ஒரு சிறந்த படைப்பை வாசிக்கும் போது ஏற்படும் சுகம், அதைச் சிறந்த படைப்பு என மற்றவர்களிடம் சொல்லும்போது இரட்டிப்பாகிறது.

---

**"ஸ்கூலுக்குப் போய் பையனுக்குச் சாப்பாடு கொடுத்துட்டு வர்ற டைம்ல சீரியல் போடறாங்களேன்னு எரிச்சலா இருக்கு..!"**

**"எனக்கு அந்த எரிச்சல் இல்லை. இதுக்காகவே என் பையனை ஹாஸ்டல்ல சேர்த்துட்டேன்!"**

**- பூங்கதிர்**





தரிசும் தரிசு சார்ந்த பாலை நிலத்துச் சிற்றூர். உலகமே வெள்ளத்தில் மிதந்தாலும் ஆண்டவன் தனிப்பெருங் கருணை வைத்தால்தான் சிறு மழைக்காவது புண்ணியம் செய்த ஊர். மக்கள் ஜாதியர். தொழில் வம்பளப்பது. சண்டையிடுவது. மழை பெய்தால் விவசாயம் செய்து நஷ்டமடைவது.

காலம் தனது இயல்புக்கு ஏற்ப சிலருக்கு வேகமாகவும் பலருக்கு மெதுவாகவும் போய்க்கொண்டிருந்தது. அன்றும் அப்படித்தான் சின்னதாய்த் தூறல். காற்றுடன் கூடிய பேய்மழை. கந்தப்பன் வீட்டுக்குப் பக்கத்தில் காலி நிலத்தில் போடப்பட்டிருந்த மரத்துண்டுக்கு மோட்சம் அளிக்க விரும்பிய கரையான்கள், அதைத் தின்று மென்று பார்த்தன. அடடா இதெல்லாம் குறுகிய காலத் திட்டம். நமக்கு வேண்டியது தொலைநோக்குத் திட்டங்கள் எனச் சிந்தித்த கரையான்கூட்டம் மரத்துண்டைச் சுற்றி, கரிசல் மண்ணை உமிழ்நீருடன் சேர்த்து, பார்த்துப் பார்த்துப் புற்று ஒன்றைக் கட்டிக்கொண்டன. நீண்ட நாட்கள்

# படிமன்

அங்கிட்டும் இங்கிட்டும் நடமாடிக் கொண்டு - சந்துபொந்துகளில் சட்டை உரித்துக் கொண்டிருந்த நாகத்துக்கு இந்தப் புற்று ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது. பிடித்தது என்றால் பிடித்ததுதான். ஆட்சி மாறினால் லோன் போட்டு லோல் பட்டுக் கட்டிய வீட்டையே அரசியல் வாதிகள் ஆக்கிரமித்துக் கொள்வதில் லையா? மனுசனுக்கு மனுசனே இந்தக் கதி என்றால் கரையான்கள் என்ன செய்யும்? பாவம் அவற்றிற்கு



என்ன அதிரடிப் பத்திரிகை இருக்கிறதா? அழுதபடி போஸ் கொடுக்க. பேசாமல் நடையைக் கட்ட ஆரம்பித்தன. என்ன இன்னொரு மரத்துண்டு கிடைக்காமலா போய்விடும்?

ஒரு பக்கம் பாம்பும் இன்னொரு பக்கம் கந்தப்பன் குடும்பத்தாரும் பரஸ்பரம் தெரியாமலேயே குடியிருந்து வந்தனர்.

"ஏட்டி ஏ எழவெடுத்தவளே, எங்கடி போயிட்ட...?"

"என்னம்மா?"

"தெரு முக்கு கடைலபோயி மஞ்சத்தூள் வாங்கியாடி கண்ணு."

"துட்டு."

"அப்பா சட்டைல பாரு. இல்லைன்னா கடுகு டப்பாவுல ரெண்டு அம்பது ரூவா இருக்கும். ஒன்ன எடுத்துட்டுப் போயி மிச்சத்த அதுலயே வையி."

"எனக்கு வாங்கித்திங்க."

"ஒரு ரூவா எடுத்துக்க..."

அம்பது காசு வரைக்கும் எதிர்பார்த்த பிள்ளைக்கு ஒரு ரூபாய் கிடைத்ததும் தலைகால் புரியவில்லை. ஓட்டமாய் ஓடிப்போய் மஞ்சள் ஒரு கையிலும் தேன்மிட்டாய் வாயிலும் இன்னொரு கையில் சூடமிட்டாயுமாக வீட்டுக்கு நடக்க ஆரம்பித்தது. குழந்தைதானே. வந்த வழியில்தான் நடக்க வேண்டும் என்பது போன்ற மரபுகளை வைத்துக் கொள்ளாமல் புதர் மண்டிக்கிடந்த காலி நிலத்து ஒற்றையடித் தடத்தில் நடந்து வந்தது. ரொம்ப நாளாய்த் தண்ணிக் காட்டிக் கொண்டிருந்த எலி ஒன்றை உலக வாழ்விலிருந்து விடுவித்துவிட்டு ஒற்றையடிப் பாதையில் சுருண்டு கிடந்த பாம்பை மிதித்துவிட்டாள் பிள்ளை.

ஏற்கெனவே அரை மயக்கத்தில் இருந்த பாம்பு ஆபத்து என்று எண்ணி, புஸ் புஸ் என்று சீறி விட்டு ஓடிப்போய் புற்றுக்குள் புகுந்து கொண்டது. இப்படியொரு அதிர்ச்சியைத் தாங்காத பிள்ளை வேகமாய் ஓட முயற்சித்து கல் தடுக்கி கீழே விழுந்தது. மஞ்சள் முழுவதும் கொட்டி விட்டது. பின் சுதாரித்து எழுந்து அம்மாவிடம் ஓடியது.

"மஞ்சள் எங்கடீ?"

● மு.சித்தநாத பூபதி

"பா...பா..."

"என்னடி பா...பா..."

"பாம்பு."

"எங்க பாத்த?"

வேலையாள், அப்பா எல்லோரும் கல், கம்போடு வந்தார்கள்.

புதர் சூழ்ந்த இடத்தில் ஓங்கி உலகளந்தாற் போல் புற்று. புற்றைச் சுற்றிலும் மஞ்சள் - இனி கம்புக்கும் கல்லுக்கும் அங்கென்ன வேலை?

"தாயே மகமாயி. ஆயிரம் கண்ணுடையாளே. ஒனக்கு என்ன கொற வைச்சோம். பச்சப்புள்ளய இப்படிப் பயமுறுத்திட்டியே. ஒனக்கு வெள்ளி, செவ்வாய்க்குப் பால் ஊத்துறேன். வருஷம் ஒரு தடவை பொங்கல் வைக்கிறேன்" எல்லோரும் புற்றை நோக்கிக் கும்பிட்டுக் கொண்டார்கள்.

அப்புறம் என்ன? புற்றுக்கு வளர்ச்சிதான். கூரைக் கொட்டகை வந்தது. தற்காலிகப் பூசாரி தானாகவே வந்து ஒட்டிக் கொண்டார். பிள்ளையில்லாத சொத்தை என்ன செய்வது என்று முழித்துக்கொண்டிருந்த செல்லம்மா, கரண்டு இழுத்துக்கொடுத்தாள். ரொம்ப நாளாகவே யாவாரம் சரியில்லாத முனியசாமி சூடம், பத்தி பால், முட்டை எனப் பக்திக்கடை போட்டான். வெள்ளிக் கிழமைகளில் பெண்கள் கூட்டம் அலைமோதியது. அப்பொழுதுதான் பாம்பு சினிமா ஒன்று வெளியாகி பல அதிசயங்களைப் பண்ணிக் கொண்டிருந்தது. அவ்வூரைப் பொருத்தமட்டில் படத்தினால் பாம்புக் கோவில் வளர்கிறதா? பாம்புக் கோவிலினால் படம் சக்கைப்போடு போடுகிறதா? என ஒன்றுக்கொன்று பிரித்தறிய முடியாதபடி இரண்டுக்குமே நல்ல வளர்ச்சி.

இப்படி ஊரே பாம்புசாமியிடம் அருள் பெற்றுக் கொண்டிருந்தாலும் காலனி மக்களுக்குத்தான் அந்தக் கொடுப்பினை இல்லை.

கோவில் நிலம் முழுவதும் ஒரே சமுதாயத்திற்குச் சொந்தமாகையால் போனால் போகிறதென்று தெருவில் இருந்தவாறே கும்பிட்டுக் கொள்ள அனுமதிக்கப்பட்டனர்.

பாம்புக்கோவில் பிரம்மாண்ட வளர்ச்சி கண்டது. கூரை ஆஸ்பெஸ்டாஸாகி கான்கிரீட்டாக பதவி உயர்வு கண்டது. லம்ப்பாகக் காண்ட்ராக்ட் கிடைத்திருந்த காண்டராக்டர் ஒருவர் தரை முழுவதும் மார்பிள்ஸ் பதித்தார். செல்லம்மா கோவிலுக்குக் குழாய் ரேடியோ வாங்கிக் கொடுத்து, போகிற வழிக்குப் புண்ணியம் தேடிக்கொண்டாள். வெள்ளி, செவ்வாய்க்குப் பக்கத்து ஊரிலிருந்தெல்லாம் மக்கள் பெருந்திரளாக வந்து சாமி கும்பிட்டனர். பெயர் கூடச் சொல்லத் தேவையில்லை. பாம்புக் கோவில் புத்துக் கோவில் என்று சொன்னாலே சரியான மீதிச் சில்லரையோடு கண்டக்டர்கள்



"எதுக்கு தரையிலே படுத்துத் தூங்கறே...?"

"ஒரு வாரம் 'பெட்' ரெஸ்டுல இருக்கணும்னு டாக்டர் சொல்லிட்டாருடா...!"

- ஜி. வினோத்

டிக்கட் தந்தனர். பொங்கல் வைத்தனர். மொட்டை போட்டனர். ஆனால் காலனி மக்களுக்கு மட்டும்தான் இன்னும் கோவிலுக்கு வர அனுமதியில்லை.

ஒருநாள் நாட்டாமை வீட்டுக்கு முன் காலனி வீட்டு ஆம்பளைக வந்தாங்க.

"ஐயா எங்களையும் கோவிலுக்குள் போயி சாமி கும்பிட அனுமதிக்கணும்."

அவ்வளவுதான் ஊரே ரணகளப்பட்டது.

"எலேய் என்ன பேசுறோம். யார்ட்ட பேசுறோம்னு புரிஞ்சுதான் பேசுறீகளா? ஒழுங்காப் போயி வேலையப் பாருங்க. வெட்டிப் பொலி போட்ருவம்."

"அசலூர்க்காரனுக எத்தனையோ பேர். வர்றாங்க - சாமி கும்பிடுறாங்க. அவுகள இன்ன சாதின்னு தெரிஞ்சுக்கிட்டா உள்ள விடுறிக. அவுகள்ள எங்க சாதியும் இருக்கலாம். எங்களுக்குக் கீழ்ப்பட்டவுகளும் இருக்கலாம். எங்கள மட்டும் உள்ள விட மாட்டேன்னு சொல்றது நியாயமுங்களா? சாமி எல்லோருக்கும் பொதுதானுங்க."

"சாமி வேண்ணா எல்லோருக்கும் பொதுவா இருக்கலாம். கோவிலும் நெலமும் எங்காளுகளுக்குச் சொந்தம். நீங்களா பேசுறீகளா? ஒங்க தலைவன் பேச்சக் கேட்டுட்டு ஆடுறீகளா?"

வெந்ததைத் தின்னுட்டு வீதி வந்தால் சாகலாம் என்றிருந்த கூட்டம் தலைவனைத் தேடிப்புறப்பட்டது. ஊரே ரெண்டுபட்டது. ராவோடு ராவாக கோவிலுக்குள் நுழைய முயற்சிக்க, இவர்கள் அடிக்க, அவர்கள் அடிக்க, இங்கிட்டுீ ரெண்டு, அங்கிட்டு ரெண்டு.

போலீஸ் வந்தது. தாசில்தார் வந்தார். அமைச்சர் வந்தார். சமாதானக்கூட்டம் கூட்டப்பட்டது. என்னென்னவோ பேசிப் பார்த்தார்கள்.

"இதோ பாருங்க. கோவில் எங்க நெலத்துல இருக்கு. அத அப்படிப் பண்ணு. இத இப்படிப் பண்ணுன்னு சொல்ல சர்க்காருக்கு உரிமை கெடையாது. அத மீறி எதுன்னாச்சும் முடிவெடுத்தா எங்க கூட்டத்த என்னால கட்டுப்படுத்த முடியாது. அவனுக ஏன் எங்க கோயிலுக்கு வரணும்? நாங்க என்ன அவுக கோவிலுக்குப் போறமா? வர்ரமா?"

தாசில்தார் கையை விரித்தார். போலீஸ் காவல் போடப்பட்டது. பக்தர்களின் எண்ணிக்கை குறைந்தது.

காலனியில் ஒரு கூட்டம்.

"நடந்தது நடந்து போச்சு. வெட்டணும், குத்தணும்னு நெனைச்சா வெட்டிக்கிட்டும் குத்திக்கிட்டும்தான் இருக்க முடியுமே ஒழிய தீர்வுன்னு ஒன்று வரவே வராது. நாம எதுக்கு அவுக கோவிலுக்குப் போகணும்? பிடி மண்ணெடுத்து நமக்குன்னு ஒரு கோவில் கட்டிக்கிடுவோம். நாம கும்பிடுவோம். அவுகள உள்ள விட வேண்டாம்."

தாசில்தாருக்குச் செய்தி பறந்தது. பாம்புக்கோவிலுக்குப் பூசை நடந்தது. பாலும் முட்டையும் கலந்த மண்ணில் கைப்பிடி மண்ணெடுத்து தாசில்தார் கொடுக்க, தாம் பாளத் தட்டில் தலையில் வைத்துக்கொண்டு போய், காலனியில் ஒதுக்குப்புறத்தில் குழி தோண்டிக் கொட்டி வைத்தார்கள். கூரை போட்டுக் கோவில் உண்டாக்கினார்கள். சாமி கும்பிட்டார்கள்.

என்ன அதிசயம்? - அங்கும் ஒரு புற்று வளர்ந்தது. இனி என்ன நடந்தது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? பழைய பாம்புக் கோவிலுக்கு என்னென்ன வளர்ச்சியோ அத்தனையும் இங்கேயும் நடந்தது. அது சரி இங்கே எப்படிப் புற்று வளர்ந்தது?

முன்னொரு காலத்தில் பாம்பால் புற்றிலிருந்து விரட்டப்பட்ட கரையான்கள் பாம்புக்கு வைக்கப்படுகின்ற பாலும் முட்டையும் மண்ணில் கலக்கின்ற இடத்தில் இருந்து கொண்டு வாழ்ந்து வந்தன. தாசில்தார் எடுத்துக் கொடுத்த மண்ணோடு வந்து காலனியில் குடியேறி, மரவேர் மிச்சத்தைச் சுற்றிப் புற்றைக் கட்டின. இங்கும் கோலாகலம். கோவிலுக்கு யார் வேண்டுமானாலும் வரலாம். அவுக மட்டும் வரக்கூடாது என்ற தீர்மானம் தளர்த்தப்படவேயில்லை. பழைய கோவிலில் இருந்த பாம்பும் என்ன நினைத்ததோ தெரியவில்லை. ஒரு சுபயோக சுபதினத்தில் அங்கிருந்து நைசாகக் கிளம்பி காலனிப் புற்றில் வந்து குடியேறியது. ●



''ஏய் நீ ரொம்ப அழகா இருக்கே' படத்துக்காக சிரியா சென்று வந்திருக்கிறது இயக்குனர் வஸந்தின் டீம்! இந்தியாவிலிருந்து சிரியா சென்று படம்பிடித்த முதல் குழு இதுதானாம்!

"சிரியா பழைமையான அரண்மனைகள், கட்டிடங்களை கொண்ட நாடு. இனிமையான பிரதேசம். டூரிஸம்தான் பிரதான தொழில். அங்குள்ள சாலைகளும் தெருக்களும் கட்டிடங்களும் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போல தோன்றும். அது ஒரு ரசனை தேசம்" என்று ஆரம்பித்தார் வஸந்த்.

"ஒரு காலத்தில் அங்கு பிரம்மாண்டமாக இருந்த சில மாளிகைகளும், அரண்மனைகளும் இன்று, இடிபாடுகளுக்கு ஆளாகி, பிரம்மாண்டமான தூண்கள்தான் மிஞ்சியுள்ளன. அந்தத் தூண்களிலும் ஏராளமான துளைகள். போர்களில் பயன்படுத்தப்பட்ட பீரங்கி குண்டுகளின், என்று நினைத்தோம் கொண்டிருந்தபோது, ஒரு டூரிஸ்ட் கைடு, தூண்களில் ஒரு காலத்தில் பொறுத்தப்பட்டிருந்த விளக்குகளை, அதன்பின் அவரவர் பெயர்த்து எடுத்துக் கொண்டு போய்விட, அதனால் ஏற்பட்ட துளைகள் என்று விளக்கம் சொன்னதும் ஆச்சர்யப்பட்டுப் போனோம்.

"பல்மேரா நகரை ஒட்டிய ஒரு பகுதியில் கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஒன்றுமே தென்படாத அளவுக்கு வெறுமை! ஆயிரக் கணக்கான ஏக்கரில் பரவிக் கிடந்த தரிசு நிலம் கூட ஒரு விதத்தில் அழகாகவே இருந்தது. எதிர்பாராது கிடைத்த அந்த லொகேஷனை விட்டுவிட எனக்கு மனமில்லை.

''கும்பல் கும்பலாக, ஷூட்டிங்கை வேடிக்கை பார்க்க மக்கள் கூடினார்கள் என்றாலும் கூட, ஷூட்டிங்கிற்கு அவர்களால் எந்த தொந்தரவும் இல்லாதபடி முழுமையாய் ஒத்துழைப்புக் கொடுத்தார்கள்.

• வஸந்த்



• கோபிநாத்



ஒரு பல்கலைக்கழக மாணவி ஷாமின் விசிறியாகி 'ஐ லவ் யூ வெரி மச், நாம கல்யாணம் பண்ணிக்கலாமா?' என்று கேட்க ஆடிவிட்டார் ஷாம்!

"நம் ஊர் சுக்காரொட்டிபோல, மெகா சைஸில் ஒரு ஐட்டத்தைத்தான் முக்கிய உணவாக சாப்பிடுகிறார்கள். ஆனால் அதை வீட்டில் செய்வது இல்லை. மொத்த நகரத்துக்கும் சப்ளை செய்ய சில கடைகள் இருக்கின்றன. அங்கே போய் காலையில் கியூவில் நின்று, வாங்கிக் கொண்டு வந்து, வீட்டிலேயே தொட்டுக் கொள்ள 'சைட்டிஷ்' தயாரித்துச் சாப்பிடுகிறார்கள்.

"மணி ஆலயம் என்று ஓர் இடத்தைப் பார்த்தோம். அந்த ஆலயத்தின் பெயரில் மணி இருந்தாலும், ஒசை எழுப்ப மருந்துக்கு ஒரு மணி கூட இல்லை. அங்கேயும் சில காட்சிகளைப் படம் பிடித்தோம்.

"இங்கு ஒரு லிட்டர் டீசல் ஒரு ரூபாய். ஒரு லிட்டர் பெட்ரோல் ஆறு ரூபாய். ஒரு லிட்டர் தண்ணீரின் விலை எழுபத்தைந்து ரூபாய்!

"சிரியாவில்தான் கம்பீரமான அழகுடன் கூடிய, வெள்ளை நிற ஒட்டகங்களை நான் பார்த்தேன். டூரிஸ்ட்களுக்கு ஒட்டகச் சவாரி மிகவும் கவர்ச்சியான அம்சம். ஒட்டகக் காரர்கள், டூரிஸ்ட்களைக் கண்டதும், ஒட்டக சவாரிக்கு ஆயிரம் சிரியன் பவுண்டு (இந்திய மதிப்பில் ஒரு சிரியா பவுண்டு நாற்பத்தைந்து ரூபாய்) கேட்கிறார்கள். பேரம் பேச ஆரம்பித்தால் ஐந்தாவது நிமிடம் ஐம்பது பவுண்டுக்குக் கூட வர ஒப்புக் கொள்ளுகிறார்கள்.

"வெஜிடேரியன்களுக்கு, சிரியாவில் ரொம்பவே உணவுத் திண்டாட்டமாகிவிடும். பிரட், ஜாம், தவிர 'ஹூமஸ்' என்று ஒரு சட்னி தருகிறார்கள். அதை வைத்துச் சமாளித்துக் கொள்ள வேண்டியதுதான். நாங்கள் அங்கே சாப்பிட்ட காபி கூட ஒட்டகப்பாலில் தயாரித்ததுதான் என்று அறிந்தபோது,

## "இதைவிட சிறப்பாச் செய்யணும்!"

"சினிமாவுக்குப் போகணும்னா முதல்ல அப்பாகிட்டே அடிவாங்க என்னைத் தயார்ப் படுத்திக்கணும்... அப்படிப்பட்ட கட்டுப்பாடான குடும்பம். இத்தனைக்கும் அப்பா கே. பால சந்தரோட விசிறி. அவர் படம் ஒண்ணு விடாம பார்ப்பார். ஆனா நாங்க எந்த படமும், கே.பியுடையது உட்பட பார்க்கக் கூடாது! மீறி பார்ப்பேன். அடியும் வாங்குவேன். ஏழாவது எட்டாவது படிக்கிற போதே சினிமாவுடைய தொழில்நுட்ப அம்சங்கள்ல தான் எனக்கு ஆர்வம் அதிகமாயிருந்தது. காமெரா வொர்க்கையும் லைட்டிங்கையும் கவனிச்சு வைச்சுப்பேன். ஸ்கூல் முடிக்கற கட்டத்திலே, ஒளிப்பதிவாளரா வரணும்ன்ற இலக்கு மனசுல பதிவாயிட்டுது."

– சொல்பவர் எஸ். கோபிநாத் – 'தில்' படத்தில் ஒளிப்பதிவாளராக அறிமுகமாகி 'ஏய் நீ ரொம்ப அழகா இருக்கே'வில் மீண்டும் தனது ஆற்றலை நிரூபிக்க வாய்ப்பு பெற்றிருப்பவர்.

எஸ். கோபிநாத் பெயரில் உள்ள எஸ் ஃபார் செல்வம் – நீடாமங்கலத்து விவசாய, வியாபார குடும்பத் தலைவர். அவரும் அவர் மனைவி மணிமேகலையும் ஆறு வருட இடைவெளிக்குப்

## ஒரே வருடத்தில் 4 தலைமை நீதிபதி!

உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதி பருச்சா சமீபத்தில் ஓய்வு பெற்றுவிட, அந்தப் பதவியில் இப்போது நீதிபதி பி.என்.கிர்பால்.



ஏற்கெனவே பல வழக்கு களில் இவர் எடுத்த முடிவுகள் பலமாகப் பாராட்டப்பட்டி ருக்கின்றன அல்லது விமர்சிக் கப்பட்டிருக்கின்றன.

விஸ்வ இந்து பரிஷத் மார்ச் 15 அன்று அயோத்தியில் பூஜைக்கு ஏற்பாடுகள் செய்ய, சர்ச்சைக்கிட மில்லாத, கோவிலைச் சுற்றியுள்ள பகுதியி லும்கூட பூஜை செய்யக் கூடாது என்ற தீர்ப்பை வழங்கியது உச்சநீதிமன்றம். அந்தத் தீர்ப்பை வழங்கிய குழு, கிர்பாலைத் தலைவ ராகக் கொண்டது.

டெல்லியில் உள்ள குடியிருப்புப் பகுதி களில் இயங்கிவந்த எக்கச்சக்கமான தொழிற் சாலைகள் வேறு இடத்துக்கு உடனடியாக மாற்றப்பட வேண்டும் என்று இவர் அளித்த தீர்ப்பும் அதிர்ச்சி அலைகளை ஏற்படுத்தியது. இதனால் சுற்றுப்புறச் சூழல் ஆர்வாளர்கள் ஆனந்தமடைந்தார்கள்.

ஆனால் கிர்பாலின் வேறொரு தீர்ப்பு அவர்களது உற்சாக பலூனில் ஊசியைச் செருகியது. இவரும் நீதிபதி ஆனந்துமாக இணைந்து சர்தார் சரோவர் அணையின் மட்டத்தை உயர்த்த அனுமதி வழங்கினர். (மற்றொரு நீதிபதியான பருச்சா இதற்கு ஒப்புக் கொள்ளவில்லை என்பது குறிப் பிடத்தக்கது).

பிறகு தியேட்டரில் படம் பார்க்க தஞ்சாவூர் போனது மகன் ஒளிப்பதிவாளராகப் பணியாற்றி 'தில்' படத்துக்காக.

பத்திரிகை புகைப்படக்காரராக கே.வி. ஆனந்த் போல் பணியை ஆரம்பித்த கோபிநாத், ஆனந்தைப் போலவே கல்கிக்காக எடுத்த படங்கள், அட்டைப் படங்கள் ஏராளம்.

ராஜீவ் மேனனிடம் உதவியாளராய்ப் பணியாற்றிய அனுபவமும் உண்டு.

தஞ்சாவூர் மண்ணுக்குரிய வாசிப்பு தாகம், அழகியல் பார்வை, வேகம், கலையார்வம் போன்ற பல அம்சங்களை இவரது ஒளிப்பதிவு பிரதிபலிக்கும். "இதைவிட சிறப்பாச் செய்யணும்" என்ற இவர் தாரக மந்திரம், சினிமா உலகில் இவருடன் பழகிய அனைவரையும் நிமிர்ந்து உட்கார வைத்திருக்கிறது. தில் படத்தில் 'என் சமையலறையில்' பாட்டுக்கு இயற்கை மழையில் படம்பிடித்து சாதனை படைத்திருக்கிறார். 'காமெரா, கதையோடு ஒட்டி டிராவல் பண்ணணும். தனியா தெரியக் கூடாது" என்கிறார் கோபிநாத்.



சங்கடமாக உணர்ந்தேன்.

"போஸ்ரா என்ற இடத்தில் ஒரு வித்தியாசமான அரங்கத்துக்குப் போனோம். அதை ஆம்பி தியேட்டர் என்று சொல்கிறார்கள். தரை மட்டத்திலிருந்து, பிரம்மாண்டமான பள்ளம் தோண்டி, அதற்குள் போக படிக்கட்டுகளை அமைத்திருக்கிறார்கள். கற்களால் ஆன இருக்கைகள்தான். மேற்கூரையே கிடையாது. அந்த அரங்கம், அங்குள்ள மியூஸியத்தின் ஒரு பகுதியாக இருக்கிறது. மைக் இல்லாமலேயே, அதில் ஒலி எத்தனை தெளிவாக இருக்கிறது என்று அனுபவித்த போது மிக அதிசயமாக இருந்தது.

சிரியாவில் மிகப் பிரபலமான பெல்லிடான்ஸ் ஒன்றைப் படம் பிடித்தோம்.

அந்த பெல்லி டான்ஸ் பெண்மணி அசாத்திய திறமைசாலி! அவர் படப்பிடிப்புக்கு அணிந்து வந்த உடையைப் பார்த்துவிட்டு நம் ஊர் சினிமா பற்றியும், சென்சார்போர்டு பற்றியும் எடுத்துச் சொல்ல வேண்டியதாகி விட்டது! பிறகு வேறு உடை அணிந்து ஆடச் செய்தோம். பாடலில் ஒரு சில விநாடிகள் அக்காட்சி வரும்.

"இந்தப் பயணத்தின் க்ளைமாக்ஸ் என மஸ்கட் விமான நிலையத்தில் நடந்த சம்பவத்தைத்தான் குறிப்பிட வேண்டும். வழக்கமாக, படம்பிடித்த பிலிம் சுருளை, ஏர்போர்ட்டில், பாதுகாப்பு சோதனையின் போது எக்ஸ்ரே ரேடியேஷனில் படுவதைத் தவிர்த்துவிடுவோம். காரணம், எக்ஸ்ரே படச்சுருளைப் பொதுவாக பாதிக்காது என்றாலும் சில சமயங்களில், அதிக அடர்த்தியில் எக்ஸ்ரே பட்டால், பிலிமின் வண்ணத்தின் ரிச்னஸ் பாதிக்கப்படக் கூடும். நான் இதை டமாஸ்கஸ் மற்றும் அபுதாபி விமான நிலைய அதிகாரிகளிடம் விளக்கிச் சொல்லி, எக்ஸ்ரே கதிர் பரிசோதனையிலிருந்து விலக்கு பெற்று விட்டேன்.

"ஆனால், மஸ்கட்டில் விமான நிலைய பரிசோதனை அதிகாரி படுத்திவிட்டார். பிலிம் சுருளைத் திறந்து காட்டச் சொன்னார். அது சாத்தியமில்லை என்றாலும், எக்ஸ்ரே பரிசோதனைக்குட்படுத்து என்றார். பிரச்னையைச் சொன்னதும், 'அது உன் பிரச்னை, எனக்கு அது பற்றிக் கவலை இல்லை' என்றார்.

'விமானம் புறப்படும் கடைசி நிமிடம் வரை எவ்வளவோ போராடியும் அவர் விடாப்பிடியாய் இருந்தார். எக்ஸ்ரே பரிசோதனை முடிந்தது. ஆனால் நல்ல காலம், சென்னை வந்து பிலிமை பிராசஸ் செய்து பார்த்தபோது எந்தவித பாதிப்பும் ஏற்படவில்லை என்று தெரிந்ததும்தான் நிம்மதி!"

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

இத்தகையத் தீர்ப்புகள் வருங்காலத்தில் அவர் முக்கிய விஷயங்களில் தயங்காது செயல்படுவார் என்ற எண்ணத்தைத் தோற்றுவித்தாலும் வேறொரு விஷயம் சங்கடத்தைத் தருகிறது. நீதிபதி கிர்பால் வரும் நவம்பர் மாதம் ஓய்வு பெற உள்ளார். அவருக்கு அடுத்து அந்தப் பதவியை வகிக்க வாய்ப்புள்ள நீதிபதி பட்நாயக், டிசம்பர் 19ல் ஓய்வு பெறுவார். சீனியாரிடிபடிதான் தலைமை நீதிபதி பதவி என்பதால் இந்த ஒரே வருடத்தில் நான்கு தலைமை நீதிபதிகளைக் காணவிருக்கிறது உச்ச நீதிமன்றம். மிகக் குறைந்த காலத்துக்குதான் பதவியில் இருக்கப் போகிறோம் எனும் நிலையில் தலைமை நீதிபதிகள் பல காலமாகவே தூசு படியவிட்டிருக்கும் நீதித்துறை மாற்றங்களைச் செய்வார்களா என்பது கேள்விக்குறி.

— ஜி.எஸ்.எஸ்.

# மேலத்தெரு மரகதம்

உத்ராணியில், பெரிய மடையை முழுவதுமாக அடைத்துத் தண்ணீரை வடக்குப் பக்கமாகத் திருப்பியிருந்தார்கள். திடுதிடுமெனத் தண்ணீர்ப் பாலாய்ப் பாய்ந்து கொண்டிருந்தது. சில மீன்கள் தண்ணீரிலிருந்து எழுந்து துள்ளி மீண்டும் தண்ணீருக்குள் விழுந்தன. ஆற்றின் மறுகரையில் இருந்த பெரிய அரசமரத்தின் நிழல், தண்ணீரில் முழுவதுமாகப் படர்ந்து கிடந்தது.



வடக்குப் பக்கமாய்த் தண்ணீர் செல்லும் மடைக்கு மேலே இருக்கும் கருங்கல் படிகளில் கம்பு, அரிவாள், மண்வெட்டி சகிதமாய் 'எதற்கும் ரெடி' என்பது மாதிரி பரம்பைச் சேர்ந்த ஏழெட்டு பேர் உட்கார்ந் திருந்தனர்.

அப்போது, "ஏல உருப்படாம போவானுவளா..., இப்படியால பண்ணுவியோ... யார்ல தண்ணிய திருப்பினது?'' என்றான் மரகதத்தின் அண்ணன்.

"ஏம் நாங்கதான் திருப்புனோம்."

''யார்ல சொன்னவன்? அவ்வளவு திமிரால எதித்துப் பேசுத... தலைய எடுத்துப் போடுவோம். நொண்டி மவன் எங்கல? என்ன செஞ்சிருவியோன்னு கேட்டானாம்.."

"இப்டிலாம் பேசாண்டாம்... உங்க பயிரை மாதிரிதான் எங்களுக்கும். எங்க வயக்காடு தண்ணியில்லாம நாசமா போவட்டுமா?"

"அறைஞ்சம்னா பல்லுபோயிரும்; இப்டியால மடைய முழுசா அடைப்பியோ... உங்களுக்கும் தண்ணி வேணுந்தான். வேண்டாங்கல; பாதிய கெழக்க தொறந்துட்டு, வடக்கு பக்கமாவும் ஒடைய தொறந்துவை, அத வுட்டுட்டு.."

இதற்குள் வந்திருந்தவர்களில் இரண்டு பேர் அரவமில்லாமல் மண்டையைத் திறக்கச் சென்றனர். வட்டு போலான பெரிய இரும்பு வளையத்தைக் கஷ்டப்பட்டுச் சுற்றினர்.

''யோவ் தொறக்காதீங்க.. நல்லதுக்கில்ல...

"என்ன மெரட்டுத... என்னத்தக் கிழிச்சிருவ... கெழக்க வரமுடியாதுலேய்... கால் இருக்காது ஆமா."

"கெழக்க என்ன, கெழக்க, முடிஞ்சா இங்க எறங்கு. ஒத்தைக்கு ஒத்தை. நானும் பாத்துட்டிருந்தா ரொம்ப தலைக்கு மேல ஏறுதியேல" என்றவன் கையிலிருந்த கம்பைக்

# 4



கீழே போட்டு விட்டு வேட்டியைத் தார்ப் பாய்ச்சிக் கட்டினான்.

அதற்குள் மரகதத்தின் அண்ணன், அவனை கன்னத்தில் படாரென்று அறைய, நிலை குலைந்து போனான் அவன். கன்னத்தைத் தடவிக் கொண்டு நின்றவனை இன்னொருவன் ஓங்கி வயிற்றில் மிதித்தான். பொத்தென்று கீழே விழப்போனவனை, பரம்பைச் சேர்ந்த இன்னொருவன் பிடித்துக் கொண்டு, "இப்டி மாடமடங்க அடிக்கியோ... இது நல்லதுக்கில்ல; எங்களுக்கும் நேரங்காலம் வரும்" என்றான்.

"என்னது, நேரங்காலம் வருமா? நாக்கை அறுத்துப் போடுவம்! கேப்பியோல ஒத்தைக்கு ஒத்தை வாரியான்னு. எங்களையால எதுத்துப் பேசுத... ஒங்கப்பன் எங்கவீட்டு எச்சிக் கஞ்சிய குடிச்சிட்டு சுத்தி சுத்தி வந்தவன். அவனுக்குப் பொறந்துட்டு எங்களையா பேசுத..."

இதற்குள் பரம்பிலிருந்து ஒரு சிலர், பெரிய மனிதர்கள் என்று சொல்லிக் கொள்ளும் சிலரைக் கூட்டி வந்தனர். அதில் இரண்டு பேர் குட்டியின் அப்பாவையும் மரகதத்தின் அப்பாவையும் பார்த்து "வாங்க... வாங்க" என்றனர். அவர்கள் பழைய தலைமுறை. உடலில் சின்ன பயம்

● ஏக்நாத்

இருந்தது இவர்களைக் கண்டதும்.

"அதுலாம் இருக்கட்டும்... இப்படியா பண்ணுவியோ... ஒரு நாளும் இல்லாத திருநாளா" மடையை நோக்கிக் கையை நீட்டிச் சொன்னார் குட்டியின் அப்பா.

அப்போதுதான் அவர்கள் மடையைப் பார்த்தார்கள். மடை முழுவதுமாக மூடியிருந்தது.

"செரி...செரி... கோவப்படாதீங்க..." என்று சொல்லிவிட்டு, தார்ப்பாய்ச்சிக் கொண்டு நின்றவனையும் மற்றவர்களையும் பார்த்துத் திட்டினார்.

"இப்டியால பண்ணணும். பாதி மடையை தொறந்து விட்டுட்டுத்தானல எப்பவும் நமக்குத் தண்ணியத் திருப்புவோம். இது என்னல புதுசா, சோத்த திங்கேலா; வேறெதையும் திங்கேலா; கொழுப்பெடுத்தவனுவளா; அவ்வோ எல்லாரும் யார்ல? நமக்கு ரொம்ப வேண்டியவங்க" என்றார் ஒருவர்.

"நம்ம காசிதான் இப்டி மூடி வச்சிட்டுப் போனாம்" என்றான் அதிலிருந்த ஒருவன்.

"தொறங்கல மடையை; இதப் பாத்துட்டு மெனக்கெட்டு கெழக்கயிருந்து இவ்வளவு தூரம் நடந்து வந்திருக்காவோ எல்லாரும். முட்டாபயலுவோளா..."

அவர் சொன்னதும், அவர்களில் மூன்று பேர் சென்று மடையைத் திறந்து விட்டனர்.

தண்ணீர் வடக்குக்குச் செல்வதை விட கிழக்குப் பக்கமாக, அதிகமாகப் பாய்ந்து வருவதுபோல தெரிந்தது.

"இதுதான் கடைசியா இருக்கணும். இந்த மாதிரி இன்னொரு தடவ நடந்ததுன்னா, நாங்க மனுசனா இருக்க மாட்டோம்; பழசெல்லாம் மறந்திராதீங்க; நாங்க என்ன பண்ணுவோம்னு உங்களுக்குத் தெரியும். ஆமா..."

பச்சையும், இன்னும் இரண்டு பேரும் அங்கேயே இருக்க, மற்றவர்கள் திரும்பினர்.

"அந்தப் பயலுவளுக்கு வாய்க்கொழுப்புக் கூடிப்போச்சு; கன்னத்துல ஒரு போடு போட்ட பாரு. அது செரிதான் பாத்துக்கோ; அப்பதான் சரிப்பட்டு வருவானுவ" என்றான் மரகதத்தின் அண்ணனிடம் ஒருவன்.

இதைக்கேட்ட மரகதத்தின் அப்பா, "இதென்னல... நான் பிராயத்துல இருக்கும் போது, இப்படித்தான் தண்ணிய திருப்பிட்டானுவ... யாருமில்ல, நான், எங்கப்பா, இந்தா நிக்கான குட்டி அப்பன், மூணு பேருந்தான். அரவமில்லாம ராத்திரி போனோம். சாராயத்தைக் குடிச்சிட்டு உத்ராணி கல்படியில ரெண்டு பேரு தூங்கிட்டிருந்தானுவ. ஒண்ணுமே பேசல; சரியான இருட்டு. ஒவ்வொருத்தனையா தூக்கி மாட்டு வண்டியில போட்டோம். தண்ணிய கெழக்கத் திருப்பிட்டு, வண்டியைக் கொண்டு வந்துட்டோம் ஊருக்குள்ள. தூக்கத்துலயே ரெண்டு பேரையும், பாவூரா விட்டுவேப்ப மரத்துல முன்னயும் பின்னயுமா கட்டி வச்சிட்டோம். காலைல போதை தெளிஞ்சி பாத்தவனுவளுக்கு நம்ப முடியல. வேட்டி ஒருபக்கம் கெடக்கு; துண்டு ஒரு பக்கம் கெடக்கு. பெறவு, சாத்து சாத்துன்னு சாத்தி, அவனுவ ஊருக்குத் தாக்கல் சொல்ல ஆளனுப்புனோம். வந்தவனுக அவனுவள கட்டியிருக்கறதப் பாத்துட்டு அரண்டுட்டானுவ; இனும இப்டி பண்ண மாட்டோம்னுட்டு எல்லாரு கால்லயும் விழுந்து மன்னிப்புக் கேட்ட பெறவுதான் வுட்டோம்" என்றார் பெருமை பொங்க.

வேலு சொன்னதைக் கேட்டதும் நிலைகொள்ளவில்லை குட்டிக்கு. மனது கிடந்து தவியாய்த் தவித்தது. வாங்கிய டீயைக் கையில் வைத்துக் கொண்டு குடிக்கவா! வேண்டாமா? என்று யோசித்துக் கொண்டிருந்தான். மனம் முழுவதும் அவளையே மையங் கொண்டு வந்தது.

கடையில் வேறுயாருமில்லை. வேலு, குட்டியின் தவிப்பு புரிந்தவனாக, ஆறுதல் சொல்பவனாக எதையெதையோ சொல்லிக் கொண்டிருந்தான்.

"ஒன்னய அந்தப் புள்ள உசிருக்குசிரா நெனச்சதுனா, எப்படியாவது ஒன்னத்தான் கல்யாணம் பண்ணும். இல்லேன்னா இந்தக் கல்யாணத்தை நிறுத்த ஆயிரம் வழியிருக்கு. அதுவுமில்லேன்னு வையு, ராத்திரியோட

"வேலைக்காரியை நிறுத்திட்டேன்!"

"ஏன்?"

"என் கணவர் 'வி.ஆர்.எஸ்.'ல வந்துட்டார்!"

— ரிஷிவந்தியா



ராத்ரியா நீ அவள கூட்டிட்டுப் போவ நான் உதவி பண்ணுதேன். அதுக்காகக் கவலப் பட்டுகிட்டு இருக்காத என்னா..."

அதற்குள் மரகதத்தின் மதினி தூக்குச் சட்டியோடு தூரத்தில் வருவது தெரிந்தது.

"குட்டி... உன் ஆளோட மைனி வாரா; நீ பேசாம இரு; என்ன நெலவரம்னு நான் கேக்கேன்."

அவள் வந்தாள்.

தூக்குச் சட்டியைக் கடை திண்டின் மீது வைத்துவிட்டு "மூணு காபி; சீனி ரொம்ப போடும்" என்றாள்.

''வீட்டுக்கு விருந்தாளு வந்திருக் காவுளோ."

"ஆமா.... பாப்பாக்குடியிலருந்து."

"என்னா சும்மா தானா?"

''கொளுந்தியா இருக்கால்லா... அவள பொண்ணு பாக்க.."

''அத தான் நான் நெனச்சேன். நல்ல வெஷயந் தான். ஒரு பையன் போனானே. அவன் தான் மாப்ளயா?"

''ம்ம்...'' என்று விட்டுச் சிரித்தாள். சிரிக்கும்போது முன்பக்க ஓட்டைப் பல் கொடூரமாகத் தெரிந்தது.

குட்டிக்குத் 'திக்' கென்றது. அவளது வீட்டுக்குச் செல்லும்போது பார்த்த மாப்பிள் ளையின் முகம் கண்முன் வந்தது.

தன்னைவிட நல்ல கலர். அழகாக கூட இருந்தான். கழுத்தில் மைனர் செயின். இளம் மீசையை இலேசாகத் திருகிவிட்டி ருந்தான். மஞ்சளில் பூப்போட்டச் சட் டையை அணிந் திருந்தான். இடுப் பில் நாட்டாமை வேட்டி. முகத்தில் பணக் காரக் களை குடியிருந்தது. நெற்றியில் நாரா யணசாமி நாமம் இழுத்திருந்தான். தன்னை விட எல்லாவற்றிலும் உசத்தியாகத் தெரிந் தான். அப்படி இப்படியென்று எல்லோரும் சரிகட்டி அவளை இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிக்க வைத்து விட்டால்..? ச்சே..ச்சே... மாட்டாள். அம்மன் கோவில் வாய்க்காலில் செய்த சத்தியம் நினைவுக்கு வந்தது.

"என்ன குட்டி... என்ன யோசனை, டீய குடி, ஆறிராம" என்றான் வேலு.

அதற்குள் நன்றாக ஆறிப்போய் இருந்தது டீ. "இதைக் கொஞ்சம் சூட வச்சித் தா" என்றான் குட்டி.



மரகதத்தின் அப்பாவும், அண்ணனும் வீட்டுக்குள் வரும்போதே யாரோ வந்திருப்பதை ஊகித்துக் கொண்டனர். நான்கு ஜோடி புதுச் செருப்புகள் மரகதம் வாசலில் போட்டிருந்த கம்பிக் கோலத்தைச் சிதைத்துக் கிடந்தன.

வாசலுக்கு மேல் பக்கமாய் ப்ளாஸ்டிக் வாளியில் வைக்கப்பட்டிருந்த தண்ணீரைச் செம்பால் மொண்டு காலைக் கழுவினார் மரகதத்தின் அப்பாவும் அண்ணனும்.

வீட்டுக்குள் நுழைந்ததும் வந்திருந்தவர்கள் கட்டிலிலிருந்து எழுந்தனர்.

"யண்ணே... எப்டியிருக்கியோ..." என்றாள் அந்தப் பெண். அவளின் முகம் மலர்ச்சியில் ஒளிர்ந்தது.

## அடேங்கப்பா!

'அவருக்கென்ன அதிர்ஷ்டக்காரர்' என்று காதால் புகைவிடுபவர்களுக்கு இந்தத் துணுக்குச் சமர்ப்பணம். ஸ்பைடர்மேனாகத் திரையில் தோன்றியுள்ள டாபி மகிர் என்ற நடிகர், ஹாலிவுட்டின் உச்ச நட்சத்திரங்கள் வசிக்கும் பவர்லி ஹில்ஸ் பகுதியில் 5,000 சதுர அடி பரப்பில் ஒரு மாளிகையை வாங்கியிருக்கிறார். இதன் விலை 37 லட்சம் டாலர்கள். ஸ்பைடர்மென் படத்தில் நடித்ததற்காக இவருக்கு அளிக்கப்பட்ட தொகை நாற்பது லட்சம் டாலர்கள். அடுத்தடுத்து வரவிருக்கும் இரு ஸ்பைடர்மென் தொடர் திரைப்படங்களுக்காக இவருக்கு 230 லட்சம் டாலர் தொகை தரப்படும் என்று உறுதியளித்திருக்கிறார்கள்.

— குல்லு

கண்ணைச் சுருக்கி மரகதத்தின் தந்தை உற்றுப் பார்த்துவிட்டு, "நீயாம்மா.. வா...வா... எல்லாரும் வாங்க, வீட்ல சௌக்கியந்தானா எல்லாரும்?" என்றார்.

"அவ்வோளுக்கென்ன குறைச்சல். நல்லாத்தான் இருக்கோம்" என்றவள், பக்கத்தில் நின்ற இளைஞனைக் காட்டி, "இவனத் தெரியுதாண்ணே" என்றாள்.

"யாரு...ஓம்மவனா... அப்படியே ஓம் முகத்தை உரிச்சுவச்சிருக்கான... சின்ன வயசுல பாத்தது. இப்ப என்ன செய்தான்?"_ என்றவர் வீட்டுக்குள் திரும்பி, "ஏம்மா இவங்களைச் சாப்பிடச் சொன்னியா?" என்றார்.

"சாப்பாடெல்லாம் இருக்கட்டும். வந்த வெஷயத்தைச் சொல்லிருதேன். என் மவன் சேர்மாதேவி பேப்பர் மில்லுல வேல பாக்காம். நல்ல சம்பளம். நம்ம மரகதத்தை அவனுக்குக் கேக்கலாம்னு வந்திருக்கேன்" என்றாள் அந்தப் பெண்.

அவரின் முகத்தில் எந்தவிதச் சலனமும் இல்லை.

தோளில் கிடந்த துண்டை எடுத்து முகத்தைத் துடைத்தார். பிறகு சாய்வு நாற்காலியில் மெதுவாகச் சாய்ந்தார்.

அடுக்களையில் சோகமாக நின்று கொண்டிருந்த மரகதம், அப்பா என்ன சொல்லப் போகிறார் என்பதை ஆவலாய்ப் பார்த்தாள். கண்ணுக்குள் குட்டி, சோகமாக நின்று கொண்டிருந்தான். அப்பாவின் வார்த்தையைக் கேட்கும் எதிர்பார்ப்பில். காலைக் கட்டிய கோழி போடும் கூப்பாடாய் உள்ளுக்குள் கொக்கரித்துக் கொண்டிருந்தது சப்தம். மனத்துக்குள் புயலடித்துக் கொண்டிருந்தது.

அப்பா அவர்களிடம் சரியெனச் சொல்லிவிட்டால், எந்தத் துணிச்சலான காரியத்தையும் செய்ய மனம் உசுப்பியது. ஊர் மானம், குடும்ப கௌரவம் எல்லாம் தாண்டி காதலனோடு ஊரெல்லை தாண்டவும் தயாரானாள் மரகதம்.

அவளின் தந்தை, "மரகதம் கொஞ்சம் நீத்தண்ணி கொண்டு வாம்மா" என்றார். பிறகு வேறெங்கோ வேடிக்கை பார்த்துக் கொண்டே சொன்னார்.

"அவளுக்குத்தான் உள்ளூர்லயே மாப்ள இருக்கே!"

துன்பம் மட்டுமல்ல, சில வேளைகளில் சந்தோஷம் கூட ரணமாகிவிடுகிறது. மரகதத்துக்கு அதுதான். அவனிடம் சொல்ல வேண்டுமே; தவியாய்த் தவித்து, கண்களில் ஏக்கம் சுமந்து, வீதிகளில் மட்டுமே காற்றில் அலைந்து கொண்டிருந்த காதலுக்கு இதோ விடை. உயிரைக் கொல்லும் இந்த விஷயத்தை அவனிடம் சொல்ல வேண்டுமே?

வாசலில் அவளின் அப்பாவும், அந்தப் பெண்ணும் அவளுடன் வந்திருந்தவர்களும் நின்று கொண்டிருந்தனர். இவர்களைத் தாண்டி வாசல் செல்வது வாய்ப்பில்லாதது. அடுக்களையிலிருந்தே பின்பக்க வாசலுக்கு வந்தாள். அருகில் பால்காரன் வீடு. அவன் வீட்டு முடுக்கு வழியாக வந்த மரகதம், குட்டியின் வீட்டை மகிழ்ச்சி பொங்க பார்த்தாள். ஆளில்லாத அடுக்களைமட்டும் தெரிந்தது. இவள் புழங்கப் போகும் அடுக்களை!

(முற்றும்)

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** ஏதோ ஒரு செல்ஃபோன் விளம்பரத்தில் நடிகர் மணிவண்ணன் சொல்வாரே, அதுபோல மேஷராசிக்காரர்களுக்கு இந்த வாரம் கல்லா எப்பவுமே ஃபுல்லா இருக்கும். செவ்வாய் 3ல் சுக்ரனுடன் என்பதால் மனத்தில் உற்சாகம், துணிவு, நம்பிக்கை பிறக்கும். உடல் ஆரோக்கியம் படு சிர். புதிய முயற்சிகளில் செம லக். மாணவர்களின் வருங்காலம் ரொம்ப பளிச்... வெளிநாட்டுத் தொடர்புள்ள தொழில்கள் வளர்ச்சி அடையும். வார பிற்பகுதியில் குடும்பத்தில் செலவு அதிகரிக்கும்.

**ரிஷபம் :** ஏதோ ஒரு கூல் டிரிங் விளம்பரத்துலே 'ஃபைவ் ருபிஸ் இருக்கா?' என்று கேட்கும், அப்பாவி இளைஞன் போல, நீங்களும் 'ஒரு நூறு ரூபாய் இருக்கா?' என்று கைமாத்துக்காகக் கெஞ்சியதை எல்லாம் மறந்துடுங்க. இப்ப உங்க தனஸ்தானமாகிய 2ல் குருவுடன் ராசிநாதன் மற்றும் செவ்வாய் கூடுவதால் பொருளாதார அபிவிருத்தி ஏற்படும். தேவைக்கு மேல் பண வசதி ஏற்படும். உணவு, ஆடை, சம்பந்தப்பட்ட தொழில்கள் மேன்மையுறும். குடும்பத்தில் சுப காரியங்கள் நிகழ சந்தர்ப்பம் கூடி வரும். பயணங்கள் ஆதாயம் தரும். பெண்கள் நிலை உயரும்.



**ஜோஸியம், ஜாதகத்தில் நம்பிக்கையில்லாத பாடலாசிரியர் தாமரைக்கு நண்பர்கள் உறவினர்கள் உதவ வருவார்களாம்.**

**மிதுனம் :** காற்றாடி அறுந்தாலும், மழை நீரில் காகிதக் கப்பல் விட்டு மகிழும், சூப்பர் ஸ்டார்களைப் போல, மிதுன ராசிக்காரர்கள் எதிர்பாராத சோதனை வந்தாலும் அதையே சாதனையாக்கி, 'உள்ளம் கேட்குமே மோர்' என்று பாடி மகிழ்வார்கள். ராசிநாதன் புதன் ரிஷபத்தில் 1ல், பரிவர்தனை பலம் ஏற்படுவதால் இந்த அனுகூலம் முயற்சிகள் யாவும் திட்டமிட்டபடியே நடக்கும். கலைத்துறையினர் சுபிட்சம் பெறுவார்கள். பெண்களுக்கு ஆடை, அணிகலம் சேர்க்கை உண்டாகும்.

**கடகம் :** எடுத்து, பிசைஞ்சு எண்ணெயிலே போட்டு, 'சபாஷ்' வாங்கும் குஷ்பு போல நீங்களும் உங்கள் மேலதிகாரிகளிடம் பாராட்டுப் பெறுவீர்கள் குரு, சுக்கிரன் 12ம் இடத்தில் சேருவதால் பொருளாதார நிலையில் நல்ல ஏற்றம் ஏற்படும். வெளியூர், வெளிநாட்டுப் பயணங்கள் அனுகூலம் தரும். பொன், வெள்ளி, நவரத்தினம், ஜவுளி, தோல் சம்பந்தப்பட்ட வியாபாரம் செழிக்கும். பெண்கள் நோக்கம் நிறைவேறும். புதியவாகன யோகம் உண்டு.

**சிம்மம் :** சாதா 'குக்'ஆக இருந்த மோகன்ராம், குறிப்பிட்ட அப்பளத்தாலே 'பாப்புலர் குக்' ஆனது மாதிரி உங்களுக்கும் திடீர் புகழ், பாராட்டு கிடைக்கும். சூரியன் 10ல் கூட்டுக் கிரக சேர்க்கையுடன் சஞ்சாரம் என்பதால், புத்திசாலித்தனம், தெளிவான சிந்தனை, தெய்வ பலம் எல்லாம் கூடி வரும். பூமி சம்பந்தப்பட்ட தொழில் அனுகூலம் தரும். பத்திரிகை, எழுத்து, ரசாயனம் துறைக்காரர்கள் வளர்ச்சி காண்பார்கள். நண்பர்கள், உறவினர்கள் ஆதரவு பெருகும்.

**கன்னி :** 'இது நிச்சயமா எங்க சைடுலே இருந்துதான்' என்று பெருமை பேசும் மணப்பெண்ணுக்கு வாட்ச் பரிசு கிடைத்தது போல, ராசிநாதன் 9ல், சுக்கிரன் பரிவர்தனை யோகம் என்பதால் உங்களுக்கும் மகிழ்ச்சியான பலன்கள் பரிசு. மதிப்பு, அந்தஸ்து, கௌரவம் எல்லாமே உயரும். சுய தொழில் முன்னேற்றம் தரும். வியாபாரிகள் போட்டிகள் விலகி, அமைதியும் அதிக

லாபமும் அடைவார்கள். மருந்து, மருத்துவம், ரசாயனம், இயந்திரம் போன்ற தொழில்கள் வளர்ச்சி காட்டும். புதுமனை, வாகன யோகம் அமையும்.

**துலாம்** : 'சிங்கம் போல ஸ்ட்ரெந்த் எனக்கு' என்று சொல்லும் சுட்டிப் பையன் போல, துலாம் ராசிக்காரர்களின் புத்தி, பலம் எல்லாம் கூடும். உறவினர் வருகை மகிழ்ச்சி தரும். உத்தியோகஸ்தர்கள், அலுவலகப் பணியாளர்கள் முன்னேற்றம் காண்பார்கள். பழைய கடன்கள் நிவர்த்தியாகும். சங்கீதம், ஓவியம், நாடகம், கலை சம்பந்தப்பட்ட தொழில்களில் திடீர் அதிர்ஷ்டம் வரும். திருமண, சுபகாரியங்களால் செலவுகள் அதிகரிக்கும். குரு பலம் காரணமாக, குடும்பத்தில் ஒற்றுமையும், மகிழ்ச்சியும் நீடிக்கும்.

**விருச்சிகம்** : ஆறே வாரத்தில் சிவப்பழகு தரும் க்ரீம் போல, உங்களுக்கும் சிவப்பு நிறம் அதிர்ஷ்டம் தரும். 8ல் சுக்ரன், குருவுடன் மற்றும் 7ல் கிரக கூட்டுச் சேர்க்கை என்பதால் உடல் ஆரோக்கியம் பாதிக்கப்பட்டு, தெய்வ பலத்தால் நிவர்த்தியாகும். குடும்பஸ்தானம் பலம் பெற்றிருப்பதால், குடும்பத்தில் மன நிம்மதி, ஒற்றுமை நிலவும். சுப காரிய முயற்சிகளில் அனுகூலமுண்டு. நண்பர்கள், உறவினர்கள் உதவ முன்வருவார்கள். கமிஷன், காண்டிராக்ட், இண்டஸ்ட்ரீஸ், இயந்திரம் சம்பந்தப்பட்ட பொருள்கள் நல்ல லாபம் தரும். மாணவர்கள் அளவோடு நன்மை பெறுவார்கள்.

**தனுசு** : 'கலர் கொண்டு வா' என்று ஹோட்டல் சர்வரைக் கலாய்க்கும் சிம்ரன் அண்ட் கோ போல உங்களைத் தொந்திரவு செய்து கொண்டிருந்த எதிரிகள் 'கப்சிப்... கபர்தார்' ஆயிடுவாங்க. 6ல் உள்ள கூட்டுக்கிரக சேர்க்கையுடன் சூரியனும் உலவுவதால், மனத்தில் துணிவும் உற்சாகமும் கூடும். திருமணம் ஆகாதவர்களுக்குக் கெட்டி மேளச் சப்தம் விரைவில் கேட்கும். பண நடமாட்டம் சென்னை வெயில்போல வெளுத்துக் கட்டும். பிரிந்து போனவர்கள் ஒன்று சேருவார்கள். ரேஸ், லாட்டரி வகையில் சுமாரான பலன்களே நிகழும்.

**மகரம்** : "தாய்மார்களே... மறந்துடாதீங்க" என்று ஸ்பெஷலாக வேண்டிக் கொள்ளும் மனோரமா போல, நீங்களும் கிரக ப்ரீத்தி செய்து மனமுருக கேட்டுக் கொள்ளுங்கள். உடல் ஆரோக்கியம் சீராகவே இருந்தாலும், போடும் திட்டங்கள் எல்லாமே தடைபட்டு நின்று பிரச்னை தரும். ஆகவே புதிய முயற்சிகளில் நிதானம் தேவை. சட்டம், காவல், இராணுவம் துறைக்காரர்கள் முன்னேற்றம் காண்பார்கள். ரெடிமேட், மருந்து, உணவு போன்ற தொழில்கள் லாபம் கொழிக்கும். ஞானமார்க்கத்தில் ஈடுபாடு அதிகரிக்கும்.

**கும்பம்** : "திருப்தி.. திருப்தி.. மனசுக்கு ரொம்ப திருப்தி" என்று பூரித்துப் போகும் பெண் போல, கும்பராசிக்காரர்கள் குரு பலத்தால் கொண்டாட்டம் போடுவார்கள். இதுவரை உத்தியோகத்திலிருந்து வந்த எதிர்ப்புகள் விலகி, சகஜமான நிலைமை ஏற்படும். வெளிநாட்டுக்குப் போக முயற்சி செய்து வருபவர்களுக்கு அதற்கான சூழ்நிலை உருவாகும். சுபகாரியங்கள் செலவு தந்தாலும், மனமகிழ்ச்சியைக் கூட்டும். உறவினர்கள் உதவி கிட்டும். 5ல் குரு உலவுவதால், மதிப்பு, கௌரவம் செல்வாக்கு உயரும்.

**மீனம்** : 'சாப்பிடமாட்டேன்னு சொன்னேன். குடிச்சுட்டில்லே இருக்கேன்!' என்று ஒரு போடு போட்டுச் சமாளிக்கும் வால் பையன் போல, நீங்களும் வரும் சிறுசிறு இடைஞ்சல்களையெல்லாம் சாமர்த்தியமாகச் சமாளிப்பீர்கள். வாழ்க்கையில் அமைதியும் இனிமையும் அபிவிருத்தியாகும். சுய தொழில் லாபம் தரும். தனியார் நிறுவனங்களில் பணிபுரிவோருக்கு அனுகூலமான திருப்பம் ஏற்படும். புதிய சொத்து, புதிய வாகனம், நகை போன்ற யோகப் பொருட்கள் சேரும். புனித காரியங்களில் பங்கு கொள்வீர்கள். குரு மகான்கள் மூலம் தெய்வீக அனுபவங்கள் நிகழும்.



# மயில்மலை மேவிய முருகன்

## குருஜி ஏ.எஸ். ராகவன்

**'மருவும் அடியார்கள் மனதில்**
**விளையாடும்**
**மரகத மயூர பெருமாள் காண்'**

– என்ற திருப்புகழ் வரியை ஓதுவா மூர்த்திகள் மடக்கி மடக்கி விருத்தமாகப் பாடக் கேட்க வேண்டும்... பச்சை நீல வண்ண தோகை விரிய, ஒயில் கழுத்தும் ஒளி சிந்தும் கூர்மையான பார்வையுமாக அந்த பக்ஷி வாகனம் பாலமுருகனை தன் மீது ஏற்றிக் கொள்கிறது. சுழன்று ஆடும் அதன் அசைவுகளின் அழகுத் தெறிப்பில் முருகனே 'மரகத மயூர பெருமாளாகி' அடியார்களான நம் மனத்துள் புகுந்து விளையாட ஆரம்பிக்கிறான்! – 'மரகத மயூர பெருமான் காண்' என்ற வரியைப் பாடக் கேட்க கேட்க இப்படியொரு காட்சி நம் மனத்திரையில் விரிந்து கொண்டே போகும்.

மயிலின் பெருமை அத்தகையது – முருகனின் பெருமையோடு போட்டி போடுகிற அளவுக்கு அதற்குச் சிறப்பு. அதனால்தான் அருணகிரியார் 'மயில் விருத்தம்' என்ற தலைப்பிலே பாடல்கள் இயற்றி

'ரத்னக் கலாபமயிலே'
'மரகத கலாபத்தில் இலகு மயிலே!'
'பச்சைப் பசுந்தோகை வாகை மயிலே!'
'சூரிக் கலாப மயிலே'
'வரமுதவு வாகை மயிலே'
'க்ரவுஞ்சகிரி கிழிபட நடாவு மயிலே'
'விபுதர்பதி குடிபுகுத நடவு மயிலே'
'நிருதர்குல துஷ்டர் நிஷ்டூர மயிலே'
'எண்டிசை அசைய வையாளி ஏறு மயிலே'

என்றெல்லாம் மயிலைச் சிறப்பிப்பதன் மூலம் முருகனைச் சிறப்பித்துப் பாடியிருக்கிறார்.

இந்த மயிலும்கூட ஒரு கட்டத்தில் முருகனிடம் குட்டுப்பட்டு பின்னர் சாப விமோசனம் பெற்றது என்பதாக ஒரு புராண கதை:

மயிலும் சேவலும் முருகனுக்குச் சேவை செய்வதுபோல் தாங்களும் செய்ய வேண்டும் என்று விரும்பினர் சூரன், பதுமன், சிங்கன், தாரகன் முதலான அசுரர்கள். சூரன், தான் மயிலாக மாறிவிட வேண்டும் என்று தவமிருந்தான். பதுமன் சேவல் கொடியாக மாற ஆசைப்பட்டான். சிங்கனும் தாரகனும் சக்தி தேவியின் சிம்ஹ வாகனமாகவும் ஐயனாரின் யானை வாகனமாகவும் மாறிவிட வேண்டும் என்று தவம் செய்தார்கள்.

முருகனின் வாகனமாக ஏற்கெனவே இருந்த மயிலுக்குப் பயம் பிடித்து கொண்டது, எங்கே தன் பதவி போய் விடுமோ





மயூரகிரி தலபுராணம் கூறும் வரலாறு இது.

இன்றைக்கும் மலையின் தென் பாகத்தைப் பார்த்தால் மயில் தோகை போல் தோற்றமளிக்கும். 144 படிகள் ஏறி உச்சியை அடையுமுன் தோகையடி விநாயகரை வழிபட்டுப் புறப்பட வேண்டும். அடிவாரத்தில் தென் மேற்கே, முருகன் தனது வேலால் தோற்றுவித்த சரவணப் பொய்கை இருக்கிறது.

என்று. உடனே சிவபெருமானிடம் சென்று முறையிட்டது. சிவபெருமானும் அந்த நான்கு பேரை உருமாற்றி விட்டார். நால்வரும் சிவனுக்குத் தொண்டு புரியும் பூத கணங்களாக மாற்றப்பட்டனர்!

முருகனுக்கு அண்மையில் நெருங்க நினைத்த தங்கள் முயற்சியானது மயிலினால் குலைக்கப்பட்டதை அறிந்தனர் அந்த நாலு பேரும். மயிலுக்குப் பாடம் கற்பிக்க முடிவு செய்தனர். மயிலுக்கு இவ் விஷயத்தில் உற்ற துணையாக இருந்தவை கருடனும் அன்னமும். எனவே நால்வர் அணி, மூவர் அணிக்குள் கலகத்தை ஏற்படுத்தியது. சிறிது காலத்தில் மயில் அன்னத்தையும் கருடனையும் துன்புறுத்த ஆரம்பித்துவிட்டது! அவை சென்று முருகனிடம் முறையிட, மயிலை மலையாகப் போகும்படி சபித்துவிட்டார் முருகன்! அதுவும் போதாதென்று மயிலைப் பற்றி புறங்கூறிய நால்வரையும் கூட சபித்து தண்டித்தார்! நால்வரும் அசுரர்களாகப் பிறந்து பின்னர் முருகனாலேயே ஆட்கொள்ளப்பட்டனர். குன்றாகிப்போன நமது மயிலோ முருகனிடமே பிழைபொறுத் தருளும்படி வேண்டியது.

முருகனோ குன்றாகவேயிருந்து தன்னை வழிபடுமாறு பணித்தான். சூரபத்மனை வென்று திரும்பும்போது சாபவிமோசனம் அளிப்பதாக ஆறுதலும் சொன்னான்.

குன்றாக மாறிய மயில் முருகனைத் தொழுது நின்ற இடம்தான் குன்றக்குடி. (காரைக்குடியிலிருந்து மேற்கே 11 கி.மீ. தொலைவில் உள்ளது.)

சூரசம்ஹாரம் முடித்துத் திரும்பிய முருகன் குன்றக்குடி வந்து மயிலின் சாபத்தை நிவர்த்தி செய்து குன்றை இரு கூறுகளாக்கினான். ஒரு பகுதிக்கு சாருப்ய பதவி கிடைத்தது. மற்றொன்று அப்படியே மலையாக நிலைத்தது. அக்குன்றின் மேலேயே எழுந்தருளினான் முருகன்.

குன்றக்குடி மலை இரு பகுதிகளாக வகுக்கப்பட்டிருக்கிறது. மேல் பகுதி மலைக் கோயில் என்றும் மறு பகுதி கீழ்க் கோயில் என்றும் அழைக்கப்படுகிறது.

கீழ்ப்பகுதி கோயில் பெரும்பாலும் குடவரை அமைப்பில் இருக்கிறது. ஈசுவரனும் அம்பிகையும் தேனாற்றுநாதர், அழகம்மை என்று பெயரிலேயே எழில் தாங்கி நிற்கிறார்கள். அகஸ்தியருக்கு சன்னிதி இருக்கிறது. மலையைக் குடைந்து ஐந்து லிங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மலைக்கொழுந்தீசுவரர் என்ற சௌந்தர்ய பெயருள்ள பெருமான் சந்நிதியில் துவார பாலகர்கள், வலம்புரி விநாயகர், மகாவிஷ்ணு, பிரும்மா, துர்கை, சிவன் சிற்பங்கள் செதுக்கப்பட்டு அழகிய சிற்பக்கலைக் கூடமாகவே திகழ்கிறது.

படியேறி வரும் வழியில் இளைப்பாற மண்டபங்கள் இருக்கின்றன. மலை உச்சியில் வல்லப விநாயகர் வரவேற்கிறார். இடும்பன் இருக்கிறார்; வீரவாகுத் தேவரும் இருக்கிறார். தெற்கு நோக்கிய பிரதான வாயில். ராஜ கோபுரம் கடந்து உள்ளே சென்றால் ஒரே பிராகாரம்தான். விசாலாட்சி, சோமாஸ் கந்தர்... அப்புறம் இதோ ஆறுமுகப் பெருமான் சன்னிதி.

உத்ஸவ மூர்த்தங்களெல்லாம் சலவைக் கல் மண்டபத்தில் கொலுவிருக்கின்றன.

பிராகாரத்தின் தென்பகுதியில் சமயக் குரவர் நால்வர், சொர்ண கணபதி; வடக்கே குழந்தையாக வடிவேலர், நடராஜர் ஆனந்த நடனப் பிரகாசனாய் மகனைக் கண்டுகளிக்கிறார்.

அலங்கார மண்டபத்தின் தூண்களில் மருது சகோதரர்களின் சிற்பங்களைப் பார்க்கலாம்.

மூலஸ்தானத்து முருகனுடன் வள்ளி தெய்வானையரும் தனித் தனி மயில் வாகனங்களில் வீற்றிருக்கிறார்கள். இத்தலத்தின்

தனிச் சிறப்பு இது. சபிக்கப்பட்ட மயிலுக்கு மும்மடங்கு கருணையைப் பொழிந்து தனக்குமட்டுமின்றி தேவியருக்கும் தனித் தனியே வாகனமாக்கி மகிழ்ந்திருக்கிறான் முருகன் என்று வியக்கத் தோன்றுகிறது.

புண்ணிய தீர்த்தங்கள் பக்கம் பக்கமாய்ச் சூழ்ந்திருக்கின்றன – சரவண புஷ்கரிணி, மயில் தீர்த்தம், சக்தி தீர்த்தம், பாண்டிய தீர்த் தம், தேனாறு, ஷண்முக நதி என்று நீண்ட பட்டியல்.

தல விருட்சமான ஆலமரம், தழைத் தோங்கும் கந்தனின் கருணைக்குச் சாட்சியே போல் விழுதும் வேரும் பரவி நிற்கிறது.

குன்றக்குடி முருகனை கண்ணபிரான், பிரும்மா, இந்திரன், சூரியன், சந்திரன், மன்மதன், வசிஷ்டர், நாரதர், பாண்டவர்கள் என்று ஒருத்தர் பாக்கியில்லாமல் வந்து வழி பட்டுவிட்டுப் போயிருக்கிறார்கள். அருணகிரிநாதரின் ஏழு திருப்புகழ் பாக்கள் இத்தலம் குறித்துக் கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்று கிருஷ்ண லீலைகளை விவரித்துப் பாடி இங்கே கண்ணன் வழி பட்டதை நினைவுபடுத்துகிறது:

*"பேசா தேபோய் நின்றுறி யிற்றயிர்*
*வாயா வாவா வென்று குடித்தருள்*
*பேரா லேநீள் கஞ்சன் விடுத்தெதிர்*
*வருதூது*
*பேழ் வாய் வேதா ளம்பக டைப்பகு*
*வாய்நீள் மானா ளுஞ்சர*
*ளத்தொடு*
*பேயானாள் போர் வென்றெறி*
*ரிட்டவன் மருகோனே"*
*("நேசா சாரா" திருப்புகழ்)*

*"தாமோக முடனூறு பால்தேடி யுரலூடு*
*தானேறி விளையாடு*
*மொருபோதில்*
*தாயாக வருசோதை காணாது களவாடு*
*தாமோத ரன்முராரி*
*மருகோனே"*
*("நாமேவு குயிலாலு" திருப்புகழ்)*

'கருப்நிலை' என்று தொடங்கும் திருப் புகழில்,

'தகுகுதகு தகுதகதகு திகுகுதிகு திகுதிகுகு' போன்ற பல்வேறு சந்த ஒலிகளைப் பின்னி, படைகள் அணிவகுத்துச் செங்கதிர்வேலன் சமருக்குச் செல்லும் அழகை சப்தத்தின் மூலமே வெளிக் கொணர்கிறார் அருணகிரி நாதர். குன்றக்குடி தலத்துக்கு உரிய திருப் புகழ் இது.

நம் அகத்தினில் உலகாய மாயைகள் புரியும் போரில் ஜெயித்து முருகனின் திருவடி பற்ற வேண்டும் என்ற பிரார்த்தனை திருப்புகழும் இருக்கிறது:

**தவள மதிய மெறிக்குந் தணலாலே**
**சரச மதனன் விடுக்குங்**
**கணையாலே**
**கவன மிகவு முரைக்குங் குயிலாலே**
**கருதி மிகவு மயக்கம் படவோநான்**
**பவள நிகரு மிதழ்ப்பைங் குறமானின்**
**பரிய வரையை நிகர்க்குந்**
**தனமேவும்**



**இவளு மணிகள் கிடக்குந் திருமார்பா**
**திகழு மயிலின் மலைக்கண்**
**பெருமானே**

மயில்மலை மேவிய குன்றக்குடியானை வேண்ட, நினைத்தது நடக்கும் என்று நம்பிக்கை நிலவுகிறது. 'காரியம் கைகூட குன்றக்குடியானுக்குக் காவடி எடு' என்று சொலவடையே வழங்குகிறது.

நினைவே அவனாக வேண்டும் என்று நினைத்துப் பாடும் அருணகிரிநாதரின் பக்குவத்தில் ஒரு துளியாவது நாம் பெற பிரார்த்திப்போம்.




தாடையில் ஏற்பட்ட காயத்துக்குப் பயங்கரமான கட்டுப் போட்டுக்கொண்டு கும்ப்ளே பந்து போட மைதானத்துக்கு வந்தபோது பிரமிப்பான பிரமிப்பு! தாள முடியாத வேதனையைத் தாங்கிக்கொண்டு போடுகிறார் என்பதை ஒவ்வொரு நிமிடமும் அவர் முகம் காட்டியது. அந்தத் தியாகத்துக்குப் பரிசாக லாராவின் விக்கெட் கிடைத்ததும், சகாக்கள் ஓடி வந்து அவரைக் கட்டித் தழுவிக் கசக்கிப் பிழிந்து விட்டார்கள். பாண்டேஜ் பிரிந்து விடுமோ என்ற அச்சம்கூட ஏற்பட்டது. பார்த்துக் கொண்டிருந்த சித்து, courage, thy name is Kumble! என்று வியந்தார்.

கும்ப்ளேக்குக் 'கீர்த்தி சக்ரா' விருது தர வேண்டும் என்று ஒரு ரசிகர் ஹர்ஷா போக்ளேக்கு இ-மெயில் அனுப்பியிருந்தார். அதை முழு மனத்துடன் ஆமோதித்த கவாஸ்கர், அந்த நிலைமையில் கும்ப்ளேயைக் கேள்வி மேல் கேள்வி கேட்டுத் துளைத்தெடுத்த நிருபர்களைக் கடுமையாகக் கோபித்தார். 'தாடையின் ஒவ்வொரு சிறு அசைவும் அவருக்கு மரண வேதனையாக இருக்கும் என்று தெரிந்தும் அவரை இப்படிப் பேச வைத்தது அக்கிரமம். மனிதத் தன்மை இல்லாதவர்கள் இவர்கள்' என்று திட்டினார்.

One way to atone for their sin: கும்ப்ளேயின் ஆபரேஷன் வெற்றிகரமாக நடந்து விரைவிலேயே அவர் இந்திய அணியில் விளையாட வேண்டும் என்று மும்பை மகாலக்ஷ்மி கோவிலில் ஓர் அர்ச்சனை செய்வதுதான் அது.

'அம்மா' தினமா? விடாதே, பிடி! 'அப்பா' தினமா? அறுத்துத் தள்ளு, அதை வைத்து! 'காதலர்' தினமா? சக்கையாய்ப் பிழி!

# தைரியமே, உன் பெயர் கும்பளோ!

இந்த 'தினங்கள்' இல்லாவிட்டால் பாதி சேனல்கள் கடையை மூடிக்கொண்டு போயிருக்கும். ஐடியா பாலைவனத்தில் நா வறண்டு தவிக்கும் டீவிகாரர்களுக்கு இவைதான் பசுஞ் சோலைகள். வற்றாத குற்றாலங்கள். அந்த வகையில் 'குடும்பம்' என்று தினம் வந்தாலும் வந்தது, கொண்டாட்டமான கொண்டாட்டம்! வி.ஐ.பிக்கள் பலர் தங்கள் மனைவி மக்களுடன் போஸ் கொடுத்து, குடும்பம் ஒற்றுமையாக இருக்க வேண்டிய அவசியத்தை உபதேசித்தார்கள். (இரண்டு குடும்பம் வைத்திருப்பவர்களின் பக்கம் எந்த சேனலும் போகவில்லை) In life you need not look for trouble, just sit and wait என்று குடும்பத்தில் அடிபட்டவர்கள் சொல்வதை யார் கேட்கிறார்கள்?



எனினும், கே.டீ.வியில் சந்தோஷமான குடும்பங்களைக் காட்டும் திரைப்படக் காட்சிகள் இடம் பெற்றிருந்தன. 'பூவெல்லாம் உன் வாசம்' - அஜித், ஜோதிகா, 'வேதம்' - அர்ஜுன்; 'ஆனந்தம்' - ஸ்ரீவித்யா, மம்முட்டி, அப்பாஸ் வகையறா.

பாடல்களின் பின்னணியில் கும்பல் கும்பலான கூட்டத்தைப் பார்த்தபோதுதான் பயம் உண்டாயிற்று. இவ்வளவு பேருக்குச் சோறு போட்டுக் காப்பாற்றுவதென்றால் எந்தக் குடும்பத் தலைவனும் ஓட்டம் பிடிப்பான்.

**செ**ன்ற கால் நூற்றாண்டுக் காலத்தில் தமிழ் மக்களின் பக்தியுணர்வைத் தூண்டித் தொண்டு செய்த ஐந்து சான்றோர்களைக் குறிப்பிட்டால் நிச்சயம் அவர்களில் ஒருவராக சாண்டோ சின்னப்ப தேவர் இருப்பார். எப்படிப்பட்ட தெய்வ நம்பிக்கையைத் தன் படங்களின் மூலம் பரப்பினார் அந்த முருகனடிமை! அசலான திருவிழாக் கூட்டங்களையும், நிஜமான உற்சவங்களையும், செட் போடாத கோவில்களையும் அவர் காட்டிய மாதிரி யார் காட்டினார்கள்? A good man never dies என்பார்கள். தேவருக்கு மரணமில்லை.

'விண்' டீ.வியில் அவருடைய 'தெய்வம்' படத்தில் டி.எம்.எஸ்ஸும் சீர்காழியும் 'திருச்செந்தூரின் கடலோரத்தில்' என்று பாடும் காட்சியைக் கண்டபோது சிலிர்ப்பு ஏற்பட்டது. இறையுணர்வை வளர்க்கும் படங்களை எடுக்க ஏன் இன்று எல்லாரும் வெட்கப்படுகிறார்கள் என்ற எண்ணம் ஏற்பட்ட சமயம் -

'திருச்செந்தூர் முருகா!' என்ற அட்டகாசமான பாட்டு ராஜ் டிஜிட்டலில் கேட்டது. அட, பரவாயில்லையே என்ற சந்தோஷம் அற்பாயுளில் முடிந்தது. பிரசாந்த் அண்கோ 'தமிழ்' படத்தில் பாடுவது அது. அந்த முதல் வரியோடு சரி. மற்றதெல்லாம் கும்மாளம், கேலி!

பக்தியைப் பரப்பாவிட்டாலும் பரவாயில்லை. ஏன் தெய்வங்களின் பெயர்களை வைத்துக் கலாட்டா செய்ய வேண்டும்?

**'சித்தி'** அளவுக்கு இன்னும் புகழ் பெறவில்லை என்றாலும் 'அண்ணாமலை'யின் கதை சுவாரஸ்யமாகவே செல்கிறது.

ஒரு விஷயம்: 'சித்தர்' என்ற பாத்திரம் குறித்துக் கூத்தாடித் தத்துவங்கள் உதிர்ப்பது சரிதான். ஆனால், காஸ்டியூம் விஷயத்தில் புரட்சி பண்ணுவதாக நினைத்து அருவருப்பு ஊட்டுவது சகிக்கவில்லை. Eat to please thyself, but dress to please others என்று பெஞ்சமின் பிராங்க்ளின் சொன்னது இவர்கள் காதில் விழுவதாக. ○

# வாணியம்பாடி வழி காட்டுமா?

**வா**ணியம்பாடியில் போட்டியிடும் தி.மு.க வேட்பாளர் நாகூர் இ.எம். ஹனிபா, பாட்டு பாடியே வோட்டு கேட்கிறார். வாணியம்பாடி வாக்காளர்களில் கிட்டத்தட்ட 30 சதம் இருக்கும் இஸ்லாமியர்கள் கட்டுக் கோப்பாகத் திரண்டு வந்து இவருக்குத்தான் வோட்டு போடுவார்கள் என்பது கழகத்தினர் எதிர்பார்ப்பு. ஆனால் அது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. இடையே பல தடைக்கற்கள்.


• ஹனீபா

"ஹனிபா இந்த ஊர்க்காரர் இல்லை. அது அவருக்குப் பெரிய பலவீனம்" என்கிறார்கள் சில இஸ்லாமிய வாக்காளர்கள்.

"மண்ணின் மைந்தன்தான் போட்டியிட வேண்டும் என்ற கருத்தெல்லாம் இப்போது அடிபட்டு விட்டது. மதுரைக்காரர் வந்தவாசியில் போட்டியிட்டு வெற்றி பெறுகிறார். எனவே ஹனிபாவுக்கு இது பெரிய குறைபாடு என்று சொல்ல முடியாது" என்கிறார் தி.மு.க தேர்தல் வேலைகளை முன்னின்று கவனிக்கும் முன்னாள் அமைச்சர் துரைமுருகன்.

அவரது கவலை, இ.மு.கவினர் பணம் கொடுத்து புக் செய்த சில தனியார் வீடு மற்றும் தொழிற்சாலைகளின் சுவர்களைக்கூட ஆளும் கட்சி அடாவடித்தனமாக ஆக்ரமிப்பு செய்கிறது என்பதுதான்.

"நான் கழகத் தொண்டன்; கலைஞரின் தம்பி, அந்தத் தகுதியை மட்டும் வைத்துக்கொண்டு களத்தில் நிற்கிறேன். இஸ்லாமியர்களின் வோட்டுக்களை மட்டும் குறி வைத்து நிற்கவில்லை. ஆனால் கழகம் சிறுபான்மையினரின் பாதுகாப்பு கேடயம் என்பது தமிழகம் அறிந்த ஒன்றுதானே" என்கிறார் ஹனிபா.

கிட்டத்தட்ட எண்பதாயிரம் இஸ்லாமிய வாக்காளர்களில் பெரும்பகுதியினர் இந்த முறை கழகத்துக்குக் கை கொடுப்பார்கள் என்பது வாக்குப் பதிவுக்குப் பத்து நாட்களுக்கு முன்பு இருந்த நிலை. ஆனால் புரட்சித் தலைவர் அ.தி.மு.க என்ற அமைப்பின் சார்பாக போட்டியிடும் எஸ். ஹைதர் ஜஹான் என்ற பெண்மணி கணிசமான இஸ்லாமிய வாக்குகளைப் பெற்று விடுவாரோ என்ற கவலையும் கழகத்தில் இருக்கிறது.


• ஹைதர் ஜஹான்


• வடிவேல்

**அ**.தி.மு.க வேட்பாளர் வடிவேல் தொகுதிக்காரர். 1972 முதலே கட்சிக்காக உழைப்பவர். "அ.தி.மு.க என்பது மதங்களைக் கடந்து நிற்கின்ற கட்சி. மனிதநேயமே எங்கள் குறிக்கோள்" என்கிறார் வேட்பாளர் வடிவேல். ஆனால் அ.தி.மு.க, ஒறிந்து வாக்காளர்களை ஒன்றுபடுத்த விரும்புகிறதோ இல்லையோ, வாணியம்பாடியைப் பொறுத்தவரை நடுநிலை என்ற வேடத்தைக் கட்டியுள்ள


• ஹரூர் நவாஸ்

பா.ஜ.க, தனது பிரமுகர்கள் மூலம் திரைமறைவு வேலைகளை, அம்மாவுக்கு ஆதரவாகச் செய்யத் துவங்கிவிட்டது. ராம கோபாலன் அ.தி.மு.கவை வெளிப்படையாக ஆதரித்தே மேடையில் பேசியிருக்கிறார்!

ஆனால் அ.தி.மு.கவுக்கு விழக்கூடிய வாக்குகளைப் புதிய நீதிக்கட்சி சார்பாகப் போட்டியிடும் ஷகிலா தீர்த்தகிரி பிரித்து விடுவார் என்கிறார்கள். இவரும் வடிவேலைப் போன்று முதலியார் சமூகத்தைச் சேர்ந்தவர்.

அ.தி.மு.க தங்களை அம்போவென்று கைவிட்டதும் தேசிய லீக், ஹரூர் நவாஸ் என்பவரை வேட்பாளராக நிறுத்தி வைத்திருக்கிறது. இந்த நவாஸ், ஆம்பூர் நகரசபைத் தேர்தலில் ஒரு வார்டில் நின்று தோற்றவர்.

"இஸ்லாமிய வாக்குகளை மட்டும் நம்பி நிற்கவில்லை. ஆனால் தி.மு.க, அ.தி.மு.க இரண்டும் பா.ஜ.க.வுக்குத் துதி பாடுவதால் இஸ்லாமிய சமூகம் இந்தக் கட்சிகள் மீது கடுப்புடன் இருக்கிறது. எனவே இஸ்லாமியர்கள் இந்த இரண்டு கழகங்களையும் புறக்கணிப்பார்கள்" என்கிறார் நவாஸ்.

இப்படி அரசியல், சமுதாயப் பிரச்னைகள் கட்சிகளின் நிலைப்பாட்டை ஆட்டிப் படைக்க, வேறு பல பிரச்னைகளும், வாக்காளர்களின் முடிவைத் தீர்மானிக்கும். உதாரணமாக ஆம்பூர் நகர குடிநீர்ப் பிரச்னை, தொகுதியில் உள்ள தோல் தொழிற்சாலைகள் மூடப்பட்டு இருப்பது, பஸ் கட்டண உயர்வு என்று, மக்களால் பிரச்னைகள் பட்டியலிடப்படுகின்றன. எது எப்படியிருந்தாலும் வாணியம்பாடி மக்களின் தீர்ப்பு தமிழக அரசியல் காட்சியில் சில மாறுதல்களுக்கு வழி காட்டும் என்கிறார்கள்.

கட்டுரை, படங்கள்: **கௌசி**

# கல்கி



**VBC Jewellery**

*House of Vummidi*

• 78, G.N.Chetty Road, **Vani Mahal Circle,** (Opp. Hotel Residency), T.Nagar, Chennai - 600 017. ✆ : 8229556, 8229560

• 11-B, Nageswara Rao Road, **Panagal Park,** T.Nagar, Chennai - 600 017. ✆ : 4342407, 4346297

இணைந்து வழங்கும்

## புன்னகைப் போட்டி; பொன்நகைப் பரிசு!

ஐம்பத்தெட்டு நிறுவன ஊழியர்களுக்கு விருப்ப ஓய்வை அறிவித்திருக்கிறது தமிழக அரசு. காலி கஜானாவிலிருந்து இழப்பீடு தருவது எப்படி என்று யோசித்து, சிரிக்க வைக்கும்படி நாலு வரி எழுதுங்க பார்ப்போம்... இரண்டு சிறப்பான - ஸாரி சிரிப்பான யோசனைகள் தலா நான்கு கிராம் தங்கம் பரிசு பெறும். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**புன்னகைப் போட்டி - 15**

என்று குறிப்பிட்டு எழுதுங்கள்.
தபால் உறை அல்லது தபால் கார்டில், கீழே உள்ள கூப்பனை வெட்டி ஒட்டி அனுப்புங்கள்.
கடைசி தேதி : **3.6.2002**



**ஆசிரியர், கல்கி,**
47. ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 097.

அலுவலக அலுப்போடு 'அய்யோடா' என்று வீடு திரும்பிய சுந்தர், ஹேமாவின் 'நொய் நொய்' தாங்காமல், 'வாக் அவுட்' செய்ய, வோட்டு லிஸ்டில் பெயர் விடுபட்டுப் போன வாக்காளர் போல ஹேமா திகைத்துப்போய் நிற்க.. அந்த இடத்தில்தானே நம்ம தொடரும் நின்றது.

சின்ன விஷயம்தான்... 'வெற்றிகரமான ஏழாவது நாள்' என்று மல்டிகலர் போஸ்டர் ஒட்டக்கூடிய அளவுக்கு அது துன்

# துன்பியல் கலாசாரம்!



பியல் சமாசாரமாகிறது! அவள் கோபத்தையெல்லாம், சேலம் உருக்காலை பாத்திரங்களிடம் காட்ட, சுந்தரோ, காஷாயம், கமண்டலம் தேடாத சத்குரு ஸைலன்ஸானந்தா சுவாமிகள் ஆகிவிட்டான். அவனுடைய ரேட்டிங்கில் மனைவிக்குப் பத்து பாயிண்ட் குறைய, ஹேமாவின் ரேட்டிங்கிலோ, அவன் காணாமலே போய்விட, ஃபேமிலி கவுண்ட்டவுன் ஷோ படு சோகமயம்! பின்னணியில் ஷெனாய் இசை.

புடைவையா, நகையா, புது சினிமாவா? அப்படி என்ன ஆசைப்பட்டுச்சு அந்தப் பொண்ணு? இரண்டு மில்லி மீட்டர் புன்னகை, குந்துமணி அளவு பாராட்டு, ஒரு முழம் அன்பான பேச்சு...இதுக்குக் கூடவா செய்கூலி.... சேதாரம்? ஹேமா ஆதங்கப்பட்டதில் தப்பேயில்லைதான். ஆனால், ஆண்கள்

# 2 ஆதாம், ஏவாள் ஆதி தியரி

பற்றிய ஓர் அடிப்படை விஷயத்தைத் தெரிந்துகொண்டால், ஹேமா இந்த அளவுக்கு நொந்து போயிருக்கமாட்டாள்.

அதென்னது... ஆதாமின் ஆதி ரகசியம்!

ஆண்கள் இப்பவும், எப்பவும் குகை மனிதர்கள்தான். பர்ஸ் கம்ப்யூட்டர் வந்துவிட்ட இந்த நவீன யுகத்தில்கூட அவர்களுக்குப் பூர்வ ஜென்ம வாசனை போகவில்லை என்பதைப் பெண்கள் புரிந்துகொள்வார்களாக!

மனவியலார் சொல்வார்கள்: ஆதி மனுஷன் என்ன பண்ணுவான்? வேட்டையாடுவான். இறைச்சியைச் சுட்டுத் தின்றதும், குகைக்குள் போய்விடுவான். எப்போது துணை தேவையோ, அப்போது மட்டும் வெளியே வந்து பெண்ணை நாடுவான். அந்தக் காலத்து வேட்டைதான், இந்தக் காலத்து ஆபீஸ், தொழில். குகைக்குப் பதிலாகத்தான் டீ.வி, சினிமா, நண்பர்களுடன் அரட்டை என ஏதேதோ இருக்கிறதே!

குகை வாசனை மிச்சம் சொச்சம் கச்சம் கட்டிக்கொண்டு இன்னும் இருப்பதால் உடனடியாக மனைவியின் அலைவரிசைக்கு மாறாமலிருக்கிறான் என்பதை பெண்கள் புரிந்து கொள்ள முயற்சி செய்வதில் தப்பில்லை!

புருஷன்காரன் வந்ததும், பிய்த்துப் பிடுங்காமல், "போய் வா ராசா... எப்போ தோணுதோ அப்ப வாய்யா... நல்லா ரிலாக்ஸ் பண்ணிக்கய்யா" என்று சாலமன் பாப்பையா மாதிரி, நக்கலாகச் சிரித்துக்கொண்டே (மனசுக்குள்தான்!) அனுப்பி வையுங்க. அவங்களோட களைப்பு தீர்ந்ததும், மனைவியைத் தேடி வருவாங்க. அப்போ... உங்கக் கதையை வைச்சுக்கோங்க.

'குகை வாசனை', 'அன் வைண்டிங்

அனுராதா சேகர்

ஓவியம்: ராஜன்

டைம்'னு மனவியல் வல்லுநர்கள் சும்மா ஆண்களுக்குப் பரிந்து பேசுகிறார்களா? இல்லை, அதெல்லாம் நிஜந்தானா? டென்ஷன் கொண்டான், அலுவலக வீர மார்த்தாண்டான், ஹீரோ சுந்தரை, உணர்ச்சிக் களஞ்சியம், பாசப் பித்துக்குளி ஹேமா எப்படி வரவேற்றிருந்தால், அந்த மயக்கும் மாலைப் பொழுது மல்கோவா போல இனித்திருக்கும்? இதோ சின்ன கற்பனை:

டீ.வி முன் தொப்பென்று விழுகிறான் சுந்தர். சுடச்சுட டீ தந்து, சின்ன புன்னகையுடன் அவன் அருகே அமர்ந்து கொள்கிறாள் ஹேமா.



மனநோய் மருத்துவமனை. முதல் அறையிலிருந்த இளம் வாலிபன் ஒருவன், ''ரமா...ரமா...'' என்று அழுது புலம்பிக்கொண்டிருந்தான். பார்வையாளர் ஒருவர், டாக்டரிடம் விவரம் கேட்டார்.

''இவன் ரமா என்ற பெண்ணை உயிருக்கு உயிராகக் காதலிச்சான். ஆனா கல்யாணம் பண்ணிக்க முடியலை. அதான் சோகம் தாங்காமல் இப்படி ஆயிட்டான்'' என்றார்.

ஐந்தாம் அறையிலிருந்த இளைஞன் ஒருவனும், சுவரில் தலையை மோதிக்கொண்டு ''ரமா...ரமா'' என்று அழுதுகொண்டிருந்தான்.

''அடடா...! இவனும் அந்த ரமாவைக் காதலித்தானா?'' என்று பார்வையாளர் கேட்க,

''இல்லை... இவன் ரமாவைக் கல்யாணம் செய்துகொண்டான்'' என்றார் டாக்டர்!

''அடடா! உங்க கை சும்மாவே இருக்காதா? ஒழுங்கா ஒரு சேனல் போடுங்களேன்'' என்ற சிடுசிடுப்போ, ''ஏங்க 'மெட்டி ஒலி' ஆரம்பிச்சிருக்கும் பாவம். காயத்ரியை ரொம்பத்தான் கொடுமைப் படுத்தறாங்க.... அதைப் போடுங்க'' என்ற அன்பு மிரட்டலோ இல்லாமல், சுந்தர் பார்க்கும் சேனலை அவளும் ரசிக்கிறாள்.

அது 'ஹெச்.பி.ஓ', 'டி.என்.டி', 'நௌ' போன்ற புரியாத பாஷை பேசும் சேனலாகவே இருந்தாலும், நங்கநல்லூர் Vs பழவந்தாங்கல் கிரிக்கெட் மேட்சாகவே இருந்தாலும், ஹேமாவுக்கு ஆட்சேபனையில்லை.

அவன் அருந்தி முடித்ததும், கையோடு டீ கோப்பையை வாங்கிக்கொண்டு, சமையலறைக்குப் போய், தானுண்டு தன் வேலையுண்டு என்று அமைதியாக இருக்கிறாள்.

பதினைந்தே நிமிடங்களில், (சில சமயம் அரை மணி நேரம் கூட ஆகலாம்..) சுந்தர் தண்ணீர் குடிக்கும் சாக்கில் சமையலறைக்குள் நுழைகிறான்.

ஃபிரிஜ்ஜைத் திறந்து ஒரு மடக்கு ஐஸ் வாட்டர் குடித்துவிட்டு, ''இன்னிக்கு என்னாச்சு தெரியுமா?'' என்று ஆரம்பிக்க ஹேமா கைவேலையை விடாது, ''உம்...'' கொட்டுகிறாள் ஆர்வத்தோடு...

''அந்த ஜெயராமன் இல்லப்பா... அவன் விரல், ஃபேன்ல அடிபட்டுத் துண்டாயிடுச்சு...'' என்றோ,

''இன்னிக்கு ட்ரெயின் ரூட்லே பவர்கட்... பல்லாவரத்துலே ஒரு மணி நேரம் நிறுத்திட்டான்'' என்றோ... சுந்தர் ஆரம்பிக்க, ஹேமா, 'தன்யன் ஆனேன் ஸ்வாமி' போஸில் ஆர்வமுடன் கேட்கிறாள்.

அவன் எல்லா கதையும் பேசி முடிக்க, ''ஏங்க... புது நைட்டி நல்லா இருக்கா?''

''சூப்பரா இருக்கு... ஜோதிகா மாதிரியே இருக்கே!''

''நிஜமாவா?''

''என்ன... கொஞ்சம் ஆல்டரேஷன் பண்ணணும்...''

''நைட்டியையா?''

''இல்லை உன்னை...''

ஹேமா செல்லக் கோபத்தோடு, அவனைத் தள்ளிவிட... விடுங்க... அவுங்க ஏதோ பேசிக்கிட்டுப் போகட்டும். நமக்கென்ன!

சரி, குகை மனிதனை ஹேமா ஏற்றது போல் பாசப் பித்துக்குளியை சுந்தர் புரிந்துகொள்வானா...?

இன்னொரு தம்பதி நம்பக்கிட்டே வசமா மாட்டியிருக்காங்க. வசந்தி - மோகன்... அடுத்தவாரம், அவங்களைக் கேட்போமே!

## புக்பேங்க்

### போர்ட்ரெய்ட் & ஃபங்ஷன் ஃபோட்டோ கிராஃபி



போர்ட்ரெய்ட் மற்றும் நிகழ்ச்சிகளில் புகைப்படம் எடுக்க கையாளப்படும் டெக்னிக்குகள் அழகுணர்வு நுணுக்கங்களைப் பற்றி, பல்வேறு விளம்பரங்களுக்குப் புகைப்படம் எடுத்துள்ள இக்பால் கா.முகமது இதில் விளக்கியுள்ளார். அழகான வடிவமைப்புடனும் விரிவான விளக்கங்களுடன் தமிழிலும் ஆங்கிலத்திலும் வந்திருக்கிறது இப்புத்தகம்.

*லைட் கோல்ட்ரன் பப்ளிகேஷன்ஸ், 76, **AECS** லே அவுட், II ஸ்டேஜ், 15வது கிராஸ், சஞ்சய் நகர், பெங்களூர் - 94. விலை ரூ.190*

### தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் (1917-1964) - என். ராமகிருஷ்ணன்

இந்திய சுதந்திர போராட்டத்துக்கு கம்யூனிஸ்ட் இயக்கத்தின் பங்கு குறிப்பிடத்தக்கது. பிரிட்டிஷ் ஆட்சியில் பத்தாண்டுகளுக்கும் மேலாக தடை செய்யப்பட்டிருந்த இவ்வியக்கத்தின் தோற்றம் வளர்ச்சி பற்றி பேசுகிறது புத்தகம். கம்யூனிஸ்ட்களாலேயே மறக்கப்பட்ட பல முக்கியத் தலைவர்கள் பற்றிய செய்திகள் இதில் இடம் பெற்றுள்ளன. ஹைதராபாத்தில் நல்ல பதவியிலிருந்து, அதை விட்டுட்டு இயக்கத்துக்காக தமிழகம் வந்து தமிழ் படித்து அரும்பாடுபட்ட ஆர்.கே. கண்ணன் போன்றவர்களைப் பற்றிய செய்திகள் துணுக்குகள் போல இருக்கின்றன. இன்னும் விரிவாக வந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

*வைகை வெளியீட்டகம், 6/16, புறவழிச்சாலை, மதுரை - 625 018. விலை ரூ.200*

### கடலின் மக்கள் - வலம்புரிஜான்




கடலோர கிராமத்து மக்களின் வாழ்க்கைச் சிக்கல்களை மையமாக கொண்டு எழுதப்பட்டுள்ள நாவல். ஆசிரியரின் வார்த்தை விளையாடலும் மண்வாசனையும் இனிமையாக இருக்கின்றன.

*சந்தனம், 32, ரோசாரி ஆலய வீதி, சாந்தோம், சென்னை - 4. விலை ரூ.100*

### திருக்குர்ஆன்

இஸ்லாமியர்களின் புனித நூலான குர்ஆனின் கையடக்கப் பிரதி. எளிய தமிழில் எழுதப்பட்டுள்ள இதில் இஸ்லாமிய மரபுச் சொற்களுக்குப் பொருள் அறிய கலை சொல் அகராதியும் இடம் பெற்றுள்ளது. 1245 பக்கங்கள் கொண்ட இதை மௌலவிகள் குத்புத்தின் அஹ்மத் பாகவி; அப்துர் ரவூஃப் பாகவி மொழி பெயர்த்துள்ளனர்.




*இஸ்லாமிய நிறுவனம் ட்ரஸ்ட், ஐஎஃபடி காம்ப்ளக்ஸ், 138, பெரம்பூர் நெடுஞ்சாலை, சென்னை - 12. விலை ரூ.100*

**- கார்க்கி**




# மனதில் வீசுதே மணம்!

❖ ''பரமாச்சாரியாராக போப்'' படித்தேன். வாணவராயர் சப்தம் போடாமல் இந்து மதத்தின் பெருமையை உலகம் அறியச் செய்து வந்திருக்கிறார். "உலகமே ஒரு குடும்பம்" என்ற இந்து மதத்தின் உன்னதத்தை குஜராத் மக்கள் உணராததன் விளைவுதான் பழிக்குப்பழி என்று சகோதரச் சண்டைக்கு வழிவகுத்திருக்கிறது.

பாளையங்கோட்டை,
திசு. பாலசுப்பிரமணியன்.

❖ வில்வத்தின் மருத்துவப் பயன்களை உணர்த்திய 'மூலிகை கேலரி' தொடரின் மணம் என்றும்... என்றும்... மனத்தில் வீசும்!

போடிநாயக்கனூர்,
எஸ்.எம்.பாலசுப்ரமணியன்.

❖ ஆங்கில அறிவு பற்றி இரு முதல்வர்கள் பேசியது குறித்து தராசாரின் பதில் அருமை! இரு சாராரையும் இடித்துரைத்த விதம் இதம்!

அரவக்குறிச்சிப்பட்டி,
எம். அசோக்ராஜா

❖ மோடி என்ற ஒரு தனி மனிதரைக் காப்பாற்றுவதற்காக, வாஜ்பாய் தன்னைப் பற்றிய சித்திரத்தைச் சிதைத்துக் கொண்டுவிட்டார். பதவி பெரிதெனும் மனோபாவம் வந்துவிட்டால் அரசியல்வாதிகள் அனைவரும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறார்கள்.

திருநள்ளாறு, இ.ஜே. தீன்

❖ நடிகை தேவிகாவின் மரணத்தையொட்டிய காட்சிகளைத் தொலைக்காட்சியில் பார்த்தபோது எங்கள் அனைவர் மனத்திலும் எழுந்த சந்தேகத்தை ரிமோட் பகுதி பிரதிபலித்தது.

திருப்பரங்குன்றம்,
டி.கே. சுப்பிரமணியன்

❖ குஜராத் மோடி விஷயத்தில் எதிர்க்கட்சிகள் மட்டுமின்றிக் கூட்டணிக் கட்சிகளும் கூட கண்டனத் தீர்மானத்தை ஆதரித்துப் பேசியிருப்பது தேசிய ஜனநாயக கூட்டணிக்குச் சிறந்த உதாரணம்! அதுவே ஆரோக்கியமான அரசியலுக்கு அஸ்திவாரமாகத் திகழும் என்பதில் சந்தேகமில்லை. பிரதமர் வாஜ்பாய் இப்படி குஜராத் விவகாரத்தில் இன்னமும் ''மோடிமஸ்தானாக'' செயல்படுவது அவரது வரலாற்று சாதனைகளுக்கு நிச்சயம் ஒரு கறுப்புப் புள்ளி கறையாக படிந்துவிடும்.

பள்ளிபாளையம்,
கே. ரமேஷ்

❖ இலக்கிய வீதி இனியவனின் பேட்டி படித்தேன். அந்த சரணாலயத்திற்கு வந்த பல இலக்கியப் பறவைகளைக் கண்டு, ஒரு சில பறவைகளுடன் பழகும் பாக்கியம் பெற்றவர்களில் நானும் ஒருவன் என்ற வகையில் மகிழ்ச்சியும், பெருமிதமும் அடைந்து சிறகடித்துப் பறந்தேன்!

ஒழவெட்டி,
க. இராமச்சந்திரன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)



உ

ஸ்ரீ ராமஜெயம்

ஸ்ரீ விகனஸ மஹா குருவே நம :



# ஸ்ரீ சுதர்ஸன ஜெயந்தியை முன்னிட்டு

ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்யம் (ஒரு லக்ஷம் ஆவ்ருத்தி)

(17.6.2002 திங்கள் முதல் 20.6.2002 வியாழன் வரை)

**ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்யம் நடைபெறும் இடம் :**

**டி.வி.ஆர். சுப்பி செட்டி வசந்த மண்டபம்**

எண்:14, மேற்கு சித்திரகுளம் தெரு, மைலாப்பூர், சென்னை – 600 004.

போன்: 4950453

கட்டணம் ரூ.100/- ரூ. 250/- ரூ.500/- ரூ.1000/ ரூ.5000/-

பிரதிதினம் காலை 7 மணி முதல் பகல் 12 மணிவரையிலும் மாலை 5.00 மணி முதல் இரவு 9 மணி வரை **மஹாயக்ஞ்யம்** நடைபெறும்.

20.6.2002 **ஸ்ரீ சுதர்ஸன ஜெயந்தி** அன்று பகல் 12.00 மணிக்கு மஹாபூர்ணாஹுதி நடைபெறும்.

குறிப்பு: 1) ரூ.100/- செலுத்தும் பக்தர்களுக்கு **ஸ்ரீ சுதர்ஸன செப்பு டாலர்** வழங்கப்படும்.

2. ரூ. 250/- செலுத்தும் பக்தர்களுக்கு **ஸ்ரீ சுதர்ஸன யந்திரம்** மற்றும் **ஸ்ரீ சுதர்ஸன செப்பு டாலர்** வழங்கப்படும்.

3. ரூ. 500/- செலுத்தும் பக்தர்களுக்கு **ஸ்ரீ சுதர்ஸன யந்திரம், ஸ்ரீ சுதர்ஸன ரக்ஷை** வைத்து வெள்ளி தாயத்து வழங்கப்படும்.

4. ரூ. 1000/- செலுத்தும் பக்தர்களுக்கு **ஸ்ரீ சுதர்ஸன யந்திரம், ஸ்ரீ சுதர்ஸன ரக்ஷை** வைத்து வெள்ளி தாயத்து மற்றும் வெள்ளி டாலர் வழங்கப்படும்.

5. ரூ. 5000/- செலுத்தும் பக்தர்களுக்கு யாக சாலை உள் விசேஷ சங்கல்பமும் **ஸ்ரீ மஹா சுதர்ஸன யந்திரமும்** மற்றும் **ஸ்ரீ சுதர்ஸன ரக்ஷை வைத்த 1 கிராம் தங்க தாயத்தும்** பூர்ணாஹுதி முடிந்தவுடன் ஒரு தம்பதிகளுக்கு ஸ்ரீ சுதர்ஸன கலச தீர்த்தம் சேர்க்கப்படும். ஒரு கலசமும் கொடுக்கப்படும்.

குறிப்பு : மேற்கண்டவை அனைத்தும் ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்ய பூஜையில் வைத்து கொடுக்கப்படும். இப் பூஜையில் கலந்து கொள்ளும் பக்தர்கள் அனைத்து நபர்களுக்கும் தனித்தனியாக சங்கல்பம், ரக்ஷாபந்தனம், ஸ்ரீ சுதர்ஸன படம் முதலியவை கிடைக்கும்.

இங்ஙனம்

**ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்ய கமிட்டி,**

**S.** ஸ்ரீரங்கராஜ பட்டாசாரியார், **T.** சம்பத்குமார், **V.** நந்தகுமார், **M.** பிரவீன்குமார், **T.** சுதர்ஸன்.

**M.O.** அல்லது **D.D.** அனுப்பும் விலாசம் மற்றும் டிக்கெட் கிடைக்கும் இடம்

ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்ய கமிட்டி,
ஸ்ரீ ரங்கராஜபட்டாசாரியார்,
டி.வி.ஆர். சுப்பி செட்டி வசந்த மண்டபம்,
நெ. 14, மேற்கு சித்திரகுளம் தெரு, மைலாப்பூர்,
சென்னை - 600 004. ஃபோன் : 495 0453

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered
No. TN / Chief PMG-141 / 2002 * Licensed to post without prepayment under PMG's
Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka.